# மிருகங்களின் பண்ணை



ஜார்ஜ் ஆர்வெல்

தமிழில்..

க. நா. சுப்பிரமணியம்



# மிருகங்கள் பண்ணை



ஜார்ஜ் ஆர்வெல்

தமிழில்

க. நா. சுப்ரமணியம்



**விலை : ரூ.75 /-**

❑ மிருகங்கள் பண்ணை ❑ மொழிபெயர்ப்பு நாவல் ❑ மறு பதிப்பு 2006 ❑ பக்கம் 136 ❑ வெளியீடு: அம்ருதா பதிப்பகம், எண்-5, 5வது தெரு, எஸ்.எஸ். அவென்யூ, சக்தி நகர், போரூர், சென்னை - 600 116 ❑ தொலைபேசி : 91-44-2252 2277 ❑ மின்னஞ்சல் : amrudhapathippagam@yahoo.co.in ❑ ஒளி அச்சு: ஸ்ரீ விக்னேஷ் பிரிண்ட்ஸ், சென்னை-83. ❑ முன்னட்டை ஓவியம் : ரங்கராஜன் ❑ அட்டை வடிவமைப்பு : எஸ். சுகுமாரன் ❑ அச்சிட்டோர்: ஸ்ரீ விக்னேஷ் பிரிண்ட்ஸ், சென்னை-83.




**Price : Rs. 75/-**

❑ Mirugangal Pannai ❑ Novel ❑ Re Print: 2006 ❑ Size : Demmy 1 x 8 Pages : 136 ❑ Published by Amrudha Pathippagam, No. 5, 5th Street, S.S. Avenue, Shakthi Nagar, Porur, Chennai-600116, Ph: 91-44-22522277 ❑ Email : amrudhapathippagam@yahoo.co.in ❑ D.T.P. Execution at : Shri Vignesh Prints, Chennai-83 ❑ Wrapper Design : S.Sukumaran ❑ Printed at : Shri V[illegible]sh Prints, Chennai-83

## முன்னுரை

ஜார்ஜ் ஆர்வெல் என்பவரின் இயற்பெயர் எரிக் ப்ளேர் என்பதாகும். அவர் இந்தியாவில் 1903–ல் பிறந்தார். அவர் வாழ்க்கையில் பலதரப்பட்ட அனுபவங்களை அடைந்து. அவற்றையெல்லாம் நூல்களாக எழுதிவைத்தார். இந்தியப் போலீஸில் அதிகாரியாக, பர்மாவில் 1922 முதல் 1928 வரை வேலை பார்த்தார். பிறகு இரண்டு வருஷங்கள் பாரிஸ் நகரில் வசித்தார். இங்கிலாந்து திரும்பி சிறிதுகாலம் பள்ளிக்கூட உபாத்தியாயராகச் சேவை செய்தார். கொஞ்சநாள் ஒரு புஸ்தகக் கடையில் வேலை பார்த்தார். 1937–ல் குடியரசுக் கட்சியில் சேர்ந்து ஸ்பெயின் உள்நாட்டு யுத்தத்தில் கலந்துகொண்டார். காயமடைந்து ஊர் திரும்பினார். இரண்டாவது உலக யுத்தத்தில் இங்கிலாந்தின் உள்நாட்டுக் காவல்படையில் சேவை செய்தார். கொஞ்சநாள் பி. பி. சி. ரேடியோ நிலையத்தில் வேலைசெய்தார். 1943 முதல் பத்திரிகைகளுக்கு எழுதத் தொடங்கினார். தொடர்ந்து பல வருஷங்கள் 'என்னிஷ்டப்படி' என்று ஒரு இலக்கிய அரசியல் கட்டுரையை எழுதிவந்தார் ட்ரிப்யூன் என்கிற தினசரியில். பிரான்சிலும் விசேஷபத்திரிகை நிருபராகப் பல வருஷங்கள் சுற்றினார். ஒரு வருஷம் நோய்வாய்ப்பட்டிருந்து விட்டு அவர் ஜனவரி 1950– ஆண்டு உயிர் துறந்தார்.

அவருடைய மூத்த மனைவி 1945–ல் இறந்தாள். தான் சாவதற்குக் கொஞ்சநாள் முன்னதாக ஜார்ஜ் ஆர்வெல் இரண்டாவது மனைவியாக ஒரு இலக்கியாசிரியை (ஸோனியா ப்ரௌனல்)ஐ மணந்தார்.

அவர் எழுதிய நூல்களில் சிறப்பாகச் சொல்ல வேண்டியது பின் வருபவை–லண்டனிலும் பாரிஸிலும் காசில்லாதிருப்பது; ''பர்மா நாய்கள்''; ''வீகாபியர் போகும் வழி!'' ''கடலோனியாவுக்கு வணக்கம்''; 'திமிங்கிலத்துக்குள்ளே' 1946–ல் வெளி வந்த ''மிருகங்கள் பண்ணை'' பிரமாதமாக விற்பனையாயிற்று. ஆங்கிலத்தில் மட்டும் இது பத்து லக்ஷம்

பிரதிகளுக்கு அதிகமாக விற்பனையாகி இருக்கிறது: சற்றேறக் குறைய 30 பாஷைகளில் இது இன்றுவரை மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. கடைசியாக அவர் எழுதிய நாவல் 1984; 1949–ல் வெளியான இந்த நாவலும் பிரமாதமான புகழை அவருக்குத் தேடித் தந்தது. இந்த இரண்டு நாவல்களையும் சாதாரணமாக ருஷ்யாவுக்கு எதிராகப் பிரச்சாரம் செய்யும் நாவல்கள் என்றுதான் சொல்வது வழக்கம்.

ஜார்ஜ் ஆர்வெல் பிரசார இலக்கியத்திலே சிறிதும் நம்பிக்கை யற்றவர். ஒரு தலைமுறையின் மனச் சாட்சி என்று வேண்டுமானால் அவரைச் சொல்லலாம். அந்த மனச்சாட்சி வேகம் காரணமாகவேதான் அவரால் மிருகங்கள் பண்ணையையும் 1984 ஐயும் எழுத முடிந்தது. தனக்கென்று ஆத்மீகமாக ஏற்பட்ட ஒரு பிரச்சினைக்குக் கலை உருவம் கொடுக்க முற்பட்ட ஆர்வெல் மிகவும் அழகான மிருகங்களின் பண்ணையையும், மிகவும் பயங்கரமான 1984 ஐயும் சிருஷ்டித்து விட்டார்.

மிருகங்களின் பண்ணையை கம்யூனிஸ்டு எதிர்ப் பிரச்சாரம் என்று சொல்வதைவிட அரசியல் வேகம் எந்த இடத்தில் கொண்டுபோய் மிருகங்களை (அதாவது மனிதர்களை) நிறுத்தும் என்று சொல்கிற ஒரு கேலிச் சித்திரமாகச் சொல்லலாம். மிருகங்களைக் குழந்தைகளின் மனத்தையும் கவரக் கூடிய முகங்களாகச் சித்தரித்த பெருமை அவருடையது. கம்யூனிஸ்டு பிரச்சாரமும் அலை ஓய்ந்து அடங்கிய பின்னும் கூட மிருகங்கள்பண்ணை மக்கள் மனதைக் கவரும் என்பதில் சந்தேகத்துக்கிடமே இல்லை. ஏனெனில் எல்லாவிதங்களிலும் நித்யமான ஒரு தத்துவத்தையே ஆர்வெல் இந்த நூலில் சித்தரிக்க முயன்றிருக்கிறார். மனிதனோ மிருகமோ அரசியல் விளையாட்டை இன்றுள்ள ரீதிகளில் நடத்திச் செல்கிறவரையில் மிருகங்கள் பண்ணையின் முடிவுகள் தவிர்க்க முடியாதவை என்று வற்புறுத்துகிறார் ஆசிரியர்.

பாடம் எதுவும் படித்துக்கொள்ள விரும்பாதவர்களும் கூட, மிருகங்கள் பண்ணையைக் கதையாக அறிந்து கொள்ளலாம். இதில் வருகிற கதா பாத்திரங்களை யாரும் அவ்வளவு சுலபமாக மறந்துவிட முடியாது. மோஸஸ் முதல் பில்கிங்டன் வரையில் எல்லோரையுமே நமக்குப் பூரணமாக அறிமுகம் செய்துவைத்திருக்கிறார் ஆசிரியர். கலையையும், அழகையும் காணும் இடத்தில் அனுபவிக்க வேண்டியதுதானே வாசகர் பொறுப்பு?

**க. நா. சுப்ரமணியம்.**

# 1

பெரிய பண்ணையின் சொந்தக்காரனான மிஸ்டர் ஜோன்ஸ், இரவு கோழிக்குடில்களின் கதவுகளை யெல்லாம் பார்த்து மூடிவிட்டான். ஆனால் குடித்துவிட்டு நிதானம் தவறியிருந்த அவன் கதவுகளிலிருந்த சிறு சாளரங்களை மூடவேண்டும் என்பதை மறந்துவிட்டான். அவன் கையிலிருந்த லாந்தரின் வெளிச்ச வட்டம் அங்கும் இங்கும் ஆட, அவனும் ஆடி அசைந்துகொண்டு பின் முற்றத்தைக் கடந்தான். பின் கதவண்டை கால் செருப்புகளை விட்டுவிட்டு, கடைசித் தடவையாக உக்கிராணத்தி லிருந்த பீப்பாயிலிருந்த ஒரு கோப்பை பீரை எடுத்துக் குடித்துவிட்டு, மேலே படுக்கச் சென்றான். படுக்கையிலே மிஸ்ஸிஸ் ஜோன்ஸ் படுத்துக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தாள்.

படுக்கை யறையில் விளக்கை அனைத்தவுடனேயே பண்ணை முழுவதும் ஒரு சலசலப்பும் ஒரு முணுமுணுப்பும் ஏற்பட்டன. பகலிலேயே பண்ணையிலுள்ள மிருகங்களுக்கெல்லாம் விஷயம் அறிவிக்கப்பட்டு விட்டது; கிழட்டு 'மேஜர்' என்கிற பரிசு பெற்ற நடுத்தர வெள்ளைப் பன்றிக் கடா முந்திய இரவு ஒரு விநோதமான கனவு கண்டது என்றும் பகலிலேயே பண்ணையிலிருந்த மிருகங்களுக்கெல்லாம் அறிவிக்கப்பட்டிருந்தது. மிஸ்டர் ஜோன்ஸ் போய்ப் படுத்துறங்கியபின் மிருகங்கள் எல்லாம் பெரிய கொட்டிலில் சந்திப்பது என்று ஏற்பாடாகியிருந்தது. 'வில்லிங்டன் அழகு' என்கிற பெயரில் பரிசுபெற்ற பன்றிக் கடாவைப் பொதுவாக எல்லா மிருகங்களுமே 'கிழட்டு மேஜர்' என்று கூப்பிடுவதுதான் வழக்கம். பண்ணையிலே மற்ற மிருகங்களிடையே அதற்கு மதிப்பு அதிகம் உண்டு. அது சொல்வதைக் கேட்பதற்காக மிருகங்கள் எல்லாம் ஒருமணி நேரத் தூக்கத்தை வீணாக்கவும் தயாராக இருந்தன.

பெரிய கொட்டிலில் ஓர் ஓரத்தில்,மேடை போலச் சற்று உயர்ந்த இடத்திலே, மேலே உத்திரத்திலிருந்து தொங்கிக் கொண்டிருந்த லாந்தர் வெளிச்சத்திலே, கொஞ்சம் வைக்கோலைப் பரப்பிக்கொண்டு அதன்மேல் படுத்திருந்தது கிழட்டு மேஜர். அதற்கு வயது பன்னிரண்டாகிவிட்டது. இப்பொழுது கொஞ்ச நாட்களாக அது பருக்கவும் தொடங்கிவிட்டது. ஆனால் அது பார்ப்பதற்கு இன்னும் கம்பீரமாகத் தான் இருந்தது. அதன் பற்கள் என்றும் வெட்டப்படாமல் வளர்ந்திருந்தன. எனினும், அது பார்ப்பதற்கு அறிவும், கருணையும் உள்ளது போலத் தோன்றியது. சீக்கிரமே மற்ற மிருகங்களும் வந்து சேரத்தொடங்கின. அவரவர்களுக்குரியபடி, சௌகரியமாக, கொட்டிலில் இடம்பார்த்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டன. முடிவில் வந்தவை அந்த மூன்று நாய்கள்தான்– அவற்றின் பெயர்கள் ப்ளுபெல், ஜெஸ்ஸி, பிஞ்சர். பிறகு வந்த பன்றிகள் மேடைக்குப் பக்கத்தில் விரிந்திருந்த வைக்கோலில் படுத்துக்கொண்டன. கோழிகள் ஜன்னல்படிகளில் தொத்திக்கொண்டன. புறாக்கள் மேல்கூரை விட்டங்கள் வரை பறந்து சென்று, இடம்பார்த்துக்கொண்டன. ஆடுகளும், மாடுகளும் அசை போட்டுக்கொண்டே, பன்றிகளுக்குப் பின்னால் படுத்துக் கொண்டன. வண்டி இழுக்கும் குதிரைகள் இரண்டும் – அவற்றில் ஒன்றின் பெயர் பாக்ஸர், மற்றொன்றின் பெயர் க்ளோவர் – மெதுவாக நடந்து சேர்ந்தே உள்ளே வந்தன; ஜாக்கிரதையாக அடி எடுத்து வைத்து வந்தன.

வைக்கோலில் மறைந்திருக்கும் எந்தச் சிறிய ஜந்துவின் மேலாவது, பெரிய மயிர் அடர்ந்திருந்த தங்கள் கால்களை வைத்துவிட்டால் அந்த ஜந்துக்கள் நசுங்கிவிடுமே என்று அவை பயந்தவையாக ஜாக்கிரதையாக வந்தன. க்ளோவர் என்பது ஒரு கொழுத்த பெண் குதிரை; நாலாவது குட்டிபோட்டபின் அது பருக்க ஆரம்பித்துவிட்டது; அதற்குப் பிறகு அதன் அழகு போய்விட்டது. பாக்ஸர் என்பது ஒரு பிரும்மாண்டமான மிருகம்; சற்றேறக் குறைய பதினெட்டு சாண் உயரம் இருந்தது அது; இரண்டு குதிரைகளுக்குள்ள பலம் அதற்கிருந்தது என்று சொல்லலாம். முகத்தில், மூக்குவரையில் நீண்டிருந்த ஒரு வெள்ளைக்கோடு அதற்கு ஒரு அசட்டுக் களையைத் தந்தது. உண்மையில் அப்படியொன்றும் அறிவுள்ள பிராணியல்ல அது. ஆனால் அதனுடைய நேர்மையான குண விசேஷங்களுக்காகவும், அசாதாரண வேலை செய்யும் திறனுக்காகவும் அதனிடம் எல்லோருக்கும் அளவுகடந்த மதிப்பு உண்டு. குதிரைகளுக்குப் பின்னால் வந்தது முரியல் என்கிற வெள்ளாடு. அதனுடன் பெஞ்சமின் என்கிற கழுதையும் வந்தது. பண்ணையிலே அதிக வயதான மிருகம் பெஞ்சமின்தான்; அதிகக் கோபம்வரும் அதற்கு. அதிகமாகப் பேசுவதில்லை அது; பேசினாலும் ஏதாவது கசப்பாகக் கிண்டலாகத் தான் பேசும். உதாரணமாக அது சொல்கிற வாக்கியங்களில் இது ஒன்று; ''ஈக்களை விரட்டுவதற்கே கடவுள் எனக்கு ஒரு வாலைத் தந்திருக்கிறார்; ஆனால் என் அபிப்பிராயத்தைக் கேட்டால், வாலும் வேண்டாம், ஈக்களும் வேண்டாம் என்றுதான் சொல்வேன்'' என்று அது அடிக்கடி சொல்லும். அது பண்ணையிலிருந்த மற்ற மிருகங்களைப்போல அல்ல; அதற்குச் சிரிப்பென்பதே வராது. ''ஏன் நீ சிரிப்பதில்லை?'' என்று யாராவது கேட்டால், ''சிரிப்பதற்கு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை'' என்று அது சொல்லிவிடும். அப்படியிருந்தும் அதற்கு பாக்ஸரிடம் எல்லையற்ற விசுவாசம் – ஆனால் வாயைத் திறந்து அது இதை ஒப்புக்கொண்டு விடாது. வழக்கமாக ஞாயிற்றுக்கிழமைகளில், பழத்தோட்டத்துக்கப்பால் உள்ள வயலில் சேர்ந்து மேயப்போகும்: பக்கத்தில் பக்கத்தில் நாள் பூராவும் மேய்ந்து கொண்டிருந்தாலும், அவை இரண்டும் ஒரு வார்த்தையும் பேசவே பேசாது.

இரண்டு குதிரைகளும் வந்து படுத்துக் கொண்டவுடனே தாயை சமீபத்தில் இழந்துவிட்ட வாத்துக் குஞ்சுகள் சில ஒன்றன் பின் ஒன்றாக மெதுவாக 'சீப்' 'சீப்'பென்று கத்திக்கொண்டு. யார் காலிலும் பட்டு நசுங்கி விடாமல் இருப்பதற்காக நல்ல இடமாகத் தேடின. தன் முன்னங்கால்களை

நீட்டி அந்த வாத்துக் குஞ்சுகளுக்கு அணைப்பாகக் க்ளோவர் சுவர் வைத்துத் தந்தது. வாத்துக் குஞ்சுகள் ஒன்றன் மேல் ஒன்று விழுந்தடித்துக் கொண்டு படுத்து உடனே உறங்கியும் விட்டன. கடைசி நிமிஷத்தில் வந்தது, அசட்டு அழகி மாலி. சிறிய அழகிய வெண்மையான குதிரைக் குட்டி அது. மிஸ்டர் ஜோன்ஸின் ரேக்ளா வண்டியை இழுக்கிற குட்டி அது. அது நடை போட்டு வந்ததைப் பார்த்தால் ஏதோ நாட்டிய மாடுவது போல இருந்தது. ஒரு சர்க்கரைக் கட்டியைச் சப்பிக்கொண்டே உள்ளே வந்தது. முன்வரிசைக் கருகாமையில் ஒரு இடத்தைத் தேடிக் கொண்டது மாலி. உடனேயே தன்னுடைய அழகிய வெண்மையான பிடரிமயிரைச் சிலிர்த்துவிட்டுக் கொண்டது. அதில் பின்னியிருந்த சிவப்பு ரிப்பன்களை மற்றவர்கள் கவனிக்கிறார்களா என்று கடைக் கண்ணால் கவனித்துக் கொண்டது. அதற்குப் பிறகு, கடைசியாக வந்தது பூனை. வழக்கம் போல கத கதப்பான இடமாகப் பார்த்துத் தேடிக் கொண்டது. பாக்ஸருக்கும், க்ளோவருக்கும் இடையில் புகுந்து பதுங்கிக் கொண்டது. திருப்தியுடன் 'பர்பர்' என்று சொல்லிக்கொண்டே மேஜரின் பேச்சில் ஒரு வார்த்தையைக்கூடக் காதில் வாங்காமல் உட்கார்ந்திருந்தது அது.

இப்பொழுது எல்லா மிருகங்களும் வந்து சேர்ந்து விட்டன. மோஸஸ் என்கிற வளர்ப்புக் காக்காயைத் தவிரப் பண்ணை மிருகங்கள் எல்லாம் வந்து சேர்ந்துவிட்டன. மோஸஸ் புழக்கடைக் கதவுக்குப் பின்னாலிருந்த தன் கூண்டில் தூங்கிக்கொண்டிருக்கும்! எல்லா மிருகங்களும் வந்து சௌகரியமாக அமர்ந்து கொண்டு, கவனமாகக் கேட்கத் தயாராகிவிட்டன என்று கண்டதும், மேஜர் பன்றி தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேசத் தொடங்கிற்று:

“தோழர்களே! நேற்றிரவு நான் கண்ட அதிசயமான கனவு பற்றி நீங்கள் ஏற்கெனவே கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆனால் அந்தக் கனவைப் பற்றி நான் பின்னர் சொல்கிறேன். முதலில் நான் சொல்ல வேண்டியது வேறு ஒரு விஷயம். தோழர்களே! உங்களுடன் நான் இன்னும் அதிக நாள் தங்கியிருக்க மாட்டேன் என்று எண்ணுகிறேன். நான் சாவதற்கு முன், நான் சேமித்து அறிந்து கொண்ட அறிவை உங்களுக்குப் பகிர்ந்தளிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அது என் கடமை என்றும் எண்ணுகிறேன். நான் அதிக காலம் வாழ்ந்துவிட்டேன். என் அறையில் நான் தனியே படுத்துக் கிடக்கும்போது பல விஷயங்களையும் பற்றிச் சிந்திக்க எனக்கு நிறையவே நேரம் இருந்திருக்கிறது. உலகில் உயிர் வாழ்கிற எந்த மிருகத்துக்கும் உள்ள அறிவுக்குச் சமமான அறிவு எனக்கும் உண்டு என்று நான் சொல்லிக்

கொள்ளலாம். பூமியில் வாழ்வு என்பதன் அர்த்தம், சுபாவம் இரண்டையும் சரிவரப் புரிந்து கொள்ள எனக்குப் போதுமான அனுபவம் இருக்கிறது. பேச விரும்புகிறேன்.

இப்போது, தோழர்களே, நான் கேட்கிறேன். நமது இந்த வாழ்க்கையின் தரமும் தன்மையும் எப்படிப்பட்டவை? நேர்முகமாக இந்தக் கேள்வியை நோக்குவோம். நமது வாழ்க்கை துயரம் நிறைந்ததாகவும், ஓயாத வேலை நிரம்பியதாகவும், குறுகியதாகவும் இருக்கிறது. நாம் பிறந்தது முதல், உயிர் வைத்துக் கொள்வதற்குப் போதுமானதாக மட்டுமே உணவு தரப்படுகிறது நமக்கு. நம்மில் வேலை செய்வதற்குத் தெம்புள்ளவர்களைக் கட்டாயப்படுத்திக் கடைசிவரையில், தெம்புள்ளவரையில், நம்மை வேலை வாங்குகிறார்கள். நம்முடைய பலம் குன்றி நம்மால் உபயோகம் எதுவும் இல்லை என்று தீர்மானமானவுடனேயே நம்மைக் கருணையேயில்லாமல் கொன்றும் விடுகிறார்கள். என்ன பயங்கரமான கொடுமை இது! இங்கிலாந்தில் உள்ள எந்த மிருகத்துக்கும் ஒரு வயதான நாள் முதல் சந்தோஷம், ஓய்வு என்பதன் அர்த்தமே தெரியாது என்றுதான் சொல்ல வேண்டும். இங்கிலாந்தில் எந்த மிருகத்துக்கும் சுதந்திரம் என்பதே கிடையாது. மிருகத்தின் வாழ்க்கை துயரமும், அடிமைத்தனமும் மிக்கதாக இருக்கிறது. அது தான் உண்மை.

"இதுதான் இயற்கையில் ஏற்பட்ட நியதியா? இதில் வசிக்கிறவர்களுக்கு சுகமான வாழ்வு அளிக்கக்கூடாத அளவுக்கு இந்த நாடு அப்படி ஏழ்மைப்பட்டுக் கிடக்கிறதா? அப்படியில்லை தோழர்களே! அப்படியில்லை. ஆயிரம் தடவை வேண்டுமானாலும் சொல்லுகிறேன். அப்படியில்லை. இங்கிலாந்தின் மண் வளமானது; அதன் சீதோஷ்ணம் நல்லது; இப்போது இங்குள்ளதைவிட அதிகமான மிருகங்களுக்கும்கூடப் போதிய உணவு தருவதற்குப் போதிய வளம் இங்கிலாந்தில் இருக்கிறது. நாம் இப்போது வசிக்கிறோமே – இந்தப் பண்ணையையே உதாரணமாக எடுத்துக் கொள்வோம். இதிலே ஒரு டஜன் குதிரைகள், இருபது பசுக்கள், நூற்றுக்கணக்கான ஆடுகள் இருக்கலாம். நாம் இப்போது கனவில்கூட எண்ணாத அளவு மதிப்புடனும், சௌகரியத்துடனும் வாழ்க்கை நடத்தலாம். அப்படியானால், இப்படி மோசமான பரிதாபகரமான நிலைமையில் நாம் வாழ்ந்துகொண்டிருப்பதேன்? ஏனென்றால், நாம் உழைத்து உற்பத்தி செய்கிற பொருள்களையெல்லாம் மனிதர்கள் நம்மிடமிருந்து பறித்துக்கொண்டு விடுகிறார்கள்; திருடிக்கொண்டிருக்கிறார்கள்.

நம்முடைய பிரச்னைகளுக்கெல்லாம் பதில் இங்கேதான் இருக்கிறது. தோழர்களே! ஒரே வார்த்தையில் அடக்கிவிடலாம். **மனிதன்** என்கிற ஒரே வார்த்தையில் அடக்கிவிடலாம். நம்முடைய உண்மையான ஒரே எதிரி மனிதன்தான். மனிதனை இங்கிருந்து அகற்றிவிட்டோமானால், நம் பிரச்னைகள் எல்லாம் தீர்ந்து விடும்; பசி, கடினமான வேலை இரண்டும், மனிதன் போய்விட்டால், நம்மைப் பற்றிய வரையில், நிரந்தமாக அழிந்து விடும்.

''உற்பத்தி செய்யாமல் உண்பது மனிதன் ஒருவன்தான். அவன் பால் தருவதில்லை, முட்டைகள் இடுவதில்லை. ஏர்க்கலப்பையை அவனே இழுத்து உழ முடியாது. முயல்களைப் பிடிக்கக்கூடிய அளவு வேகமாக அவனால் ஓட முடியாது. இருந்தும் மிருகங்களுக்கெல்லாம் அதிபதியாக அவன் இருக்கிறான். அவன் அவற்றை வேலை வாங்குகிறான். அவை பட்டினி கிடந்து இறந்துவிடாமல் இருப்பதற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு தீனி மட்டுமே அவற்றிற்கு அளிக்கிறான். எஞ்சுவதை அவன் தனக்கென்று வைத்துக் கொண்டுவிடுகிறான். நாம் உழைத்து மண்ணைப் புரட்டி வளப்படுத்துகிறோம். நமது சாணி தான் மண்ணுக்கு எருவாகிறது. ஆனால் நம்மில் யாருக்கு எது சொந்தம் என்று சொல்லிக் கொள்ள முடியும்? நம் எலும்பும் தோலும் தான் நமக்குச் சொந்தம் என்று கொண்டாடலாம். என் எதிரில் இருக்கிற பசுக்களே, உங்களை நான் கேட்கிறேன். சென்ற வருஷத்தில் மட்டும் நீங்கள் எத்தனை ஆயிரம் காலன்கள் பால் கறந்து கொடுத்திருப்பீர்கள்? கன்றுக் குட்டிகளை திடமாக வளர்க்க உபயோகப்பட வேண்டிய அவ்வளவு பாலும் என்ன ஆயிற்று? அதில் ஒவ்வொரு துளியும் நம் எதிரிகளின் வயிற்றில் தான் போய்ச் சேர்ந்தது! கோழிகளே, உங்களைக் கேட்கிறேன். போன வருஷம் நீங்கள் எத்தனை முட்டைகள் இட்டீர்கள்? அதில் எத்தனை குஞ்சுகளாகப் பொரிந்தன? மற்றவை எல்லாம் ஜோன்ஸுக்கும் அவன் கூட்டத்துக்கும் பணம் காசு சேர வேண்டும் என்பதற்காக விற்கப்பட்டுவிட்டன. க்ளோவர், உன்னைக் கேட்கிறேன் நான் – நீ பெற்றெடுத்த அந்த நாலு குட்டிகளும் என்ன ஆயின? உன் கிழ வயதில் அவை உனக்கு ஆதரவாயிருந்து சந்தோஷமளிக்க வேண்டாமா? அவை என்னவாயின? ஒவ்வொரு குட்டியும் பிறந்து ஒரு வருஷமானதுமே விற்கப்பட்டு விட்டது. அவற்றில் ஒன்றைக்கூட நீ இனி பார்க்க முடியாது. இப்படிப் பெற்றெடுக்கத் தானா குட்டிகள்? அது தவிர பண்ணையில் நீ செய்த வேலைகளுக்கெல்லாம் கூலியாக உனக்குக் கிடைத்தது என்ன? லாயத்தில் கொஞ்சம் இடமும், அரைவயிறு நிரம்பத் தீனியும் மாத்திரம் தான்.

''இப்படிப் பரிதாபகரமான வாழ்வு நடத்துகிறோமே நாம் – அது தானாக முடியட்டும் என்றாவது நம்மை விடுகிறார்களா மனிதர்கள்? என்னைப் பற்றிய வரையில் நான் முணுமுணுக்க வேண்டிய அவசியமில்லை. ஏனென்றால், ஒரு விதத்தில் நான் அதிர்ஷ்டசாலி என்றுதான் சொல்ல வேண்டும். எனக்குப் பன்னிரண்டு வயதாகிறது; நானூறுக்கும் அதிகமாகக் குட்டிகள் போட்டிருக்கிறேன் நான். இது பன்றிக்கு இயற்கையான வாழ்க்கை. ஆனால் முடிவில் கத்திக்கு இரையாகாத மிருகம் எது? என் எதிரில் உட்கார்ந்திருக்கிறீர்களே, பன்றிக் குட்டிகளே, இன்னும் ஒரு வருஷத்துக்குள்ளாகவே நீங்கள் ஒவ்வொருவரும் கொலைக் களத்தில் வீரிட்டுக் கத்திக்கொண்டுதான் சாகப்போகிறீர்கள். அந்த பயங்கரமான முடிவைத்தான் நாம் எல்லோரும் கடைசியில் அடைந்தாக வேண்டும் – பசுக்கள், பன்றிகள், ஆடுகள், கோழிகள் எல்லாம். குதிரைகளும், நாய்களும்கூட இந்த முடிவைத் தப்ப முடியாது. பாக்ஸர், இப்போது பலசாலி; இருந்தாலும் பாக்ஸரின் முடிவும் இதுதான். உன் உடலில் வலுவு குறைந்தவுடனே, ஜோன்ஸ் உன்னை விற்றுவிடுவான்; உன்னை வாங்குகிறவன் உன் கழுத்தை அறுத்து உன்னை உலையில் போட்டு வேகவைத்து வேட்டை நாய்களுக்கு உணவாக்கிவிடுவான். நாய்களையோவெனில், அவை கிழடு தட்டிப் பல்லில்லாது போன பிறகு, ஜோன்ஸ் அவற்றின் கழுத்தில் ஒரு கல்லைக் கட்டிக் குட்டையிலே வீசி எறிந்து கொன்றுவிடுவான்.

''பளிங்கு போலத் தெளிவாகத் தெரியவில்லையா, தோழர்களே? இந்த வாழ்க்கையில் நமக்குச் சம்பவிக்கும் கேடுகள் எல்லாம் மனிதர்களின் கொடுங்கோலால்தான் நமக்குச் சம்பவிக்கின்றன என்பது தெளிவாகத் தெரிகிறது. இல்லையா? மனிதனை ஒழித்துவிட்டோமானால் நம் உழைப்பின் பலன் நமதேயாகிவிடும். ஒரே ஒரு நாள் இரவிலேயே நாம் பணக்காரர்களாகவும் சுதந்திரமுள்ளவர்களாகவும் ஆகிவிட முடியும். அதற்காக நாம் உடனடியாகச் செய்ய வேண்டியது என்ன? இரவும் பகலும் உழைக்க வேண்டும்; மனித குலத்தை வீழ்த்திக் கவிழ்ப்பதற்கு உடலும் உள்ளமும் ஒருங்கே ஒருமுகமாக நாம் இடைவிடாது உழைக்க வேண்டும். இதுதான் நான் உங்களுக்குத் தெரிவிக்கிற விஷயம், தோழர்களே– புரட்சி என்பதுதான் என் தத்துவத்தின் மூலாதாரமான வார்த்தை. ஆம், புரட்சி! அது எப்போது நேரும் என்று சொல்ல என்னால் முடியாது. நான் சொல்கிற புரட்சி ஒருவாரத்திலும் வரலாம் – ஒரு நூற்றாண்டிலும் வரலாம். ஆனால்

ஒன்று மட்டும் நிச்சயம் – இதோ நான் படுத்திருக்கிற இந்த வைக்கோல் எவ்வளவு நிதரிசனமான உண்மையோ, அதேபோல புரட்சி வரப்போகிறது, மிருகங்களுக்கும் நீதி வழங்கப்படப் போகிறது என்பது நிச்சயம். இன்றோ, நாளையோ, சீக்கிரமோ, அதிக நாள் கழித்தோ, நீதி வழங்கப்படப் போகிறது என்பது மட்டும் நிச்சயம். தோழர்களே! அதில் உங்கள் கண்களையும், கருத்தையும் நிலைக்கச் செய்யுங்கள். எஞ்சியுள்ள உங்கள் வாழ்க்கையும் வீணாகி விடாதபடி, புரட்சிக்காக உழையுங்கள். எல்லாவற்றிற்கும் மேலே இன்னொன்று சொல்வேன் நான்; புரட்சி என்கிற இந்தத் தத்துவத்தை, என் கொள்கையை, உங்களுக்குப் பின் வருகிறவர்களிடமும் தெரிவியுங்கள். பின் வருகிற தலைமுறைகள் போராட்டத்தை நடத்திப் புரட்சியை வெற்றிகரமாக்கட்டும்.

"தோழர்களே– இதை ஞாபகத்தில் வையுங்கள் – நீங்கள் திடத்தையும் தீர்மானத்தையும் இழக்கவே கூடாது. வாதப் பிரதிவாதங்களால் உங்கள் புரட்சி நோக்கம் திரிந்துவிடக் கூடாது. மனிதனுக்கும் மிருகங்களுக்கும் பொதுவான நோக்கம் ஒன்று உண்டென்று யாராவது சொன்னால் அதைக் காதில் போட்டுக் கொள்ளாதீர்கள். மனிதன் சுகமாக இருந்தால்தான் நீங்களும் சுகமாக இருக்க முடியும் என்று பிறர் சொல்வதை நம்பி விடாதீர்கள். அதெல்லாம் பொய். மனிதனுக்குத் தன் நலத்தைத் தவிர வேறு எவ்விதமான ஞாபகமும் கிடையாது. அவன் வேறு எந்த மிருகத்தினுடைய நலனுக்காகவும் பாடுபடமாட்டான். மிருகங்களாகிய நம்மிடையே பூரணமான ஒற்றுமை நிலவ வேண்டும். இந்தப் புரட்சியிலே நாம் தோழர்களாக, தோளோடு தோள் கொடுத்து, நிற்க வேண்டும். மனிதர்கள் எல்லோரும் நம் எதிரிகள்; மிருகங்கள் எல்லாம் தோழர்கள்."

இந்தச் சமயம் சபையில் பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. மேஜர் பேசிக்கொண்டிருக்கையில் நாலு பெரிய எலிகள் தங்கள் வளைகளிலிருந்து வெளியே வந்து குதித்துக்கொண்டு, உட்கார்ந்து பிரசங்கத்தைக் கேட்டன. அவற்றைத் திடீரென்று பார்த்துவிட்ட நாய்கள் அவற்றை நோக்கிப் பாய்ந்தன. ஆனால் எலிகள் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து தங்கள் வளைகளுக்குள் பதுங்கிக் கொண்டு தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொண்டன. சந்தடியை அடக்குவதற்கு மேஜர் தன் முன்னங்காலைத் தூக்கிக் காட்டியது.

அது தொடர்ந்து பேசிற்று: "தோழர்களே, உடனடியாக நாம் ஒரு பிரச்னையைத் தீர்க்க வேண்டும். எலிகள், முயல்கள் போன்ற காட்டுப்

பிராணிகள், நம் நண்பர்களா, எதிரிகளா? வோட்டெடுத்து நாம் இதை முடிவு செய்துவிட வேண்டும். இந்தக் கூட்டமே இந்தக் கேள்விக்குப் பதில் கூறி விடட்டும் என்று நான் சொல்கிறேன். எலிகள் தோழர்களா?"

உடனே ஓட்டு எடுக்கப்பட்டது. எலிகள் தோழர்கள்தான் என்று பெரும்பாலானவர்கள் அபிப்பிராயம் தெரிவித்தார்கள். நாலே நாலு வோட்டுகள்தான் எலிகளுக்கு எதிராக விழுந்தன – மூன்று நாய்களும் பூனையும் எலி விரோதிதான் என்று வோட்டளித்தன. இதில்கூடப் பூனை இரண்டு பக்கத்துக்கும் சாதகமாக வோட்டளித்தது என்று பின்னர் தெரியவந்தது. மேஜர் தொடர்ந்து பேசிற்று:

நான் இனியும் சொல்ல வேண்டியது கொஞ்சம் தான். மீண்டும் சொல்கிறேன். இதை ஞாபகத்தில் வையுங்கள். மனிதனையும், மனிதனின் போக்கையும் எதிர்த்துப் புரட்சி செய்வது நம் ஒவ்வொருவருடைய கடமையுமாகும். இரண்டு கால்களில் நடப்பதெல்லாம் நம் எதிரிகள்தான். எவையெவை நான்கு கால்களில் நடக்கின்றனவோ, அல்லது எவற்றிற்கு இறக்கைகள் இருக்கின்றனவோ அவையெல்லாம் நம் நண்பர்கள். மற்றொரு விஷயத்தையும் ஞாபகத்தில் வையுங்கள். மனிதனை எதிர்த்துப் போராடுவதில் நாம் மனிதன் போலாகி விடக்கூடாது. அவனைப்போல நாம் ஆகிவிடக் கூடாது என்பது முக்கியமான விஷயம். அவனை வென்று வீழ்த்திவிட்ட போதும்கூட, அவனுடைய தீய பழக்கவழக்கங்களை நாம் பின்பற்றக்கூடாது. வீட்டிற்குள் தங்குவது, படுக்கையில் படுப்பது, உடைகள் அணிவது, மது குடிப்பது, புகை பிடிப்பது, பணத்தைக் கையால் தொடுவது, வியாபாரம் செய்வது என்கிற காரியங்களில் நாம் ஒருபோதும் ஈடுபடவே கூடாது. மனிதனின் பழக்க வழக்கங்கள் எல்லாம் தீயவை. எல்லாவற்றிற்கும் மேலே இதைச் சொல்ல வேண்டும்; மிருகம் எதுவும் தன் வர்க்கத்தினர்மேல் கொடுங்கோல் ஆட்சி செலுத்த முயலக்கூடாது. பலமற்றவர்களோ, பலசாலிகளோ, கெட்டிக்காரர்களோ, அசடர்களோ, நாம் எல்லோரும் சகோதரர்கள். ஒரு மிருகம் வேறு எந்த மிருகத்தையும் எக்காரணம் கொண்டும் கொல்லக்கூடாது. எல்லா மிருகங்களும் ஒன்றுக்கொன்று சரிநிகர் சமானமானவை.

இப்பொழுது, தோழர்களே, உங்களுக்கு நான் நேற்றிரவு கண்ட கனவைச் சொல்கிறேன், அந்தக் கனவை உங்களுக்கு நான் விவரிப்பது என்பது இயலாத காரியம். மனிதன் மறைந்தபின் இந்தப் பூமி எப்படியிருக்கும் என்பதைப் பற்றிய கனவு அது. எத்தனையோ நாட்களாக

நான் மறந்துவிட்ட ஒரு விஷயத்தை எனக்கு ஞாபகப்படுத்தியது அந்தக் கனவு. பல வருஷங்களுக்கு முன், நான் ஒரு குட்டியாக இருந்தபோது, என் தாயாரும் மற்ற பன்றிகளும் ஒரு பாட்டுப் பாடுவதுண்டு. அது மிகவும் பழமையான பாட்டு. அதன் மெட்டும் முதல் மூன்று வார்த்தைகளும்தான் அவர்களுக்கும் தெரியும். என் குழந்தைப் பருவத்தில் என் காதில் விழுந்த மெட்டை இந்தக் கனவு எனக்கு மீண்டும் ஞாபக மூட்டியது. அது மட்டுமல்ல. அந்தப் பாட்டின் வார்த்தைகளும் எனக்கெப்படியோ ஞாபகம் வந்துவிட்டன. இந்தப் பாட்டு பண்டைக் காலத்திலேயே, மிருகங்கள் பாடிய பாட்டு என்பதில் எனக்குச் சந்தேகமே யில்லை. எத்தனையோ தலைமுறைகளாக மறந்துபோன பழம் பாட்டு இது. இப்போது, தோழர்களே, அந்தப் பாட்டை நான் உங்களுக்குப் பாடிக் காண்பிக்கிறேன். எனக்கு வயசாகிவிட்டது; என் குரலும் கம்மித்தான் இருக்கிறது. ஆனால் என்னிடம் அந்தப் பாட்டின் வார்த்தைகளையும் மெட்டையும் கேட்டுக் கற்றுக்கொண்டு அதை நீங்கள் நன்றாகவே பாடுங்கள், பாட்டின் பெயர் **இங்கிலாந்தின் மிருகங்கள்** என்பதாகும்."

கிழட்டு மேஜர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு பாடத் தொடங்கியது. அதன் குரல் கட்டையாக, கம்மித்தான் இருந்தது. ஆனால் அது நன்றாகவே பாடியது. மெட்டும் உத்ஸாகம் தரக்கூடிய மெட்டுத்தான். பின் வருகிற மாதிரிப் பாடிற்று அது:

*இங்கிலாந்தின் மிருகங்களே, அயர்லாந்தின் மிருகங்களே!*
*உலகிலுள்ள எல்லா நாட்டு மிருகங்கள்*
*நான் கூறுகிற இன்பச் செய்தியைக் கேளுங்கள்*
*சுபிட்சம் மிக்க எதிர்காலச் செய்தியைக் கேளுங்கள்*

*உடனேயோ பலநாள் கழித்தோ வருகிறது அந்தக்காலம்*
*கொடுங்கோலன், மனிதன், வீழ்ச்சியடைவான், திண்ணம்.*
*இங்கிலாந்தின் பயன்தரும் வயல்களில்*
*மிருகங்களைத் தவிர வேறு யாரும் நடமாட மாட்டார்கள்.*

*நம்மூக்குகளிலிருந்து வளையங்கள் மறைந்துவிடும்;*
*நம்முதுகிலிருந்து சேணங்கள் மறைந்துவிடும்;*
*அங்குசமும் கால்முட்களும் உபயோகமற்றுத் துருப்பிடித்துவிடும்;"*
*அடிக்கும் சாட்டைகள் ஒருவழியாக ஓய்ந்துவிடும்.*

*மனதிற்கு எட்டாத அளவுக்கு நம்செல்வங்கள் பெருகும்*
*கோதுமையும் பார்லியும், கொள்ளும் வைக்கோலும்*

*மற்றும் அற்புதமான தானியங்கள் பலவும்*
*அளவுக்கு மீறியே அன்று நமக்குக் கிடைத்துவிடும்.*

*இங்கிலாந்தின் வயல்களில் பிரகாசம் படியும்,*
*அதன் நீர்நிலைகள் தெளிவோடோடும்,*
*அதன் காற்றே இன்ப மயக்கம் தரும்,*
*நாம் சுதந்திரமடையும் அந்தத் தினத்தன்று.*

*அந்த நன்னாளை எதிர்நோக்கி நாம் உழைப்போம்*
*அது தோன்றுமுன் நாம் மடிந்துவிடலாம்; எனினும்*
*பசுவும் குதிரையும், வாத்தும் கோழியும்*
*சுதந்திரத்துக்காக ஒன்றாகப் பாடுபட வேண்டும்.*

*இங்கிலாந்தின் மிருகங்களே, அயர்லாந்தின் மிருகங்களே*
*மற்றும் உள்ள எல்லாநாட்டு மிருகங்களே, கேளுங்கள்,*
*சுபிட்சமும் மகிழ்ச்சியும் மிக்க எதிர்காலப் புரட்சிச் செய்தியைக்*
*கவனித்துக் கேட்டு, உலகெலாம் பரப்புங்கள்."*

இந்தப் பாட்டைப் பாடக் கேட்ட மிருகங்களின் உத்ஸாகம் அளவு கடந்ததாகியது. மேஜர் பாடி முடிப்பதற்கு முன்பே மிருகங்கள் எல்லாமும் அதனுடன் சேர்ந்து பாடத் தொடங்கிவிட்டன. அசட்டு மிருகங்கள் சிலவற்றிற்கும்கூட அந்த மெட்டு சுலபத்தில் புரிந்தது; வார்த்தைகள் சில சுலபமாகவே கவனத்திலிருந்தன. நாய்களையும் பன்றிகளையும் போன்ற கெட்டிக்கார மிருகங்களுக்கோ வெனில், சில நிமிஷ நேரத்தக்குள்ளாகவே பாட்டு பூராவும் வந்துவிட்டது – மெட்டு வார்த்தைகள் எல்லாம். பயிற்சிக்காக இரண்டொரு தரம் மெதுவாகப் பாடிவிட்டு, கடைசியில் பண்ணை மிருகங்கள் எல்லாமாகச் சேர்ந்து கொண்டு உரக்க அந்தப் பாட்டைப் பாடின, ஒரே குரலாக **"இங்கிலாந்தின் மிருகங்கள்"** என்கிற பாட்டைப் பாடின. பசுக்கள் அதைப்பாடின – அம்மே என்று கத்தின, நாய்கள் அதை ஊளையிட்டுப் பாடின. இந்தப் பாட்டு அவை எல்லாவற்றிற்கும் மிகவும் பிடித்திருந்தது; ஐந்து தடவை சேர்ந்தாற்போல, மிருகங்கள் எல்லாமாகச் சேர்ந்து கொண்டு இந்தப் பாட்டை உரக்கப் பாடின. இன்னும் பல தடவைகளும் பாடியிருக்கும், ஆனால் வேறு ஏதோ குறுக்கிட்டுவிட்டது.

துரதிருஷ்டவசமாக இந்தக் கூக்குரலில் மிஸ்டர் ஜோன்ஸ் விழித்துக் கொண்டுவிட்டான். கொட்டிலில் நரி புகுந்துவிட்டது என்று எண்ணி,

துப்பாக்கியை எடுத்துச் சுட்டு, ஒரு வேட்டைத் தீர்த்தான். ரவை குண்டுகள் கொட்டில் சுவர்களில் பதிந்தன. மிருகங்களின் கூட்டம் அவசரம் அவசரமாகக் கலைந்தது. ஒவ்வொரு மிருகமும் தன் தூங்குமிடத்துக்குச் சென்று விட்டது. பறவைகள் தங்கள் கூண்டுகளில் பதுங்கின. மிருகங்கள் வைக்கோல் தரையில் படுத்தன. பண்ணை பூராவும் ஒரு விநாடியில் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டது. ●

# 2

இதெல்லாம் நடந்து மூன்று இரவுகளுக்குப் பிறகு கிழட்டு மேஜர் தூக்கத்தில் அமைதியாக உயிர் நீத்துவிட்டது. பழத்தோட்டத்தில் கீழ்ப்பகுதியில் அதன் உடலைப் புதைத்து விட்டார்கள்.

இதெல்லாம் நடந்தது மார்ச் மாதத்தின் ஆரம்ப நாட்களில், அதற்கடுத்த மூன்று மாதங்களில் ரகசியமாகப் பலதரப்பட்ட சுறுசுறுப்பான காரியங்கள் பண்ணையிலே நடந்து வந்தன. மேஜரின் பிரசங்கம் பண்ணையிலிருந்த கெட்டிக்கார மிருகங்களில் சிலவற்றிற்கு ஒரு புது நோக்கும் பூரணமான ஒரு வாழ்க்கைக் தத்துவமும் தந்துவிட்டது. அதைப் பின்பற்றி வாழ அவை தயார் செய்து கொண்டிருந்தன. கிழட்டு மேஜர் பன்றி சொன்ன புரட்சி எப்போது ஏற்படும் என்பது யாருக்கும் நிச்சயமாகத் தெரியாது. தங்கள் வாழ் நாட்களிலேயே அது நடந்தேறி விடுமா என்பதும் தெரியாது. ஆனால் அந்தப் புரட்சிக்கான படியெல்லாம் ஏற்பாடுகள் செய்வது தங்கள் கடமை என்பதை அவை தெளிவாகப் பூரணமாக உணர்ந்து நடந்து கொண்டன. மிருகங்களிலே மிகவும்

கெட்டிக்காரத் தனமானவை என்று சாதாரணமாகக் கருதப்படும் பன்றிகள்தான் இந்தக் கடமையைப் பூரணமாக உணர்ந்து நடந்து கொண்டன; மற்ற மிருகங்களுக்கு அவசியமான அறிவைப் புகட்டி, அவற்றை நேர்த்தியாக அமைத்து நடத்துவது பன்றிகளின் பொறுப்பாகிறது. பன்றிகளின் முதல் வரிசையில் முக்கியஸ்தர்களாக இருந்தவை, **ஸ்நோ பால்** (பனிப்பந்து), **நெபோலியன்** என்கிற இரண்டு இளம் கடாப்பன்றிகளும் தான். அவற்றை வளர்த்து விற்றுவிடுவது என்று மிஸ்டர் ஜோன்ஸ் கொழுக்க வைத்துக் கொண்டிருந்தான். நெபோலியன் உருவத்தில் பெரிது; பார்ப்பதற்கே அச்சம் விளைவிக்கும் பெர்க்ஷைர் கடாப்பன்றி அது, அந்தப் பண்ணையில் அது போன்ற பெர்க்ஷைர் பன்றி வேறு ஒன்றும் இல்லை. அது அதிகமாகப் பேசாது; ஆனால் கெட்டிக்காரத்தனமாகத் தன் காரியத்தைப் பார்த்துக் கொள்வதில் அதற்கு ஈடான மிருகம் அந்தப் பண்ணையிலேயே இல்லை என்று புகழ்பெற்றிருந்தது. ஸ்நோபால் நெபோலியனை விடச் சுறு சுறுப்பாகவும் குறு குறுப்பாகவும் இருக்கும். பேசுவதிலும், காரியம் செய்வதிலும், யுக்திகள் சொல்வதிலும் மஹாவல்லமையுள்ளது. குணாதிசயங்களிலோ, அழுத்தத்திலோ அது நெபோலியனுக்குச் சமமானதாகக் கருதப்பட்டதில்லை. பண்ணையிலிருந்த மற்ற கடாப்பன்றிகள் எல்லாம் மாமிசத்திற்காக வளர்க்கப்பட்டவைதான். அவற்றில் பிரசித்தமானது ஸ்க்வீலர் (கூச்சலிடுபவன்) என்னும் ஒரு கொழுத்த சிறிய பன்றி. அதன் கன்னங்கள் மெத்து மெத்தென்று வட்டமாக இருந்தன; அதன் கண்கள் சதா சிமிட்டிக் கொண்டேயிருந்தன; அது விசுக் விசுக்கென்று, குடு குடு வென்று அங்கு மிங்கும் ஓடும்; அதன் குரல் சீச்சுக் குரல். மிகவும் பிரமாதமாக, கெட்டிக்காரத்தனமாகப் பேசும் அது, ஏதாவது ஒரு சிக்கலான விஷயத்தைப் பற்றி அது பேசும்போது, மேடைமேல் வாலை ஆட்டி ஆட்டிக் கொண்டு அங்குமிங்கும் தாவித் தாவி நின்று பேசும் – அது பேசுகிற வேடிக்கையே அதன் கட்சிக்கு ஆதரவு தேடித் தருகிற மாதிரி யிருக்கும். ஸ்க்வீலர் மனசுவைத்தால் கருப்பை வெள்ளையென்று ஸ்தாபித்துவிடும் என்று மற்ற மிருகங்கள் சொல்லுவது வழக்கம்.

இந்த மூன்று பன்றிகளுமாகச் சேர்ந்து கிழட்டு மேஜரின் உபதேசங்களை ஒரு வாழ்க்கைத் தத்துவமாகவும், ஒரு வாழ்க்கை வழியாகவும் விரித்து ஒரு சிந்தனை மாளிகையை எழுப்பிக் கொண்டன. அதற்கு மிருகங்கள் தத்துவம் என்று பெயர் வைத்தன. ஒரு வாரத்தில் பல இரவுகள், மிஸ்டர் ஜோன்ஸ் தூங்கிய பிறகு, கொட்டிலில் ரகசியமாக எல்லா

மிருகங்களும் கூடிக் கூடிப் பேசின. இந்த மூன்று பன்றிகளும் மாற்றி மாற்றி மற்ற மிருகங்களுக்கு மிருகங்கள் தத்துவத்தை விரிவாக விளக்கி உபதேசித்தன. ஆரம்பத்தில் அவை செய்த உபதேசங்கள் அந்த மிருகங்களின் அசட்டுத்தனத்தையும் சோம்பேறித்தனத்தையும் மீறி அதிகப் பலன் தந்துவிடவில்லை. சில மிருகங்கள் நாம் மிஸ்டர் ஜோன்ஸூக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டவர்களில்லையா என்று கேட்டன; ஒரு சில மிஸ்டர் ஜோன்ஸை எஜமான் என்று கூடக் குறிப்பிட்டன. ஒரு சில மிகவும் அசட்டுத்தனமான கேள்விகள் கேட்டன; "மிஸ்டர் ஜோன்ஸ்தானே நமக்கு உணவளிக்கிறான். அவன் போய் விட்டால் அப்புறம் நாம் பட்டினி கிடக்க வேண்டி வந்துவிடுமே. பட்டினி கிடந்து உயிர்விட நேர்ந்தாலும் நேர்ந்துவிடுமே" என்று விவாதித்தன. சில மிருகங்கள், இன்னும் சில கேட்டன: "நாம் இறந்த பிறகு நடக்கப் போவதைப் பற்றி நாம் கவலைப்படுவானேன்? – எப்பொழுதோ வரப்போகிற ஒரு புரட்சிக்காக நாம் ஏன் இப்போதே கஷ்டப்பட வேண்டும்?" இவற்றிற்கெல்லாம் சரியானபடி பதில் சொல்லி, இந்த மாதிரியான வாதங்கள் எல்லாம் மிருகங்கள் தத்துவத்துக்கு நேர் முரணானவை என்று நிரூபிக்க அந்த மூன்று பன்றிகளும் வெகுவாகப் பாடுபட வேண்டியதாக இருந்தது. மாலி என்கிற வெள்ளைப் பெண் குதிரைக் குட்டிதான் எல்லா மிருகங்களையும் விட அதிக அசட்டுத்தனமான கேள்விகள் கேட்டது. ஸ்நோபாலை அந்த மாலி கேட்ட முதல் கேள்வி இதுதான்: "புரட்சிக்குப் பிறகும் சர்க்கரைக் கட்டிகள் கிடைக்குமா கிடைக்காதா?"

"கிடைக்காது" என்று அழுத்தமாகப் பதில் அளித்தது ஸ்நோபால். "இந்தப் பண்ணையில் சர்க்கரை செய்ய நமக்கு வசதிகள் கிடையாது. தவிரவும், சர்க்கரை உனக்கு அவசியமில்லை. ஆனால், உனக்கு வேண்டிய அளவு ஓட்ஸூம் புல்லும் கிடைக்கும்."

"என் பிடரியில் ரிப்பன்களை அணிந்து கொள்ள புரட்சிக்குப் பிறகும் எனக்கு அனுமதி கிடைக்குமா கிடைக்காதா?" என்று விடாமல் கேட்டது மாலி.

"தோழா! உன்மனதைக் கவருகிற அந்த ரிப்பன்கள் உன் அடிமைத் தனத்தின் சின்னங்கள். அவற்றிடம் இப்படி மனம் வைக்கலாமா? சுதந்திரம் என்பது ரிப்பன்களுக்கெல்லாம் மேற்பட்ட ஒரு விஷயம் என்பது உனக்கு விளங்கவில்லையா?" என்றது ஸ்நோபால்.

மாலி ஒப்புக் கொண்டது. ஆனால், அதற்கு முழு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டதாக அதன் குரல் தொனிக்கவில்லை.

மோஸஸ் என்கிற வளர்ப்புக் காகம் பரப்பிய பொய் வதந்திகளை மறுத்து உண்மையை ஸ்தாபிக்க அந்தப் பன்றிகள் இன்னும் அதிகமாகப் பாடுபட வேண்டியதாக இருந்தது. மோஸஸ் என்கிற காகம் மிஸ்டர் ஜோன்ஸுக்கு மிகவும் வேண்டிய ஜந்து. அது மட்டுமல்ல – வேவு பார்த்து உளவு சொல்வதிலும், கோள் சொல்லிக் கொடுப்பதிலும் கெட்டிக்கார ஜந்து அது, கெட்டிக்காரத் தனமாகவும் பேசும். கற்கண்டு மலை என்று ஒரு தேசம் எங்கேயோ இருப்பதாகவும், இறக்கிற மிருகங்கள் எல்லாம் சாவுக்குப் பின் அந்த மலைக்குத் தான் போய்ச்சேருகின்றன என்றும் அது கதைத்தது. மோஸஸ் சொல்லியபடி பார்த்தால், அந்தக் கற்கண்டு மலை என்கிற தேசம், மேகங்களுக்கு மேலே வானத்திலே எங்கேயோ இருந்ததாகத் தோன்றியது. கற்கண்டு மலையிலே வாரத்திலே ஏழு நாட்களுமே விடுமுறை நாட்கள் தான். பசும் புல்லும் க்ளோவரும் வருஷம் பூராவும் அங்கு ஏராளமாகக் கிடைக்கும். சர்க்கரைக் கட்டியும், பிண்ணாக்கும் வழி நெடுக வயல்களின் வேலிகளிலே காய்த்துத் தொங்கும் – எட்டிப் பறித்துத் தின்னலாம், தடை எதுவுமின்றி. கதைகள் பேசிக் கொண்டு வேலை எதுவுமே செய்யாமல் இருந்த மோஸஸைக் கண்டால் மிருகங்களுக்கு மிகவும் வெறுப்பாக இருந்தது. ஆனால் கற்கண்டு மலையைப் பற்றிய வரையில் சில மிருகங்களுக்கு நம்பிக்கை மட்டும் கொஞ்சம் இருந்தது, அப்படிப்பட்ட ஒரு தேசம் இல்லவே இல்லை என்று ஸ்தாபிக்கப் பன்றிகள் மூன்றும் வெகுவாகக் கஷ்டப்பட்டுத் தான் விவாதிக்க வேண்டியதாக இருந்தது.

பாக்ஸர், க்ளோவர் என்கிற இரண்டு வண்டிக் குதிரைகளுந்தான் பன்றிகளின் மிகச் சிறந்த சிஷ்யர்களாக விளங்கின. தாமாக எதுவும் யோசித்து எவ்வித முடிவுக்கும் வருகிற சக்தியற்றவை அவை. ஆனால், இப்போது பன்றிகளைத் தங்கள் ஆசான்களாக ஏற்றுக் கொண்டதால், அவை சொன்னதையெல்லாம் ஏற்றுக் கொண்டன. சொன்னதை ஏற்றுக் கொண்டது மட்டுமல்ல, அதை எளிய வார்த்தைகளில் மற்றவர்களுக்கும் வற்புறுத்திக் கூறின. கொட்டடியில் நடந்த ரகசியக் கூட்டங்கள் எதற்கும் அவை வராமல் இருந்ததே கிடையாது. "இங்கிலாந்தின் மிருகங்கள்" என்கிற பாட்டைப் பாடுவதில் அவைதான் முதற் குரல் தந்தன. மிருகங்களின் கூட்டம் ஒவ்வொன்றுமே இந்தப் பாட்டுப்பாடுவதுடன் தான் முடிந்தன.

இதெல்லாம் இப்படியிருக்கையில், எதிர்பார்த்ததைவிட அதி சீக்கிரமே, எதிர்பார்த்ததையும்விட அதிசுலபமாகவே புரட்சி நடந்தேறிவிட்டது. முந்திய வருஷங்களில் மிஸ்டர் ஜோன்ஸ் கடின சித்தமுள்ள எஜமானனாக இருந்தாலும்கூட தகுதியான ஒரு குடியானவனாகப் பண்ணைக் காரியங்களைப் பார்த்து வந்தான். ஆனால் இப்போது கொஞ்ச காலமாக அவனுக்குப் போதாத காலம் ஆரம்பித்துவிட்டது. ஏதோ ஒரு வியாஜ்ஜியத்தில் தோற்றுப் போனது முதலே அவனுக்கு தைரியமும், அசிரத்தையும் அதிகரித்துவிட்டது; கைப் பணமும் கொஞ்சம் போய்விட்டது. அளவுக்கு மீறியே குடிக்கவும் ஆரம்பித்து விட்டான். பல நாட்கள் சேர்ந்தாற் போல சமையலறையில் உள்ள பெரிய நாற்காலியில் சாய்ந்து கொண்டே கிடப்பான் அவன். பத்திரிகைகள் படிப்பான்; ஓயாமல் குடிப்பான்; பீரில் தோய்த்த ரொட்டித் துண்டுகளை மோஸஸுக்குக் கொடுத்துக் கொண்டே பொழுதைப் போக்குவான். அவனுடைய வேலையாட்களும் சோம்பேறிகள்; அயோக்கியர்கள். வயல்களில் விழலும் முள்ளும் தழைத்துவிட்டன. பண்ணையிலிருந்த பல கட்டிடங்களுக்கும், கொட்டில்களுக்கும் புதுசாகக் கூரை வேய்ந்தாக வேண்டியதாயிற்று. வேலிகளைச் சரிவரச் சரி பார்க்காமல் பல இடங்களில் தொய்ந்து தொங்கின. பண்ணை மிருகங்களுக்கு உணவு கூடச் சரிவர சரியான வேளைகளில் போடுவது கிடையாது.

ஜூன் மாதம் வந்தது, புல் வெட்டுவதற்குத் தயாராக இருந்தது. வேனிற் காலத்தன்று ஒரு நாள் வில்லிங்டன் கிராமத்துக்குப் போன மிஸ்டர் ஜோன்ஸ் 'செட்லயன்' கள்ளுக்கடையில் குடித்துவிட்டு மதிமயங்கிக் கிடந்தான். மறுநாள் ஞாயிறன்று நண்பகலுக்குத்தான் பண்ணைக்குத் திரும்பினான். அதிகாலையிலேயே அவன் வேலையாட்கள் பாலைக் கறந்து வைத்துவிட்டு முயல் வேட்டையாடப் போய்விட்டார்கள்; அவர்களில் யாரும் மிருகங்களுக்கு உணவு எடுத்துப் போடுகிற காரியத்தைக் கவனிக்கவில்லை. வீடு திரும்பியவுடன் மிஸ்டர் ஜோன்ஸ், முகத்தை 'உலகத்துச் செய்திகள்' என்கிற செய்தித் தாளைப் போட்டு மூடிக்கொண்டு முன்னறை ஸோபாவில் படுத்து உறங்கிவிட்டான். ஆகவே மாலை வரையிலும் யாரும் மிருகங்களுக்கு உணவு எடுத்துப் போடவேயில்லை. மிருகங்களுக்கோ பசி பொறுக்க முடியாதபடியாகிவிட்டது. தீவனம் வைத்திருந்த கொட்டில் கதவை முட்டித் தள்ளிவிட்டு ஒரு பசு தனக்குத் தேவையானதை எடுத்துத் தின்ன ஆரம்பித்தது. மற்ற மிருகங்களும் தங்களுக்குத் தேவையான உணவைத் தேடிக் கொண்டன. அந்தச்சமயம்

பார்த்து மிஸ்டர் ஜோன்ஸ் விழித்துக் கொண்டான். அடுத்த நிமிஷமே அவனும் அவனுடைய நான்கு ஆட்களும் உணவு சேமித்து வைத்திருந்த கொட்டிலிற்குள் கையில் சாட்டைகளுடன் பிரவேசித்தனர். சாட்டையை நாலா பக்கமும் சொடுக்கி கண்ணில்பட்ட மிருகங்களை வெளுத்துவிட்டனர். இதைப் பசியோடிருந்த மிருகங்களால் தாங்க முடியவில்லை. முன்னேற்பாடு இதில் ஒன்றுமேயில்லை எனினும், மிருகங்கள் எல்லாம் ஒரே முகமாக தங்களைத் துன்புறுத்திய மனிதர்கள் மேல் பாய்ந்தன. நாலா பக்கங்களிலிருந்தும் ஜோன்ஸும் அவன் ஆட்களும் மிருகங்களால் தாக்கப்பட்டனர்; சில மிருகங்கள் முட்டின; சில உதைத்தன. நிலைமை கட்டுக்கடங்கவில்லை. இந்த மாதிரி எப்பொழுதும் மிருகங்கள் நடந்து கொண்டதாக அந்த மனிதர்களுக்கு நினைவில்லை; அவர்கள் எதிர்பார்க்காத ஒரு காரியம் அது. தங்கள் இஷ்டப்படி அடித்துத் துன்புறுத்தி என்ன செய்தாலும் சஹித்துக் கொண்டிருக்கும் மிருகங்கள் இன்று இப்படித் தங்களை எதிர்த்து நின்று போராடத் தொடங்கவே, ஜோன்ஸுக்கும் அவன் ஆட்களுக்கும் புத்தி தடுமாறுகிற அளவுக்குப் பயம் தோன்றிவிட்டது. இரண்டொரு விநாடிகளிலே, தங்களை எதிர்த்த மிருகங்களை எதிர்த்து நிற்பதை விட்டுவிட்டு ஓடத் தலைப்பட்டார்கள். ஒரு நிமிஷத்துக்குப் பிறகு அந்த ஐந்து பேர்களும் பண்ணைக்கு வெளியே போகும் வண்டிப் பாதையில் கிராமத்தை நோக்கிப் போகும் ரஸ்தாவை நோக்கி ஓடினார்கள். மிருகங்கள் வெற்றிகரமாக அவர்களைத் துரத்திக் கொண்டு பின் சென்றன.

படுக்கையறை ஜன்னல் வழியாக நடந்தது என்ன என்று பார்த்த மிஸ்ஸிஸ் ஜோன்ஸ், தன் துணிமணிகளையும் பொருள்களையும் ஒரு பையில் நிரப்பிக் கொண்டு வேறு ஒரு வழியாகப் பண்ணையை விட்டு சந்தடி செய்யாமல் வெளியேறிவிட்டாள். மோஸஸ் தன் கூண்டைவிட்டு வெளியே வந்து, இறக்கையடித்துக் கொண்டு அவள் தலைக்குமேலே வட்டமிட்டுப் பறந்து சென்றது. கர்ணகடூரமாகக் கரைந்தது. இதற்கிடையில், மிருகங்கள் எல்லாம் ஜோன்ஸையும், அவன் வேலையாட்களையும் பண்ணைக்கு அப்பால் துரத்திவிட்டு வெளிக் கதவையும் படாரென்று சாத்திப் பூட்டிவிட்டன. 'என்ன நடக்கிறது?' என்கிற விஷயம் அவர்களுக்கே நன்றாகத் தெரியும் முன் புரட்சி நடந்தேறிவிட்டது. மிருகங்களுக்கு வெற்றியும் கிட்டிவிட்டது. ஜோன்ஸை வெளியேற்றியாகிவிட்டது. பெரிய பண்ணை மிருகங்களுக்குச் சொந்தமாகி விட்டது.

இதெல்லாம் நடந்து சில நிமிஷங்கள் வரையில் மிருகங்களுக்கே தங்கள் அதிருஷ்டத்தில் நம்பிக்கை வரவில்லை. இப்படியும் நடந்துவிடலாம் என்று எதிர்பார்க்கவில்லை அவை. பண்ணையின் வேலிகள் ஓரமாக அவை முதல் காரியமாக ஓடிச் சுற்றி வந்தன. பண்ணையில் மனிதப்பூண்டே இல்லாமல் போய்விட்டதா என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காகவே போல அவை சுற்றிச் சுற்றி ஓடிவந்தன. மனிதர்கள் யாரும் அங்கு ஒளிந்து கொண்டிருக்கவில்லை. பிறகு அவை பண்ணைக் கட்டிடங்களை நோக்கி ஓடின. வெறுப்புக்கிலக்கான ஜோன்ஸ் ஆட்சியின் கடைசிச் சின்னங்களை அடியோடு அழித்துவிட அவை முயன்றன. குதிரை லாயத்துக் கப்பாலிருந்த கொட்டிலில், சேணங்கள், கடிவாளங்கள், மூக்கணாங் கயிறுகள், வளையங்கள் எல்லாம் வைக்கப்பட்டிருந்தன. இன்னும் நாய்ச் சங்கிலிகள், ஆடுகளுக்கும், பன்றிகளுக்கும் காய்வெட்டுவதற்காக ஜோன்ஸ் வைத்திருந்த கொடிய கத்திகள், எல்லாவற்றையும், ஒன்றின்பின் ஒன்றாக, கிணற்றுக்குள் எடுத்து எறிந்துவிட்டன மிருகங்கள். எரிக்கக் கூடிய கயிறுகள், கடிவாளங்கள், கண் மூடிகள், வாய்ப் பூட்டுகள், உணவு தின்ன வாயில் கட்டப்படும் பைகள் எல்லாம் கொல்லையில் எரிந்து கொண்டிருந்த செத்தை குப்பை சொக்கப்பனையில் போட்டு எரிக்கப்பட்டனை. சாட்டைகளையெல்லாம் எடுத்து எரிந்து கொண்டிருந்த நெருப்பில் போட்டுவிட்டன. சாட்டைகள் எரிவதைக் கண்டு ஆனந்தக் கூத்தாடிக் களித்தன மிருகங்கள் எல்லாம். சந்தை நாட்களில் குதிரைகளை அழகுபடுத்துவதற்கென்று வைத்திருந்த ரிப்பன்கள், குஞ்சங்கள், எல்லாவற்றையும் ஸ்நோபால் எடுத்து நெருப்பில் போட்டுவிட்டது.

''ரிப்பன்களும், குஞ்சங்களும் துணிகளைப் போலத்தான். அவை மனிதனின் சின்னங்கள். மிருகங்கள் நிர்வாணமாகத்தான் இருக்க வேண்டும்'' என்றது ஸ்நோபால்.

இதைக்கேட்ட பாக்ஸர் வெய்யில் நாட்களில் ஈக்கள் தொந்திரவு செய்யாதிருப்பதற்காகத் தான் அணிந்து வந்த தொப்பியைக் கூடக் கொணர்ந்து நெருப்பில் போட்டு விட்டது.

மிஸ்டர் ஜோன்ஸின் ஞாபகத்தை உண்டாக்கக் கூடிய எல்லாமே சிறிது நேரத்துக்குள்ளாகவே அந்தப் பண்ணையிலிருந்து அகற்றப்பட்டுவிட்டது. தீவனம் சேமித்து வைத்திருந்த கொட்டிலுக்கு மிருகங்களை எல்லாம் அழைத்துச் சென்று நெபோலியன் இரண்டு நாள்

தீனியை ஒரே நாளில் சாப்பிடத் தந்தது. நாய்கள் ஒவ்வொன்றுக்கும் இரண்டிரண்டு பிஸ்கோத்துகள் தரப்பட்டன. பிறகு 'இங்கிலாந்தின் மிருகங்கள்' என்கிற பாட்டை ஏழுதரம் திரும்பத் திரும்ப ஆரம்ப முதல் முடிவுவரை எல்லா மிருகங்களுமாகச் சேர்ந்துகொண்டு உரக்கப்பாடின. அதற்குப் பிறகு அவை இரவு படுத்து உறங்கின. அன்று உறங்கியதுபோல அவை அதற்குமுன் என்றும் உறங்கியதில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

ஆனால் அவை எப்போதும்போல அதிகாலையிலே எழுந்துவிட்டன. மீண்டும் முந்திய இரவு நடந்த அற்புதமான புரட்சி ஞாபகம் வரவே, அவை ஒரே வேகமாகப் புல்வெளியில் பாய்ந்தோடின. புல்வெளியிலே சிறிது தூரத்தில் ஒரு பெரிய மேடு இருந்தது. அங்கிருந்து பார்த்தால் பண்ணை பூராவும் தெரியும். மிருகங்கள் எல்லாம் ஓடிப்போய் அந்த மேட்டின் மேலே நின்று பளிச்சென்று அடித்த காலை வெய்யில் ஒளியிலே சுற்று முற்றும் பார்த்தன. ஆம், அந்தப் பண்ணை பூராவும் மிருகங்களுடையதாகிவிட்டது. எல்லாம் மிருகங்களுடையதுதான். கண்ணுக் கெட்டியவரையில் எல்லாமே அவற்றின் சொத்துத்தான் இப்போது. அந்தச் சிந்தனை தந்த ஆனந்தத்திலே, குதூகலத்திலே, அவை ஆனந்த நடனமாடின; குதித்துக் குதித்துக் கும்மாளம் போட்டன. தரையைவிட்டு எம்பி எம்பிக் குதித்தன, எகிறிக் குதித்து விளையாடின. பனியும், புல்லும் நிறைந்த தரையிலே விழுந்து புரண்டன. கோடை காலத்துப் புல்லைக் கடித்து மென்று அசைபோட்டன, பூமியின் மணத்தை முகர்ந்து பார்த்தன. கருத்த மண்ணைத் தங்கள் கால்களால் உதைத்துக் கிளப்பின. மீண்டும் ஒரு தரம் பண்ணை பூராவையும் சுற்றிப் பார்த்து வந்தன. எல்லாம் எப்படியிருக்கின்றன என்று பார்வையிட்டன. பேச்சுக் கூட்டாமல் அவை வயல் வெளி, புல்தரை, பழத்தோட்டம், குளம் குட்டை எல்லாவற்றையும் பார்வையிட்டு இன்பமுற்றன. இவற்றையெல்லாம் அவை அதற்கு முன் பார்த்ததேயில்லையோ என்று சொல்லும்படியாகப் புதுக் கண்கொண்டு பார்த்தன. இவையெல்லாம் தங்களுடையதாகி விட்டன என்பதை அவற்றால் இன்னமும்கூட நம்பமுடியாமல்தான் இருந்தது.

பிறகு அவை வரிசையாகப் பண்ணைக் கட்டிடங்களை நோக்கி நடந்தன. மௌனமாகக் கதவுக்கு வெளியே நின்றன. அந்த வீடும் மிருகங்களுக்குத்தான் சொந்தம் இப்போது. ஆனால் அவை வீட்டிற்கு உள்ளே போகப் பயப்பட்டன. ஒரு விநாடி தயங்கிய பிறகு, ஸ்நோபாலும்

நெபோலியனும் கதவை முட்டித் திறந்து கொண்டு உள்ளே போயின. அவற்றைத் தொடர்ந்து மற்ற மிருகங்களும் ஒன்றன்பின் ஒன்றாக உள்ளே போய்ப் பார்த்தன. மிகவும் ஜாக்கிரதையாக எதையும் மிதித்து உடைத்துவிடாமல் அவை அடிமேல் அடி வைத்து நடந்தன. இரைந்துகூடப் பேச அவற்றிற்கு மனம் வரவில்லை; அவ்வளவு பயமாக இருந்தது. பயத்துடனும் ஆச்சரியத்துடனும் மனிதனின் படாடோபமான வாழ்வின் சின்னங்களை, ஆடம்பரமான பொருள்களை அவை பார்வையிட்டன. மிருதுவான மெத்தைகளையும், முகம் பார்க்கும் பெரிய கண்ணாடிகளையும், குதிரை மயிர் நிரப்பிய ஸோபாவையும், ப்ரஸ்ஸல்ஸ் விரிப்புகளையும், கணப்பு மேட்டுக்கு மேலே மாட்டப்பட்டிருந்த விக்டோரியா ராணியின் படத்தையும் பார்த்த பிறகுங்கூட அவற்றிற்கு இத்தனை ஆடம்பரமான பொருள்கள் இருக்க முடியும் என்று நம்பிக்கை வரவில்லை. மாடியை யெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டுக் கீழே இறங்கி வந்துகொண்டிருக்கும்போது, மாலியைக் காணோமென்பது அவர்களுக்குத் தெரிந்தது. திரும்பிப் போய்ப் பார்க்கும்போது, மாலி எசமானியம்மாளின் சிறந்த படுக்கையறையில் தங்கிவிட்டாள் என்பது தெரியவந்தது. மிஸ்ஸிஸ் ஜோன்ஸினுடைய உடுப்பு மேஜையிலிருந்து ஒரு நீல ரிப்பனை எடுத்துத் தன் தோள்மேல் போட்டுக் கொண்டு தன் அழகை நிலைக்கண்ணாடியில் பார்த்து ஆனந்திப்பதில் ஈடுபட்டிருந்தது மாலி. நிலைக்கண்ணாடியைப் பார்த்து அது பல்லையிளித்துக் கொண்டிருந்தது அசட்டுத்தனமாக இருந்தது. மற்ற மிருகங்கள் மாலியைத் திட்டி அதற்குப் புத்திபுகட்ட முயன்றன. சமையலறையில் உத்தரங்களிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த இறைச்சித் துண்டங்களில் சிலவற்றை எடுத்துக் கொண்டுபோய் வெளியே புதைத்துவிட்டன. பீர் பீப்பாயை ஒரு உதை உதைத்து பாக்ஸர் ஓட்டை பண்ணிவிட்டது. பீர் பூராவும் தரையில் விழுந்து சாக்கடை வழியாக ஓடிவிட்டது. மற்றப்படி அந்தப் பண்ணை வீட்டில் அந்த மிருகங்கள் எதையும் தொடவில்லை. அந்த இடத்திலேயே அந்தப் பண்ணை வீட்டை ஒரு காட்சிச் சாலையாக வைத்துக் காப்பாற்றுவது என்று மிருகங்கள் ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றி வைத்தன. ஆனால் உள்ளே போய் மிருகங்களில் எதுவும் குடியேறக் கூடாது என்றும் ஏகமனதாக ஒரு தீர்மானம் செய்து நிறைவேற்றின.

காலை உணவெல்லாம் ஆன பிறகு ஸ்நோபாலும், நெபோலியனும் எல்லா மிருகங்களையும் மீண்டும் ஒன்றாகக் கூட்டின.

ஸ்நோபால் பேசிற்று: "தோழர்களே! இப்போது மணி ஆறரை. பகற்பொழுது கழிவதற்கு இன்னும் எவ்வளவோ நேரம் இருக்கிறது. புல் அறுவடை செய்து சேமித்து வைக்கிற காரியத்தை இன்று நாம் தொடங்கி விடுவோம். ஆனால் அதைத் தொடங்கு முன் அவசரமாகச் செய்ய வேண்டிய காரியம் ஒன்று இருக்கிறது."

இப்பொழுது தான் பன்றிகள் முதல் தடவையாகத் தங்கள் ரகசியத்தை வெளியிட்டன. சென்ற மூன்று மாதங்களாக அவை தாங்களாகவே ஒரு பழைய பாடப் புஸ்தகத்தை வைத்துக் கொண்டு எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டிருந்தன. அந்தப் பழைய பாடப் புஸ்தகம் மிஸ்டர் ஜோன்ஸின் குழந்தைகளுடையது – அதைக் குப்பை மேட்டில் கண்டெடுத்து அந்தப் பன்றிகள் அதிலிருந்து பாடங்களைப் படித்துக் கொண்டன. நெபோலியன் கருப்பு, வெள்ளை வர்ணங்கள் கரைத்து வைத்திருந்த சட்டிகளைக் கொண்டுவரச் சொல்லிற்று. எல்லா மிருகங்களுமாக வெளி வாசல்வரையில் சேர்ந்ததே போயின. ஸ்நோபாலுக்குத் தான் எழுதுவதில் அதிகத் தேர்ச்சி இருந்தது என்று தெரிய வந்தது. அது தன் முன்னங் கால்களால் ஒரு வர்ண புருசைப் பிடித்துக் கொண்டு கேட்டின் மேல் எழுதியிருந்த பெரிய (மேனர்) பண்ணை என்பதை வெள்ளை வர்ணம் வைத்து அழித்துவிட்டு, அந்த இடத்தில் **மிருகங்கள் பண்ணை** என்று எழுதியது. இப்பொழுது முதல் அந்தப் பண்ணைக்கு அது தான் பெயர். இது முடிந்ததும் மீண்டும் பண்ணை வீட்டு வாசலில் வந்து கூடின. அங்கே ஸ்நோபாலும், நெபோலியனும் ஒரு ஏணியைக் கொண்டு வரச் செய்தன. பெரிய கொட்டகையின் சுவரிலே ஏணி சார்த்தி வைக்கப்பட்டது. மூன்று மாதங்களாகப் பன்றிகள் யோசித்துச் சிந்தித்து 'மிருகங்கள் தத்துவ'த்தை ஏழு எளிய விதிகளில் அடக்கி விட முடியும் என்று கண்டுபிடித்திருந்தன. அந்த ஏழு மிருக விதிகளும் இப்பொழுது அந்தச் சுவரில் எழுதப்படும் என்று அறிவிக்கப்பட்டது. அன்று முதல் என்றும் மிருகங்கள் பண்ணையில் வாழும் மிருகங்கள் எல்லாம் அந்த அசைக்க முடியாத விதிகளின்படி வாழ வேண்டும். பன்றி ஏணி ஏறுவது என்பது என்ன சொன்னாலும் சிரமமான காரியம் தான் அல்லவா? மிகவும் சிரமப்பட்டு ஸ்நோபால் ஏணியில் ஏறி அந்த ஏழு விதிகளையும் சுவரில் எழுதியது. நாலுபடிகள் கீழே நின்று கையில் வர்ணச் சட்டியுடன் இதில் உதவி செய்தது ஸ்க்வீலர், தார் அடித்திருந்த கருப்புச் சுவரிலே, பெரிய வெள்ளை வர்ண எழுத்துக்களில் ஸ்நோபால் எழுதியது. அந்த எழுத்தை வெகு தூரத்துக்கப்பாலிருந்து பார்க்கும்படியாகப் பெரிதாக எழுதியது ஸ்நோபால். அந்த விதிகள் பின் வருவனவாகும்.

**ஏழு தவிர்க்க முடியாத விதிகள்:**

1. இரண்டு காலில் நடப்பவையெல்லாம் நம் விரோதிகள்.
2. நாலு காலில் நடப்பதும், இறக்கையுள்ளதும் நமது நண்பர்கள்.
3. மிருகம் எதுவும் துணிகள் அணிய கூடாது.
4. மிருகம் எதுவும் படுக்கையில் படுத்து உறங்கக் கூடாது.
5. மிருகம் எதுவும் மது அருந்தக் கூடாது.
6. மிருகம் எதுவும் மற்ற மிருகம் எதையும் கொல்லக் கூடாது.
7. எல்லா மிருகங்களும் சரிநிகர் சமானமானவை.

நேர்த்தியான எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தன. இந்த விதிகள் எல்லாம், ஒன்றிரண்டு எழுத்துப் பிழைகள் மட்டுமிருந்தன. ஒரு 'நா'வன்னா தலை கீழாக விழுந்துவிட்டது. ஒரு 'டா'வன்னாவுக்குக் கால்வாங்க மறந்து போய்விட்டது, மற்றப்படி எல்லாவற்றையும் சரியாகவே எழுதிவிட்டது ஸ்நோபால், மற்றவர்கள் அதையெல்லாம் சரிவரப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக ஸ்நோபால் இந்த விதிகளை எழுதிய பின் மீண்டும் ஒரு தரம் உரக்க வாசித்துக் காண்பித்தது, எல்லா மிருகங்களும் புரிந்து விட்டதாகத் தலையை அசைத்து இந்த விதிகளை ஆமோதித்தன. கெட்டிக்கார மிருகங்களிற் சில உடனேயே இந்த விதிகளை உருப்போடவும் தொடங்கி விட்டன.

இது ஆன பிறகு வர்ண புருசைக் கீழே போட்டுவிட்டு, ஸ்நோபால் உரத்த குரலில் சொல்லிற்று, "தோழர்களே! இப்போது நாம் எல்லோரும் புல்வெளிக்குச் செல்வோம். ஜோன்ஸும் அவன் ஆட்களும் செய்வதைவிட அதி சீக்கிரமாக நாம் புல் அறுவடையை முடித்து விட வேண்டும் என்கிற கொள்கையுடன், திட சித்தத்துடன் அந்த வேலையில் ஈடுபடுவோம்."

இதை ஸ்நோபால் சொல்லி முடிப்பதற்கும், கொஞ்ச நேரமாக என்னவோபோல இருந்த மூன்று பசுக்களும் உரக்க கூவத் தொடங்குவதற்கும் சரியாக இருந்தது. இருபத்து நாலு மணி நேரமாகப் பால்

கறக்கப்படாதிருந்த அவை மடிகள் நிரம்பி வெடித்து விடும்போல இருந்ததனால் இப்படிக் கத்தின. சிறிது நேரம் யோசனை செய்துவிட்டு பன்றிகள் வாளிகளைக் கொண்டு வரச் சொல்லி, சுமாராக வெற்றிகரமாக மாடுகளைக் கறந்துவிட்டன; பன்றிகளின் முன்னங் கால்கள் இந்தக் காரியத்துக்கு ஓரளவு ஏற்றவையாக இருந்தன என்றுதான் சொல்ல வேண்டும். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் ஐந்து வாளிகள் நிறைய நுரையுடன் வெண்மையான பால் கறந்தாகி விட்டது. பல மிருகங்கள் இந்தப் பாலை அதிகக் கவனத்துடன் பார்த்தன.

"இத்தனை பாலும் என்ன ஆகப்போகிறது?" என்று ஏதோ ஒரு மிருகம் கேட்டது.

"எங்கள் உணவில் சில சமயம் ஜோன்ஸ் பாலைக் கலந்து தருவது வழக்கம்" என்று பெட்டைக் கோழிகளில் சில சொல்லி வைத்தன.

நெபோலியன் பால் வாளிகளுக்கு முன் போய் நின்று கொண்டு சொல்லிற்று: "தோழர்களே! இப்போது இந்தப் பாலைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். அதைக் கவனித்துக் கொள்ள ஆள் இருக்கிறது. புல் அறுவடைதான் இப்போது மிக மிக முக்கியமான காரியம். தோழர் ஸ்நோபால் வழிகாட்டும். இன்னும் சில நிமிஷ நேரத்தில் நானும் வந்துவிடுவேன் முன்னேறுங்கள் தோழர்களே– புல் அறுவடைக்கு முன்னேறுங்கள்"

ஆகவே அறுவடையைத் தொடங்க மிருகங்கள் எல்லாம் கூட்டமாகப் புல் வயலை நோக்கி ஆர்வத்துடன் கிளம்பின. மாலையில் அவை திரும்பி வந்தபோது வாளிகளிலிருந்து பால் எங்கேயோ மறைந்துவிட்டது. ●

# 3

புல்லை அறுவடை செய்து கொணர்ந்து சேர்க்க மிருகங்கள் எவ்வளவு பாடுபட்டன! ஆனால் அவ்வளவு பாடும் வீணாகவில்லை. பலன் தந்தது என்றுதான் சொல்ல வேண்டும். அவை எதிர்பார்த்ததைவிடவும் அதிகமாகப் புல் அறுவடையாயிற்று.

சில சமயம் வேலை மிகவும் கடினமாகத்தான் இருந்தது. மனிதர்களுக்காகச் செய்யப்பட்ட ஆயுதங்களைக் கொண்டு வேலை செய்வது என்றால் மிருகங்களுக்குச் சிரமமாகத்தானே இருக்க முடியும்? பின்னங்கால்களால் நிமிர்ந்து நின்று கொண்டு உபயோகிக்க வேண்டிய ஆயுதம் எதையும் மிருகங்களால் உபயோகிக்க முடியவில்லை. ஆனால் எவ்வளவு சிரமமான பிரச்சனையையும் தீர்த்து வைத்துவிடக் கூடிய சாமர்த்தியம் பன்றிகளுக்கு இருந்தது; என்ன சங்கடம் வந்தாலும் அதற்கு ஒரு வழிகண்டுபிடித்து முன்னேறும் சாமர்த்தியம் அவற்றிற்கு இருந்தது. குதிரைகளுக்கோவெனில், வயலில் ஒவ்வொரு அங்குலமும் தெரியும். அறுத்துக் கட்டுக் கட்டுவது

பற்றி ஜோன்ஸுக்கோ அவன் ஆள்களுக்கோ தெரிந்ததைவிட அதிகமாகவே அந்தக் குதிரைகளுக்குத் தெரிந்திருந்தது. பன்றிகள் தாங்களே எந்த வேலையையும் செய்யவில்லை; ஆனால் எங்கு எந்த வேலை நடந்தாலும் அவை அங்கு நின்று, வேலையை 'இப்படிச் செய்ய வேண்டும்,' 'அப்படிச் செய்ய வேண்டும்' என்று மேற்பார்வை பார்த்து நடத்தி வைத்தன. அவற்றிற்கிருந்த மேலான அறிவைக் கொண்டு அவை இந்த மேற்பார்வை பார்க்கும் வேலையைத்தான் செய்ய முடியும். அதுதான் இயற்கை என்று மற்ற மிருகங்கள் எல்லாம் நினைத்தன. அவை தலைமை தாங்கப் பிறந்த மிருகங்கள். அந்த நாட்களில் குதிரைகளுக்குக் கடிவாளங்களோ, சேணங்களோ தேவைப்படவேயில்லை – அதில் சந்தேகமில்லை. பாக்ஸரும், க்ளோவரும் தாமாகவே போய் நின்று அறுப்பு யந்திரத்தையோ, போர் போடும் யந்திரத்தையோ தாமாகவே இழுக்கும்; வயலில் நேராகக் குறுக்கும் நெடுக்கும் யந்திரத்தை இழுத்துக்கொண்டு நடக்கும். ஒரு பன்றி அவற்றின் பின் நடந்துகொண்டே "வேகமாகப்போ, தோழா!" என்று சொல்லும். மிருகங்களில் மிகவும் சிறியவையும், அற்பமானவையுங்கூட இந்தப் புல் அறுவடை வேலையில் ஈடுபட்டுத் தங்களாலானதைச் செய்தன. நாள் பூராவும் வெய்யிலில் அங்கும் இங்கும் போய், வாத்துக்களும் கோழிகளும்கூட, தங்கள் அலகுகளில் புல்லைக் கொத்திக் கொணர்ந்து சேர்த்து போர்போட உதவின. கடைசியில் பார்க்கும் போது ஜோன்ஸும், அவன் வேலையாட்களும் அறுவடை செய்து முடிப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பே மிருகங்கள் புல் அறுவடையைச் செய்து முடித்துவிட்டன. பண்ணையிலே அதுவரை கண்டிராத பெரிய அறுவடையாகவும் இருந்தது அது. ஏனென்றால், எங்கும் ஒரு துளிப்புல்லோ வைக்கோலோ வீணாகிவிடாமல் பார்த்துக் கொண்டன. கோழிகளும் வாத்துக்களும், ரொம்பச் சிறிதாயிருந்த புல்லைக்கூட அவை கொணர்ந்து சேர்த்துவிட்டன, அது மட்டுமல்ல; பண்ணையிலிருந்த மிருகங்களில் எதுவும் ஒரு வாய்ப்புல் கூடத் திருடித் தின்னவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்தக் கோடை பூராவும் பண்ணை வேலைகள் எல்லாம் ஒன்றன் பின் ஒன்றாகத் தவறாமல் வரிசைக் கிரமமாக நடைபெற்றன. அந்த மிருகங்கள் கற்பனையில்கூட நினைத்துப் பார்த்ததில்லை, அவ்வளவு சந்தோஷமாகத் தங்களால் வாழ்க்கை நடத்த முடியும் என்று! ஒவ்வொரு வாய் உணவும் ஆனந்தம் தருவதாக இருந்தது அந்த மிருகங்களுக்கு. அவ்வளவும்

அவையே சம்பாதித்துச் சாப்பிட்ட உணவல்லவா? தங்களுக்காகத் தாங்களே சம்பாதித்துக் கொண்ட உணவு அல்லவா அது! மனசில்லாமல் எஜமானன் கஷ்டப்பட்டுக் கொடுத்த உணவல்லவே அது! ஒன்றுக்கும் உபயோகமில்லாத அண்டிப் பிழைத்து அடித்துப் பிடுங்கிக் கொள்ளும் மனிதர்களைத் துரத்திய பின் இப்போது ஒவ்வொரு மிருகமும் சாப்பிடுவதற்கு ஏராளமான உணவு இருந்தது. மிருகங்களுக்குப் பண்ணை நடத்துவதில் அனுபவம் போதாது என்றாலும்கூட, வேலை நேரத்துக்குப் பின்னும் ஏராளமான ஓய்வு நேரம் இருந்தது. மிருகங்கள் இந்த வேலையில் பல கடினமான விஷயங்களை, கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டியதாக இருந்தது. உதாரணமாக, வருஷத்தில் பின் பகுதியில் தானியங்களை அறுபவடை செய்யும்போது, அவை மிகவும் பழைய பாணியில், அறுத்த கட்டுகளைக் காலால் மிதித்துத் தானியங்களை உமியினின்றும் மூச்சால் ஊதிப் பிரித்துச் சேகரம் செய்ய வேண்டியதாக இருந்தது. அந்தப் பண்ணையில் அறுவடை செய்த தானியங்களை அடித்துப் பிரிக்க யந்திரங்கள் எதுவும் இல்லை. ஆனால் பன்றிகளின் சாமர்த்தியமும், பாக்ஸரின் பலம் பொருந்திய தோள்களும் எந்த சிரமத்தையும் சமாளித்துக் கொள்ளும் சாமர்த்தியம் வாய்ந்தவையாக இருந்தன. பாக்ஸரைப் பார்த்து எல்லா மிருகங்களும் ஆச்சரியப்பட்டன. ஜோன்ஸின் காலத்திலேயே அது மிகவும் கடினமான வேலைகளையும் சமாளித்துச் செய்யும் சக்தி வாய்ந்த மிருகமாகத் தான் இருந்தது. ஆனால் இப்போது அது ஒரே மிருகமா, அல்லது மூன்று மிருகங்களின் பலத்தைப் படைத்த மிருகமா என்று சொல்ல முடியாதபடி வேலை செய்தது. சில நாட்களில் பண்ணை வேலை முழுவதுமே அதன் தலையில் விழுந்து விட்டதோ என்று கருதும்படியாக அவ்வளவு வேலை செய்தது அது. அதிகாலை நேரம் முதல் இரவு வரையில் அது ஓயாமல் ஒழியாமல் வேலை செய்து கொண்டே இருந்தது – எதையாவது இழுத்துக் கொண்டிருக்கும். அல்லது எதையாவது தள்ளிக் கொண்டிருக்கும். கடினமான வேலை எங்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறதோ அங்கே பாக்ஸரைக் காணலாம். சேவல் கோழி ஒன்றுடன் அது ஏற்பாடு செய்து கொண்டிருந்தது – அதிகாலையிலே சேவல் கூவித் தன்னை எழுப்பி விட வேண்டும் என்று. மற்ற மிருகங்கள் எழுந்திருப்பதற்கு அரை மணி நேரம் முன்னதாகவே பாக்ஸர் எழுந்துவிடும். மிகவும் அவசியமான வேலை என்று எது இருந்ததோ அதைச் செய்வதில் தானாகவே தேடிப் போய்க் கவனம் செலுத்தியது அது. கடினமான

வேலைகள் பலவற்றை அது தானாகவே, மற்ற மிருகங்கள், எழுந்து வருவதற்கு முன்னதாகவே எழுந்து செய்து முடித்துவிடும். சாதாரணத் தினசரி வேலை தொடங்கு முன் தன் வேலையைத் தொடங்கிவிடும். எந்தப் பிரச்னைக்கும், எந்தச் சிரமத்துக்கும் அது அளித்த பதில் ஒன்றே தான். "நான் இன்னும் கொஞ்சம் சிரமப்பட்டு வேலை செய்வேன்!" இதையே அது தன் வாழ்க்கையின் முக்கிய நோக்கமாக ஏற்றுக் கொண்டுவிட்டது.

ஆனால் ஒவ்வொரு மிருகமும் அதனதனுடைய சக்திக்கேற்றபடி உழைத்து வந்தது. கோழிகளும் வாத்துக்களும் தங்கள் மூக்கால் கொத்திக் கொத்தி, சிதறிக் களத்தில் விழுந்த தானியங்களை எல்லாம் கொணர்ந்து களஞ்சியத்தில் சேர்த்தன. யாரும் திருடவில்லை, வேலை அதிகம் என்று யாரும் முணுமுணுக்கவில்லை. தின்பதற்குக் கிடைத்த தீனி போதாது என்று யாரும் முகத்தைக் காட்டவில்லை. ஒன்றுக் கொன்று அடிப்பது, உதைத்துக் கொள்வது, சண்டைபோடுவது, பொறாமைப்படுவது என்பதெல்லாம் மறைந்துவிட்டன. முன்பு மிகவும் சகஜமாகவும் தினசரிக் காரியங்களாகவு மிருந்த இவையெல்லாம் இப்போது அடியோடு மறைந்துவிட்டன. வேலை செய்வதற்கு எந்த மிருகமும் மறுக்கவில்லை; வேலை செய்யாமல் சோம்பேறியாக இருக்க எந்த மிருகமும் விரும்பவில்லை. 'எந்த மிருகமும்' என்று சொல்வதற்குப் பதில் 'அநேகமாக எந்த மிருகமும் என்று சொல்வது தான் பொருந்தும். ஏனென்றால், மாலிக்கு எந்த வேலையும் செய்யத் தெரியவில்லை – செய்த வேலையும் சரிவரச் செய்யப்படவில்லை. உண்மையில், அதனால் அதிகாலையில் எழுந்திருக்க முடியவில்லை. மாலையிலும், காலில் ஏதோ கல் குத்திவிட்டது என்று சாக்குச் சொல்லிவிட்டு, எல்லா மிருகங்களுக்கும் முன்னதாக அது வேலையை விட்டு வரும். பூனையின் பழக்க வழக்கங்களும் காரியங்களும் வழக்கம் போலவே ஒரு தினுசாகத்தான் இருந்தன. ஏதாவது வேலை என்று நடந்து கொண்டிருந்த இடத்தில் அந்தப் பூனையைப் பார்க்கவே முடியாது. மணிக்கணிக்காக அது யார் கண்ணிலும் படாமல் எங்காவது போய்விடும். சாப்பாட்டு சமயத்தில் தான் திரும்பி வரும்; அல்லது, வேலையெல்லாம் முடிந்த பிறகு, இரவில் எதுவும் தவறு செய்தறியாதது போல, வந்து சேரும். தான் வேலை செய்ய வராததற்குச் சாக்குப் போக்குகள் கண்டுபிடித்துச் சொல்வதிலே அது மிகவும் சாமர்த்தியசாலி; அல்லது ஒன்றுமே வாய்திறந்து சொல்லாமல், யாரோடாவது ஒட்டிக்கொண்டு "பர் பர்" என்று அன்புக் குரல் எழுப்பும். அதன் நல்லெண்ணத்தில் நம்பிக்கை வைக்காமல் இருப்பது

என்பது சற்றுச் சிரமமான காரியம்தான். புரட்சிக்குப் பின் கிழட்டுக் கழுதை பெஞ்சமினும் எவ்விதத்திலும் அதிகமாக மாறுதல் இல்லாமல் தான் வாழ்ந்து வந்தது. பழைய பிடிவாதமான மெதுவான பாணியிலேயே அது இன்னமும் தன் வேலையைச் செய்து வந்தது. பண்ணை எஜமானாக ஜோன்ஸ் இருக்கும்போது எப்படியிருந்ததோ, அப்படியே தான் இன்னும் இருந்தது. வேலை செய்யச் சோம்பாது அது. ஆனால் சொல்லாமல் தானாக எந்த வேலையையும் செய்யவும் செய்யாது; தானாக அதிகப்படியான வேலை எதுவும் ஏற்றுக்கொள்ளாது. புரட்சியையும் அதன் பலாபலன்களையும் பற்றிக்கூட அது வாய் திறந்து எதுவும் சொல்வதில்லை. "ஜோன்ஸ் போய்விட்டானே; இப்போது உனக்குச் சந்தோஷமா இல்லையா?" என்று கேட்டால், அது பின் வருமாறு பதில் சொல்லும். கழுதைகள் நீண்ட காலம் வாழும் பிராணிகள். உங்களில் யாரும் கழுதை செத்துப் போனதைக் கண்டிருக்க மாட்டீர்கள்" என்று சொல்லும். புதிரைப் போல யாருக்கும் விளங்காதிருந்த இந்த பதிலைக் கேட்டு, மற்ற மிருகங்கள் திருப்திப் பட்டுக் கொள்ள வேண்டியதாயிற்று.

ஞாயிற்றுக் கிழமைகளில் பண்ணையில் வேலை எதுவும் கிடையாது. வழக்கமாக நடக்கிற காலத்துக்கு ஒரு மணி நேரம் தள்ளித் தான் காலை உணவு நடக்கும். காலை உணவுக்குப் பிறகு வாரம் தவறாமல் ஒரு சடங்கு நடைபெறும். முதலில் கொடி ஏற்றப்படும். சேணங்களும் மற்றும் பண்ணைச் சாமான்களும் வைக்கப்பட்டிருந்த கொட்டகையிலே மிஸ்ஸிஸ் ஜோன்ஸினுடைய பழைய மேஜை விரிப்பு ஒன்றைக் கண்டுபிடித்தது ஸ்நோபால். அதன் நிறம் பச்சை. அதில் வெள்ளை வர்ணத்தில் ஒரு குளம்பையும் ஒரு கொம்பையும் தீட்டிற்று அந்த ஸ்நோபால். இது தான் வீட்டுக்கெதிரே இருந்த தோட்டத்தில் ஒவ்வொரு ஞாயிற்றக் கிழமையும் கொடி மரத்தில் ஏற்றப்பட்ட மிருகங்களின் கொடி. இந்தக் கொடியின் வர்ணம், சின்னங்கள் எல்லாவற்றையும் ஸ்நோபால் மற்ற மிருகங்களுக்கு விளக்கிற்று. இங்கிலாந்தின் வயல்களின் சின்னமாகக் கொடி பச்சை வர்ணம் பெற்றது. அதில் தீட்டியிருந்த குளம்பும் கொம்பும் எதிர்காலத்தில் ஏற்பட இருந்த மிருகங்களின் ராஜ்யத்தை, குடியரசைக் குறிப்பதாகும். இந்தக் குடியரசு பூரணமாக ஸ்தாபிதமாகு முன் மனிதர்களை அடியோடு வேரறுத்தாக வேண்டும் என்று விவரிக்கும் ஸ்நோபால். கொடியைப் பறக்கவிட்ட பின் மிருகங்கள் எல்லாம் ஒன்றாகப் பெரிய கொட்டிலுக்குள் செல்லும் – பொதுச் சபையாகக் கூடும். கூட்டம் என்று சிறப்பாகக் கூறப்படும்

இந்தப் பொதுச் சபை அந்தக் கூட்டத்தில் தான் அடுத்த வாரத்தில் பண்ணையில் நடக்க வேண்டிய வேலைகள் எல்லாம் நிர்ணயிக்கப்படும். பல சமயங்களில் தீர்மானங்கள் சில வாசிக்கப்பட்டு விவாதிக்கப்படும். மற்ற மிருகங்களுக்கு வோட்டளிக்கத் தெரியுமே தவிர தாமாக எவ்விதத் தீர்மானத்தையும் பிரேரேபித்துப் பேசத் தெரியாது. இந்தத் தீர்மானங்களைப் பற்றிய விவாதங்களிலெல்லாம் அதிகமாகக் கலந்து கொண்டு, அதிகமாக வேலை செய்து வந்தன ஸ்நோபாலும் நெபோலியனும். ஆனால் அவை இரண்டும் எந்த விஷயம் பற்றியும் ஒத்துப் போவதில்லை என்பது சீக்கிரமே தெளிவாகத் தொடங்கியது. மற்ற மிருகங்களின் கவனத்துக்கும் இந்த வித்தியாசங்கள் அதிசீக்கிரமே வந்தன. இரண்டில் ஒன்று ஏதாவது யோசனை சொன்னால் உடனே மற்றது அதை ஆக்ஷேபிக்கக் குதித்து எழுந்துவிடும். சாதாரணமாக யாரும் ஆக்ஷேபம் சொல்ல முடியாத விஷயங்களைப் பற்றியும்கூட விவாதங்கள் பிரமாதமாக நடைபெறும். உதாரணமாக பழத் தோட்டத்துக்கு அப்பாலுள்ள வயலை வயது முதிர்ந்த வேலைக்கு லாயக்கற்ற மிருகங்களின் உபயோகத்துக்கென்று ஒதுக்கி வைப்பது என்கிற விஷயம் விவாதத்துக்கு வந்தால், இதில் ஆக்ஷேபத்துக்கு என்ன இருக்கிறது? ஆனால் விவாதம் ரொம்பக் கடுமையாக நடக்கும். ஒவ்வொரு மிருக வர்க்கமும் எந்த வயதில் வேலையிலிருந்து விலகிக் கொள்ளலாம் என்பது பற்றி ஓயாமல் தர்க்கம் செய்யப்படும். இந்தக் கூட்டங்கள் எல்லாம் 'இங்கிலாந்தின் மிருகங்கள்' என்கிற பாட்டுடன் தான் முடியும். சாதாரணமாக ஞாயிற்றுக்கிழமை மாலைகளில் மிருகங்கள் ஏதாவது பொழுது போக்கான, மனதுக்கு உத்ஸாகம் அளிக்கிற விளையாட்டுகளில் ஈடுபடும்.

முன்பு சேணங்கள் முதலியன வைக்கப்பட்டிருந்த கொட்டகையைத் தங்களுக்கென்று தலைமைக் காரியாலயமாகப் பன்றிகள் ஒதுக்கி வைத்துக் கொண்டன. இங்கே, மாலை வேளைகளில், பன்றிகள் அவசியமான பல தொழில்களைக் கற்றுக் கொண்டன. பண்ணை வீட்டிலிருந்து கொணர்ந்த புஸ்தகங்களின் உதவியால் அவை தச்சு வேலை, இரும்புப் பட்டறை வேலை முதலியவற்றைக் கற்றுக்கொண்டன. ஸ்நோபால் மிருகங்கள் பலவற்றைக் கூட்டி மிருகங்கள் கமிட்டிகள் அமைப்பதிலும் காலத்தைப் போக்கியது. இந்த வேலையில் அதற்கு அலுப்பென்பதே ஏற்படுவது கிடையாது. கோழிகளுக்காக முட்டையிடும் கமிட்டி ஒன்று, பசுக்களுக்காக வால்கள் சுத்தமாக வைத்துக் கொள்ளும் கமிட்டி ஒன்று (இதன் லக்ஷியம் எலிகளையும்

முயல்களையும் வீட்டு மிருகங்களாகப் பழக்குவதுதான்), ஆடுகளுக்காக வெண்மையான ரோமம் உற்பத்திக் கமிட்டி ஒன்று, இப்படியாக எத்தனையோ கமிட்டிகளை உற்பத்தி செய்தது ஸ்நோபால். இத்தனையும் தவிர எழுதவும் படிக்கவும் மற்ற மிருகங்களுக்குச் சொல்லித் தருவதற்காக வகுப்புகளும் நடத்தி வந்தது அது. மொத்தத்தில் சொல்லப்போனால் இந்த முயற்சிகள் எல்லாம் பெரும்பாலும் தோல்வியுற்றன என்றே சொல்ல வேண்டும். உதாரணமாக எலிகளையும் முயல்களையும் பழக்கி, வீட்டு மிருகங்களாக்கும் முயற்சி ஆரம்ப முதலே தோல்வியுற்றது என்றுதான் சொல்ல வேண்டும். அவை இந்தக் கமிட்டி செய்த எந்த முயற்சியையும் லக்ஷியம் செய்யாமல் எப்போதும் போலவேதான் நடந்து கொண்டன. தாராளத்துடன் அவற்றிற்கு ஏதாவது கொடுத்தால், வாங்கிக் கொண்டு நகர்ந்துவிடுமே தவிர, அதற்காக எவ்வித நன்றியும் பாராட்டாது. பூனைகூட இந்தக் கமிட்டியில் சேர்ந்துகொண்டு கொஞ்சநாள் மிகவும் சுறுசுறுப்பாக உழைத்தது. ஒருநாள் கூரை மோட்டில் உட்கார்ந்து கொண்டு தன் கைக்கெட்டாத தூரத்திலிருந்த சில சிட்டுகளுக்குப் பாடம் சொல்லித்தருகிற காரியத்தில் முனைந்திருந்தது. இப்போது எல்லா ஜந்துக்களும் தோழர்கள்தான் என்றும், தன்மேல் வந்து எந்த சிட்டும் எந்தச் சமயம் வேண்டுமானாலும் பயமின்றி உட்காரலாம் என்றும் அது சொல்லிக் கொண்டிருந்தது. ஆனால் அந்தப் பறவைகள் தூரத்திலேயே இருந்துவிட்டன; நெருங்கி வர அவை பிரியப்படவில்லை.

எழுதப்படிக்கச் சொல்லித் தருகிற வகுப்புகள் வெற்றிகரமாகவே நடந்தன என்று சொல்ல வேண்டும். இலையுதிர்காலம் வரும்போது பண்ணையிலிருந்த மிருகங்களில் அநேகமாக எல்லாமே ஓரளவுக்குக் கல்வியறிவு பெற்றுவிட்டன.

பன்றிகளைப் பற்றிய வரையில் அவை பூரணமாகவே எழுதப் படிக்கக் கற்றக்கொண்டுவிட்டன. நாய்களும் சுமாராகப் படிக்கக் கற்றுக்கொண்டன. ஆனால் அந்த ஏழு விதிகளைத் தவிர வேறு எதையும் படிப்பதில் அவற்றிற்கு அக்கறை உண்டாகவில்லை. முரியல் என்கிற ஆடு நாய்களைவிட நன்றாகவே படிக்கக் கற்றிருந்தது. மாலை வேளைகளில் சில சமயம் குப்பை மேடுகளில் கிடந்த பத்திரிகைத் துணுக்குகளைப் பொறுக்கி வந்து அது மற்ற மிருகங்களுக்கு வாசித்துக் காட்டும். பெஞ்சமினால் பன்றிகளைப் போலவே நன்றாகப் படிக்க முடியும். ஆனால் படிக்கிற காரியத்தை அது செய்வதில்லை; படிப்பதற்குத் தகுதியான விஷயம் எதுவும் கிடையாது என்று

அது சொல்லும். க்ளோவர் எழுத்துக்களைக் கூட்டி வார்த்தைகளை அமைக்க அதற்குத் தெரியவில்லை. பாக்ஸரால் எழுத்துக்களில் நாலாவது எழுத்தைத் தாண்ட முடியவில்லை; தாண்டிற்றானால் முதலில் கற்றக்கொண்ட நாலு எழுத்துக்களும் அதற்கு மறந்துவிடும். ஐந்தாவது எழுத்து என்ன என்று எவ்வளவு யோசித்தாலும் அதற்கு ஞாபகம் இருக்கும். முதல் நாலும் மறந்துவிடும். பின்னால் வருகிற நாலும் மறந்துவிடும். நாளடைவில் தெரிந்த நாலு எழுத்துக்களே போதும் என்று அது திருப்தியடையத் தொடங்கி விட்டது. தினம் இரண்டொரு தடவைகள் அவற்றை மட்டும் எழுதி எழுதி மறந்துவிடாமல் காப்பாற்றிக் கொண்டது அது. மாலியைப் பற்றிய வரையில் தன் பெயரில் இருந்த ஆறு எழுத்துக்களைத் தவிர வேறு எந்த எழுத்துக்களையும் கற்றுக்கொள்ள அது மறுத்துவிட்டது. மரக்குச்சிகளை வைத்து அழகாகத் தன் பெயரை அது அடுக்கி வைக்கும். பிறகு அந்தப் பெயருக்கு அலங்காரமாக மரக்குச்சிகளில் புஷ்பங்களை வைத்து ஆனந்திக்கும். தன் பெயரைச் சுற்றிச் சுற்றி வந்து களிக்கும் அது.

பண்ணையிலுள்ள மற்ற மிருகங்களில் எதுவும் முதல் எழுத்துக்கு அப்பால் போகவில்லை. அது மட்டுமல்ல; ஆடுகள், கோழிகள், வாத்துக்கள் போன்ற சமர்த்தில்லாத ஜந்துக்களால் ஏழு மிருக விதிகளைக் கூட மனப்பாடமாகக் கற்றுக்கொள்ள முடியவில்லை என்பது நாளடைவில் தெரியவந்தது. அதிக நேரம் சிந்தித்துவிட்டு ஸ்நோபால் அந்த ஏழு விதிகளின் சாராம்சத்தையும் ஒரே வாக்கியத்தில், முதுமொழியில் அடக்கிவிடலாம் என்று கூறியது. ‘‘நாலுகால் நல்லது – இரண்டு கால் கெட்டது’’ என்பதுதான் அந்த வாக்கியம். மிருகங்கள் தத்துவத்தின் அடிப்படைக் கொள்கைகள் எல்லாம் இந்த வாக்கியத்தில் அடங்கிவிட்டன என்று அது சொல்லிற்று. இதைச் சரிவர அறிந்துகொண்டவர்கள் மனிதர்களுக்கு மீண்டும் அடிமைப்பட்டுவிட மாட்டார்கள் என்றது அது; மனிதர் காற்று அவற்றை ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லிற்று அது. ‘‘எங்களுக்கு இரண்டு கால்கள் தானே இருக்கின்றன’’ என்று பறவைகள் இந்த சூத்திரத்துக்கு முதலில் ஆக்ஷேபம் தெரிவித்தன. ஆனால் இது சரியல்ல என்று ஸ்நோபால் அவற்றிற்கு நிரூபித்து விட்டது.

‘‘தோழர்களே! பறவையின் இறக்கைகள் அவற்றிற்கு கைகள் மாதிரி, எதுவும் செய்ய உபயோகப்படுவதில்லை. மேலே செல்ல, பறப்பதற்கே அவை உபயோகப்படுகின்றன. அவற்றையும் கால்கள் என்றுதான் சொல்ல

வேண்டும். ஆகவே பறவைகளுக்கு நாலு கால்கள் இருக்கின்றன'' என்று ஸ்தாபித்துத் தன் சூத்திரத்தை மெய்யாக்கியது ஸ்நோபால். ''மனிதனின் முக்கிய சின்னம் அவன் கைகள்தான், அவற்றால்தான் அவன் விஷமம் பூராவையும் செய்கிறான்'' என்றது ஸ்நோபால்.

பறவைகளுக்கு ஸ்நோபாலின் பேச்சில் வந்த பெரிய வார்த்தைகள் பல புரியவில்லை. ஆனால் அதனுடைய விவாதத்தின் முடிவை அவை ஏற்றுக்கொண்டன. மிருக வர்க்கத்திலே தாழ்ந்தவை எல்லாம் புது சூத்திரத்தை மனப்பாடமாகப் படித்துக்கொண்டன. ''நாலுகால் நல்லது – இரண்டு கால் கெட்டது'' என்கிற சூத்திரம் அந்த ஏழு மிருக விதிகளுக்கும் மேல் அதைவிடப் பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டது. இந்த சூத்திரத்தை மனப்பாடமாகக் கற்றுக் கொண்டபின், ஆடுகளுக்கு இது மிகவும் பிடித்துப்போய்விட்டது. ஆகவே சமய சந்தர்ப்பமில்லாமல் சேர்ந்து அவை தங்கள் சன்னக் குரலில் இந்த சூத்திரத்தை அடிக்கடி கோஷ்டியாகப் பாட ஆரம்பித்துவிடும். ''நாலு கால் நல்லது – இரண்டு கால் கெட்டது'' என்று மணிக்கணக்காக அவை உரக்கப்பாடிக்கொண்டே கிடக்கும்.

ஸ்நோபாலின் கமிட்டி வேலைகளில் நெபோலியன் அதிகக் கவனம் செலுத்துவதே கிடையாது. வயது வந்தவர்களுக்கு எதுவும் செய்வதைவிட வயதாகாதவர்களுக்குப் படிப்புச் சொல்லித் தருவதுதான் மிகவும் முக்கியமான விஷயம் என்று அது கருதிற்று. புல் அறுவடையானவுடனேயே ஜெஸ்ஸியும் ப்ளூபெல்லும் குட்டிகள் போட்டன; இரண்டு நாய்களினுடைய குட்டிகளுமாகச் சேர்ந்து ஒன்பது திடமான குட்டிகள் இருந்தன. பால் குடிப்பதை நிறுத்தியவுடன் அவற்றிற்குக் கல்வி கற்பிக்கும் பொறுப்பைத் தான் ஏற்றுக்கொள்வதாகக் கூறி, அவற்றின் தாய்களிடமிருந்து கொண்டு வந்துவிட்டது நெபோலியன். அவற்றை மேலே ஒரு மச்சுக்குக் கொண்டு போயிற்று. அந்த மச்சுக்கு ஏணி மூலமாகத்தான் போகலாம். நெபோலியன் அவற்றை அங்கே யாருக்கும் தெரியாமல் தனியாக வைத்திருந்தது. சில நாட்களுக்குப் பிறகு அந்த ஒன்பது நாய்க்குட்டிகளும் உயிரோடிருக் கின்றனவா, இல்லையா என்பதைக்கூடப் பண்ணையிலிருந்த மற்ற மிருகங்கள் மறந்து விட்டன.

கறந்த பாலெல்லாம் எங்கே போயிற்று என்கிற மர்மம் விரைவில் விளங்கிவிட்டது. ஒவ்வொரு நாளும் அது பன்றிகளுடைய உணவிலே கலந்துவிடப்பட்டது என்பது மற்ற மிருகங்களுக்கெல்லாம் சீக்கிரமே தெரிய

வந்தது. இந்தப் பருவத்தில் ஆப்பிள்கள் பழுக்கத் தொடங்கின. பழத்தோட்டத்திலே ஆப்பிள் பழங்கள் காற்றிலே உதிர்ந்து கிடந்தன. பண்ணை மிருகங்களுக்கு இந்த ஆப்பிள்கள் எல்லாம் சரிசமமாகப் பங்கிட்டுத் தரப்படும் என்றுதான் மிருகங்கள் சாதாரணமாக நினைத்தன. ஆனால் ஒருநாள் அப்படிச் சேர்ந்த ஆப்பிள்களை எல்லாம் பொறுக்கிக் கொணர்ந்து உக்கிராண அறையிலே சேர்த்துவிட வேண்டும் என்று ஒரு உத்தரவு பிறந்தது. அவை பன்றிகளுக்கு மட்டுமே உணவாக உபயோகப்படும் என்று உத்தரவு பிறந்தது. இதைக் கேட்ட மிருகங்களில் சில முணுமுணுத்தன. ஆனால் இந்த முணுமுணுப்பினால் பயன் எதுவும் ஏற்படவில்லை. பன்றிகள் எல்லாம் இது விஷயத்தில் ஏகமனதான அபிப்பிராயம் உள்ளவையாக இருந்தன. வழக்கமாக ஸ்நோபாலுக்கும் நெபோலியனுக்கும் இடையில்கூட இந்த விஷயத்தில் எதுவும் அபிப்பிராயபேதம் இருக்கவில்லை. தேவையான விவரங்களை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லி, விஷயத்தைப் புரிய வைப்பதற்காக ஸ்க்வீலர் என்கிற பன்றியை அனுப்பி வைத்தார்கள் தலைவர்கள்:

ஸ்க்வீலர் சொல்லிற்று: ‘‘தோழர்களே! பன்றிகளாகிய நாங்கள் இந்தக் காரியத்தைச் சுயநலம் கருதியும், ஏதோ உரிமை என்கிற ஞாபகத்திலும் செய்கிறோம் என்று எண்ணுகிறீர்களா? அப்படியெல்லாம் நினைக்காதீர்கள். ஏனென்றால் எங்களில் பலருக்குப் பாலும் பிடிக்காது – ஆப்பிள் பழமும் பிடிக்காது. எங்களில் பலருக்கு அந்த உணவு ஒத்துக் கொள்ளக்கூட ஒத்துக் கொள்ளாது. உண்மையில் எனக்கே பிடிக்காதுதான், எங்கள் உடல் நலத்தைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமே என்கிற ஒரே காரணத்துக்காகத்தான் நாங்கள் இவற்றைச் சாப்பிடுகிறோம். விஞ்ஞானம் என்ன சொல்கிறது தெரிகிறதா. தோழர்களே? ஆப்பிள் பழங்களும், பாலும் பன்றிகளின் உடல்நலத்துக்கு இன்றியமையாதவை. அவற்றிலுள்ள சத்துத்தான் பன்றிகளுக்கு அத்தியாசியமானவை என்பதை விஞ்ஞானம் சந்தேகத்துக்கிடமில்லாமல் நிரூபித்திருக்கிறது. பன்றிகளாகிய நாங்கள் மூளை வேலை செய்கிறவர்கள். இந்த மிருகங்கள் பண்ணையின் நிர்வாகமும் அமைப்பும் எங்களைப் பொறுத்ததாகவே இருக்கிறது. இரவு பகலாக உங்கள் நன்மையை நாடி நாங்கள் உழைத்து வருகிறோம். உங்கள் நலத்தைக் கருதியே நாங்கள் இந்தப் பாலை எல்லாம் குடிக்கிறோம் – இந்த ஆப்பிள்களை எல்லாம் தின்கிறோம். எங்கள் கடமையில், பன்றிகளாகிய

நாங்கள் தவறிவிட்டோமானால், உங்கள் கதி என்னவாகும் என்று ஸ்க்வீலர் தொடர்ந்தது. அது அங்குமிங்கும் குதித்துக் குதித்து, வாலை ஆட்டிக் கொண்டு தன் கட்சியை எடுத்து அழகாகப் பேசியது.'' "திரும்பி வரவேண்டும் என்று நீங்கள் யாரும் விரும்ப மாட்டீர்கள் என்பது திடம்தானே? அதில் சந்தேகத்துக்கு எதுவும் இடமில்லையே'' என்றது.

மிருகங்களுக்கு வேறு எதுவும் நிச்சயமாகத் தெரியாவிட்டாலும் – ஜோன்ஸ் திரும்பி வரக்கூடாது என்பது பற்றி அவற்றிற்கிடையே அபிப்பிராயபேதம் எதுவுமில்லை. பன்றிகளுக்குப் பாலும் ஆப்பிளும் கிடைக்காமல் போய்விட்டால் ஜோன்ஸ் திரும்பி வந்துவிடுவான் என்று சொன்னால், அவை அதற்கு மேல் செய்வதற்கு, சொல்வதற்கு என்ன இருந்தது? பன்றிகளின் உடல்நலம் பாதிக்கப்படாதிருக்க வேண்டும் என்ற முக்கியமான விஷயம் இப்போது எல்லா மிருகங்களுக்கும் சந்தேகத்துக்கிடமில்லாமல் தெள்ளென விளங்கிவிட்டது. மேலும் விவாதம் எதுவுமின்றி, பாலும் காற்றில் உதிருகிற ஆப்பிள் பழங்களும் (பின்னால் மரத்திலேயே பழுத்து உலுக்கிவிடப்பட்ட பழங்களும்தான்) பன்றிகளுக்கே உரிய உணவாகப் பயன்பட வேண்டும், வேறு எவரும் அதில் பங்கு கேட்கக்கூடாது என்று மிருகங்கள் பண்ணையில் எல்லா மிருகங்களும் ஏகமனதாக ஒப்புக் கொண்ட ஒரு விஷயமாகிவிட்டது. ●

# 4

**கோ**டையின் பிற்காலத்தில் அந்த ராஜதானியில் பெரும் பகுதியில் மிருகங்கள் பண்ணையைப் பற்றிய செய்தி பூரணமாகப் பரவி விட்டது. ஒவ்வொரு நாளும் ஸ்நோபாலும், நெபோலியனும் புறாக் கூட்டங்களை அனுப்பி, இங்கிலாந்தில் மற்ற பிரதேசங்களில் உள்ள மிருகங்களுடன் சிநேகம் செய்து கொண்டு பழகி அவற்றிக்கு மிருகங்கள் தத்துவத்தை எடுத்துச் சொல்வதுடன் இங்கிலாந்தின் மிருகங்கள் என்கிற பாட்டையும் அவற்றினிடையே பரவச் செய்தன. புரட்சியைப் பற்றிய உண்மைச் செய்திகள் இங்கிலாந்தின் மிருகங்களிடையே இப்படிப் பரவலாயின.

மிஸ்டர் ஜோன்ஸ் வில்லிங்டன் கிராமத்தில் ஒரு மதுக்கடையிலே தன் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தான். ஒன்றுக்கும் உதவாத மிருகங்கள் ஒன்று சேர்ந்து கொண்டு தன்னைத் தன் சொந்தப் பண்ணையிலிருந்து விரட்டி விட்டதாகவும் தனக்கு மகத்தான அநீதி இழைத்துவிட்டதாகவும் அவன் பலரிடம் வாய்

ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தான். மற்ற பண்ணையார்களும், குடியானவர்களும் கொள்கையளவில் அவன் கட்சிதான். ஆனால் அவர்கள் முதலில் அவனுக்கு அதிகமாக எல்லோருக்கும் மிஸ்டர் ஜோன்ஸின் துரதிருஷ்டத்தைத் தங்களுக்கு லாபகரமானதாக எப்படி உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்கிற எண்ணமே மேலோங்கி நின்றது. மிருகங்கள் பண்ணைக்கு அருகே இருந்த இரு பண்ணைகளின் சொந்தக்காரர்கள் சதா ஒருவரொடொருவர் விரோதம் பாராட்டிக் கொண்டிருந்தார்கள். இது மிருகங்கள் பண்ணைக்குச் சாதகமாக இருந்தது. பாக்ஸ்வுட் என்று பெயருள்ள இந்தப் பண்ணைகளில் ஒன்று பெரிய பண்ணை – ஆனால் அது சரிவரக் கவனிக்கப்படாமல் இருந்தது; மிகவும் பழமையான முறையில் நடத்தப்பட்டு வந்தது; அதிலே பெரும்பகுதி காடாகத்தான் இருந்தது. அதிலே அதிகமாகப் புல் விளைவதில்லை. அதன் வேலிகள் பல இடங்களில் முறிந்து கிடந்தன. அந்த மாதிரி வேலிகள் இருப்பதே அவமான கரமான விஷயம் என்று தான் சொல்ல வேண்டும். அதன் சொந்தக்காரன் மிஸ்டர் பில்கிங்டன், தன்னையோ பிறரையோ அதிகமாகச் சிரமப்படுத்திக் கொள்ளாமல் பண்ணையை நடத்தி வந்தான். அவன் பொழுதில் பெரும்பகுதி, பருவத்திற் கேற்றபடி மீன் பிடிப்பதிலும் வேட்டையாடுவதிலும் கழிந்துவிடும். மறுபக்கம் இருந்த பண்ணையின் பெயர் பிஞ்ச்ஃபீல்டு. அது பாக்ஸ்வுட்டைவிடச் சிறிய பண்ணை. பாக்ஸ்வுட்டைவிட நன்றாகவும் நடத்தப்பட்டு வந்தது. அதன் சொந்தக்காரனின் பெயர் மிஸ்டர் ஃப்ரடெரிக், அவன் அழுத்தமானவன் கெட்டிக்காரன்; எப்போதும் ஏதாவது வியாஜ்ஜியத்தில் ஈடுபட்டிருப்பான்; பேரம் செய்வதிலே வல்லவன் என்று புகழ் பெற்றவன். பில்கிங்டனுக்கும் ஃப்ரடெரிக்குக்கும் ஆகவே ஆகாது. ஒருவரிடம் மற்றொருவருக்கு இருந்த வெறுப்பு காரணமாக அவர்கள் எந்த விஷயம் பற்றியும் எவ்விதமான ஏகோபித்த முடிவுக்கும் வந்து எதுவும் செய்துவிட மாட்டார்கள். தங்களுக்கு நன்மை பயக்கிற காரியமானாலும்கூட அவர்களால் ஒன்று சேரமுடியாது என்றுதான் சொல்ல வேண்டும்.

அப்படியிருந்தும் மிருகங்கள் பண்ணையில் ஏற்பட்ட புரட்சி காரணமாக அவர்கள் இருவருக்குமே அடிப்படையாக ஒரு பயம் தோன்றிவிட்டது. அந்தப் புரட்சியைப் பற்றித் தங்கள் பண்ணை மிருகங்கள் எதுவும் அறிந்து கொள்ளாதிருக்க வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். அவை அறிந்து கொள்ளாதிருப்பதற்கான ஏற்பாடுகளைச்செய்தார்கள். முதலில், வெறும் பாசாங்குக்காக 'மிருகங்களாவது, பண்ணை வேலைகளைச் செய்து

சமாளிப்பதாவது' என்று சிரித்து அலக்ஷியம் செய்தார்கள். ஒரிரண்டு வாரங்களில் எல்லாம் பழைய மாதிரி ஆகிவிடும் என்றும் அவர்கள் கூறினர்கள். இன்னமும் அவர்கள் பெரிய (மேனர்) பண்ணை என்றே அதைக் குறிப்பிட்டார்கள்: மிருகங்கள் பண்ணை என்கிற பெயரை அவர்கள் ஏற்றுக்கொள்ள மறுத்தார்கள்.அதை அனுமதிக்க முடியாது என்றார்கள் அவர்கள். அந்தப் பண்ணையில் புரட்சி செய்த மிருகங்கள் தங்களுக்குள் ஒயாமல் சண்டையிட்டுக் கொண்டு, தின்ன உணவு கிடைக்காமல் அரைப்பட்டினி கிடக்கின்றன என்று வதந்திகளைக் கிளப்பிவிட்டார்கள். சீக்கிரமே போதிய உணவில்லாமல் பட்டினியால் மெலிந்துவாடி அவை இறந்து போய்விடும் என்றும் சொன்னர்கள். காலம் சென்றது; புரட்சி மிருகங்கள் பட்டினி கிடந்து சாகவில்லை என்பது சந்தேகத்துக் கிடமில்லாமல் ருஜுவாகிவிட்டது. ஃப்ரடெரிக்கும் பில்கிங்டனும் தங்கள் பாட்டின் மெட்டை மாற்றிக் கொண்டனர். பயங்கரமான, பல தீயகாரியங்கள் மிருகங்கள் பண்ணையிலே நிகழ்வதாகச் சொன்னார்கள் அவர்கள். மிருகங்கள் ஒன்றையொன்று அடித்துக் கொன்று தின்று உயிர் வாழ்வதாகக் கூறினார்கள் அவர்கள். ஒருவரை யொருவர் பழுக்கக்காய்ச்சிய இரும்பாற் சுட்டுச்சித்திரவதை செய்வதாகவும் அவர்கள் சேதி பரப்பினார்கள். அவை பெண் மிருகங்களை எல்லோருக்கும் பொதுவாக்கிவிட்டதாகவும் கூறினர்கள்.. இயற்கையின் நியதிகளை எதிர்த்துப்போராடுகிற இடங்களிலெல்லாம் இப்படித்தான் நடக்கும் என்று பில்கிங்டனும் ஃப்ரடெரிக்கும் அபிப்பிராயப்பட்டார்கள்.

ஆனல் இந்தக் கதைகளை எல்லாம் யாரும் அப்படியே நம்பிவிடவில்லை. ஆச்சரியமான ஒரு பண்ணை– அதில் உள்ள மனிதர்கள் அடித்துத் துரத்தப்பட்டுவிட்டார்கள்– அதைப்பூராவும் மிருகங்களே நடத்திப் பலன்கண்டு அனுபவித்தன– என்று மிருகங்கள் பண்ணையைப் பற்றிச் செய்திகள் அரைகுறையாகவும், தெளிவற்ற முறையிலும் பரவியிருந்தன. நாட்டுப்புறம் பூராவும் அந்த வருஷத்திலே ஒரு புரட்சி மனப்பான்மை பரவியிருந்தது என்று தான் சொல்லவேண்டும். இதுவரை அடக்கமாக இருந்த எருதுகள் திடுதிப்பென்று கட்டுக்கடங்காமல் முரண்டிக் கொண்டு கிளம்பின–காட்டு மிருகங்கள் போலத் துள்ளி விழுந்தன ஆடுகள். வேலிகளை முறித்துக் கொண்டு வெளியேறி க்ளோவர் வயல்களை அழித்தன பசுக்கள். வேட்டைக்காரர்களைச் சுமந்து சென்ற குதிரைகள் வேலிகளைத் தாண்ட மறுத்தன; முதுகில் உட்கார்ந்தவர்களை

மட்டும் வேலிக்கப்பால் தூக்கி எறிய முயன்றன. இதெல்லாவற்றிற்கும் மேலாகச் சொல்ல வேண்டியது என்னவென்றால் இங்கிலாந்தின் மிருகங்கள் என்கிற பாட்டின் மெட்டும், வார்த்தைகளில் பலவும் எங்கும் பரவியிருந்தன. இதெல்லாம் கேலிக்கிடமான விஷயம் என்று எண்ணியவர்கள் போலவே மனிதர்கள் நடந்து கொண்டார்கள்– எனினும் இந்தப் பாட்டைக் கேட்கும் போதேல்லாம் அவர்க்குச் சினம் பொங்கி அடக்க முடியாததாயிற்று. அலக்ஷியம் செய்வதாகப் பாசாங்கு செய்தார்கள் எனினும் தங்கள் காதில் விழும்படியாக இந்தப் பாட்டைப் பாடிய மிருகங்களை அந்த இடத்திலேயே சவுக்கெடுத்து நன்றாக அடித்தார்கள். "மிருகங்கள் தான் என்றாலும் இவை இவ்வளவு மட்டமான அருவருக்கத்தக்க பாட்டை எப்படிப் பாடத்துணிந்தார்கள் என்பது எங்களுக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது" என்றார்கள் அவர்கள். ஆனால் என்ன சொல்லி என்ன செய்தால் என்ன? அந்தப் பாட்டு அடங்குவதாக இல்லை. அடக்கமுடியாத பாட்டாகத்தான் அது எங்கும் ஒலித்தது. கருங்குருவிகள் வேலிகளில் உட்கார்ந்து கொண்டு இந்தப் பாட்டைப் பாடின. எல்ம் மரங்களின் உச்சிகளிலிருந்து புறாக்கள் இந்தப் பாட்டை 'ஊங்' கொட்டின. சுத்திகளின் ஒலியிலே ஆலய மணிகளின் ஒலியிலே கூட இந்தப் பாட்டு ஒலிப்பது போல இருந்தது. இந்தப் பாட்டைக் காது கொடுத்துக் கேட்க நேர்ந்த மனிதர்கள் நடுங்கினார்கள் – ரகசியத்தில் நடுங்கினார்கள். தங்கள் எதிர்காலத்தின் விதியை இந்தப் பாட்டு நிர்ணயிக்கிறது என்று எண்ணிப் பயந்தார்கள் அவர்கள்.

அக்டோபர் மாதத்தின் ஆரம்ப நாட்களில் தானியக் கதிர்களை எல்லாம் அறுத்துக் கட்டுக் கட்டிப் போட்டாகிவிட்டது, சில கட்டுகளை அடிக்கவும் அடித்தாகிவிட்டது. அந்தச் சமயம் புறாக்கள் பல பறந்து வந்து பதட்டத்துடன் மிருகங்கள் பண்ணையின் முற்றத்தில் உட்கார்ந்தன. விஷயம் இது தான். ஜோன்ஸும் அவன் ஆட்களும் – ஆறு பேர்கள் – இன்னும் ஒரு அரைடஜன் பேர்வழிகளைத் துணைக்கு அழைத்துக் கொண்டு வெளிக்கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்துவிட்டார்கள். வண்டிப்பாதையிலே பண்ணை நடு வீட்டை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லோரும் கையில் தடிகளுடன் வந்தார்கள். எல்லோருக்கும் முன்னாலே ஜோன்ஸிடம் மாத்திரம் ஒரு துப்பாக்கி இருந்தது. பண்ணையைத் திரும்பக் கைப்பற்றுவதற்காகத் தான் அவர்கள் வந்தார்கள் என்பது தெளிவாக விளங்கிற்று.

இது பல நாட்களாகவே எதிர்பார்க்கப்பட்ட விஷயந்தான். ஆகவே எதிரிகளை விரட்டுவதற்கான ஏற்பாடுகள் எல்லாம் கவனத்துடனேயே செய்யப்பட்டிருந்தன. இந்த மாதிரி சந்தர்ப்பத்தை உத்தேசித்தே ஸ்நோபால் பண்ணை வீட்டில் இருந்த ஜூலியஸ்சீஸர் சண்டை விளக்க நூல்களில் ஒன்றைப் பரிபூர்வமாகப் படித்து வைத்திருந்தது. தற்காப்பு வேலைகளைச் செய்யும் பொறுப்பு அதன் வசமிருந்தது. அவசரமாகவே தன் உத்தரவுகளை அது தெரிவித்தது. ஒவ்வொரு மிருகமும் தயாராக அதனதன் இடத்தில் போய் நின்று கொண்டன.

பண்ணை வீட்டை மனிதர்கள் அணுகும்போது தன்னுடைய முதல் எதிர்த்தாக்குதலை நடத்தியது ஸ்நோபால். முப்பத்தைந்து புறாக்கள் இருந்தன அங்கே; அவையெல்லாம் மனிதர்கள் மேல் பறந்து போய் அவர்கள் மேல் இறக்கையடித்துப் பாய்ந்தன; அவர்கள் மேல் எச்சமிட்டன. அந்த எதிரிகள் இதைச் சமாளிக்க முயன்று கொண்டிருக்கையில் வேலிக்குப் பின்னால் பதுங்கியிருந்த வாத்துக்கள் சீறிக்கொண்டு பாய்ந்து அவர்களுடைய ஆடு சதையில் கூரான மூக்கால் கொத்தின. ஆனாலும் இது யுத்தத்தின் பிரதான கட்டம் அல்ல; ஆரம்பச் சிறு யுக்தி தான். எதிரிகள் சேனையில் கொஞ்சம் குழப்பம் விளைவிக்கும் உத்தேசத்தோடு செய்யப்பட்ட சிறு முயற்சிதான் இது. வாத்துகளை சுலபமாகவே மனிதர்கள் தங்கள் தடிகளால் அடித்து விரட்டிவிட்டார்கள். இரண்டாவது தாக்குதலை இப்போது தொடங்கியது ஸ்நோபால், முரியல், பெஞ்சமின், மற்றுமுள்ள ஆடுகள் எல்லாம், ஸ்நோபாலின் தலைமையில் மனிதர்கள் மேல் பாய்ந்து தாவி எல்லாப் பக்கங்களிலிருந்தும் அவர்களை முட்டின. பெஞ்சமின் திரும்பி நின்று கொண்டு அவர்களைத் தன் பின்னங்கால்களால் விசையாகத் தாக்கியது. ஆனால் இந்தத் தடவையும் மனிதர்கள், கையில் தடிகளுடனும், காலில் அணிந்திருந்த ஆணியடித்த பூட்ஸுகளுடனும், போராடிச் சுலபமாகவே மிருகங்களைத் துரத்திவிட்டார்கள். திடீரென்று, ஸ்நோபால் கூச்சல் ஒன்று போட்டதும், முன்னேற்பாட்டின்படி அவை பின்னடைந்து நகர்ந்து கொண்டன; கதவைத் தாண்டி வீட்டின் வெளிமுற்றத்தில் போய் நின்று கொண்டன.

"ஜெயித்து விட்டோம்" என்று மனிதர்கள் ஆனந்தமாகக் கூவினார்கள், தங்கள் எதிரிகள் முற்றிலும் தோற்று ஓடிவிட்டார்கள் என்று அவர்கள் கற்பனை செய்து கொண்டு உத்ஸாகப்பட்டார்கள். ஒன்றாகச் சேர்ந்து போகாமல் இஷ்டப்படி அங்கொருவரும் இங்கொருவருமாகக்

கலைந்து ஓடி மிருகங்களைத் துரத்தினார்கள் அவர்கள். இதற்குத் தான் காத்திருந்தது ஸ்நோபால். முற்றத்துக்குள் மனிதர்கள் வந்து அகப்பட்டுக் கொண்டதும், அங்கு காத்திருந்த மூன்று வண்டிக் குதிரைகளும், மூன்று பசு மாடுகளும், மற்றும் தயாராக ஒளிந்து கொண்டிருந்த பன்றிகளும், அவர்களுக்குப் பின்னால் வந்து தாக்கின. மனிதர்கள் முன்னும் போக முடியாமல் பின்னும் போக முடியாமல் மாட்டிக் கொண்டார்கள். இரண்டு வரிசை எதிரிகளுக்கிடையே தாக்குவதற்குக் குரல் கொடுத்த ஸ்நோபால் நேரே ஜோன்ஸைக் குறிவைத்துத் தாக்கியது. அதைக் கண்ட ஜோன்ஸ் அதைத் துப்பாக்கியால் சுட்டான். சிறு குண்டுகள் ஸ்நோபாலின் முதுகில் தைத்து ரத்தம் தெறித்தது. அருகிலிருந்த ஒரு ஆடு செத்தே விழுந்து விட்டது. ஒரு விநாடிகூடத் தயங்காமல் ஸ்நோபால் தாவித் தன்னுடைய இருநூற்றுப் பத்து பவுண்டு கனத்துடனும் ஜோன்ஸின் கால்களில் மோதியது. ஜோன்ஸ் தடுமாறி ஒரு குழியில் விழுந்தான்; கையிலிருந்த துப்பாக்கி நழுவி எங்கேயோ போய் விழுந்தது. ஆனால் இதில் மிகவும் பயங்கரமான யுத்த வீரனாகக் காட்சியளித்தது பாக்ஸர்தான். பின்னங்கால்களால் உயர எம்பி நின்று கொண்டு, முன்னங்கால்களால் எதிர்ப்பட்டதை எல்லாம் அடித்து நொறுக்கிக் கொண்டிருந்த பாக்ஸரைப் பார்க்கவே பயங்கரமாகத் தான் இருந்தது. பாக்ஸ்வுட் பண்ணையிலிருந்து வந்த ஒரு லாயத்து வேலைக்காரனை முதல் அடியிலேயே உயிரற்றவன் போலச் சரிந்து விழச் செய்துவிட்டது பாக்ஸர். அதைப் பார்த்த மனிதர்கள் தடிகளைக் கீழே போட்டுவிட்டு வெளியே ஓடிவிட முயன்றார்கள். பயத்தால் புத்தி குழம்பிப்போனார்கள் அவர்கள். அடுத்த விநாடி எல்லா மிருகங்களுமாகச் சேர்ந்து மனிதர்களை முற்றத்திலே சுற்றித் துரத்தின. அடி, உதை, தடி எல்லாமாகச் சேர்ந்து ரத்தம் ஏராளமாகச் சிந்தியது அங்கே. கொம்புகளினால் பல மனிதர்கள் காயமடைந்தார்கள். அவர்கள் மேல் அதனதன் இஷ்டப்படி வஞ்சம் தீர்த்துக் கொள்ளாத மிருகமே மிருகங்கள் பண்ணையில் இல்லை என்று தான் சொல்ல வேண்டும். பூனை கூட மதில் மேலிருந்து ஒரு இடையன் தோளில் குதித்து அவன் தோளில் தன் கூரிய நகங்களைப் பதித்துவிட்டது. அவன் கோரமாகக் கூச்சலிட்டான். இப்படிச் சிறிது நேரம் ஆனபின், கதவுப் பக்கம் மிருகங்கள் எதுவும் இல்லாத சமயம் பார்த்து, மனிதர்கள் சந்தோஷமாக, 'செத்தேன் பிழைத்தேன்' என்று, அந்த முற்றத்தை விட்டு வெளியேறி வெளிக்கதவுப் பக்கம் ஓடி விட்டார்கள். படையெடுப்பு தொடங்கி ஐந்து நிமிஷங்களுக்குள்ளாகவே அவர்கள் தோற்றுவிட்டார்கள். அவமானம்! தோற்றுப் போன அவர்கள் வந்தவழியே

ஓட்டம் பிடித்தார்கள். வாத்துக்கள் கூச்சலிட்டுக் கொண்டே அவர்களுக்குப் பின்னால் ஓடிச் சென்று அவர்களைக் கொத்தின.

எல்லா மனிதர்களும் போய்விட்டார்கள் – அதாவது ஒருவனைத் தவிர, முற்றத்தில் பாக்ஸரின் குளம்புக்குப் பலியான பையன் மட்டும் அப்படியே குப்புறக்கிடந்தான். பாக்ஸர் அவனைப் புரட்ட முயன்றது. ஆனால் பையன் அசையவே யில்லை.

"அவன் இறந்து விட்டான் பாவம்!" என்று துயரத்துடன் சொல்லிற்று பாக்ஸர். "அவனைக் கொல்கிற உத்தேசமேயில்லை எனக்கு. என் காலில் இரும்புக் கவசம் இருந்தது எனக்கே ஞாபகம் இல்லை. வேண்டுமென்று நான் இதைச் செய்யவில்லை என்று யார் நம்பப் போகிறார்கள்."

"தோழரே! இரக்கமோ, பரிதாபமோ வேண்டாம்" என்றது ஸ்நோபால். அதனுடைய முதுகுக் காயங்களிலிருந்து ரத்தம் இன்னும் வழிந்து கொண்டிருந்தது – "யுத்தம் என்றால் யுத்தம்தான். மனிதர்களில் நல்லவர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் செத்தவர்கள்தான்" என்றது அது.

"எதையும் சொல்ல நான் விரும்பவில்லை. என் எதிரியான மனிதனைக்கூட நான் கொல்ல விரும்பவில்லை" என்றது பாக்ஸர், அதன் கண்களில் நீர் ததும்பியது.

"மாலி எங்கே, காணவில்லையே?" என்று ஒரு மிருகம் விசாரித்தது.

உண்மையில் மாலியைத்தான் காணவில்லை. ஒரு விநாடி அங்கே ஒரே கலவரமாகப் போய்விட்டது. மனிதர்கள் ஓடிப்போகும்போது மாலியைக் கடத்திக் கொண்டு போயிருப்பார்களோ என்று சந்தேகம் வந்துவிட்டது எல்லோருக்கும்; அல்லது ஏதாவது தீங்கு விளைவித்திருப்பார்களோ, அதற்கு? கடைசியில், தேடிப் பார்த்தபோது, மாலி வைக்கோல் போருக்குள் தலையை விட்டுக் கொண்டு, பயத்தால் நடுங்கிக் கொண்டு நிற்பது கண்டுபிடிக்கப்பட்டது. துப்பாக்கி வேட்டு வெடித்ததும் பயந்து ஓடிவிட்டது அது. அதைத் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு மிருகங்கள் வெளி முற்றத்துக்கு வந்து பார்த்தபோது பாக்ஸரிடம் அடிபட்டுக் கிடந்த பையனைக் காணவில்லை. மூர்ச்சையாகிக் கிடந்த அவன் சமயம் பார்த்து, யாரும் கவனிக்காத சமயம் எழுந்து ஓடிப்போய்விட்டான்.

மிருகங்கள் எல்லாம் அளவு கடந்த உற்சாகத்துடன் முன் முற்றத்தில் ஒன்று கூடின. ஒவ்வொன்றும் அதனதன் பெரிய குரலில் அந்த யுத்தத்தில் தான் செய்த சாகஸங்களை எடுத்துக் கூறிக்கொண்டு நின்றது. முன்னதாக யாரும் ஏற்பாடு செய்யாத ஒரு கொண்டாட்டம் அங்கு நடக்கத் தொடங்கிற்று. எல்லாமாகச் சேர்ந்து **இங்கிலாந்தின் மிருகங்கள்** என்கிற பாட்டைப் பலதடவைகள் பாடின. யுத்தத்தில் இறந்த ஆட்டுக்கு சவ அடக்கச் சடங்கு உரிய முறையில் நடத்தி வைக்கப்பட்டது. அதன் கல்லறைமேல் ஒரு செடி நடப்பட்டது. கல்லறைக்கு முன் நின்று ஸ்நோபால் ஒரு பிரசங்கம் செய்தது. அவசியமானால் மிருகங்கள் எல்லாமே மிருகங்கள் பண்ணையைக் காப்பாற்றுவதற்கு உயிரை வேண்டுமானாலும் தரத் தயாராக இருக்க வேண்டும் என்று பிரசங்கம் செய்தது ஸ்நோபால்.

ஒரு ராணுவ விருது தயார் செய்வது என்று மிருகங்கள் ஏகமனதாக அங்கே தீர்மானித்தன. "மிருக வீரன், முதல் வகுப்பு" என்று ஒரு பட்டம் அந்த இடத்திலேயே உண்டாக்கப்பட்டு ஸ்நோபாலுக்கும் பாக்ஸருக்கும் அளிக்கப்பட்டது. பழைய வெண்கல வட்டங்கள் சில தட்டுமுட்டுச் சாமான்கள் அறையில் கிடந்தன. மிருகங்கள் அவற்றையெடுத்து "மிருக வீரர்கள், முதல் வரிசை" மெடல்களாக அளித்தன. அவற்றை முதல் வரிசை மிருக வீரர்கள் ஞாயிற்றுக்கிழமைகளிலும், மற்றும் அரசாங்க முக்கிய சபை கூடும்போதும் அணிந்து கொள்ளலாம் என்று அறிவிக்கப்பட்டது; பிறகு "மிருக வீரன், இரண்டாவது வரிசை" என்கிற விருது இறந்துவிட்ட ஆட்டுக்கு அளிக்கப்பட்டது.

என்ன பெயர் வைப்பது அந்த யுத்தத்துக்கும் அந்த வெற்றிக்கும் என்று மிருகங்கள் தங்களுக்குள் விரிவாக விவாதித்தன. 'மாட்டுக் கொட்டில் யுத்தம்' என்றும், 'மாட்டுக் கொட்டில் வெற்றி' என்றும் அதற்குப் பெயர் வைப்பது என்று தீர்மானிக்கப்பட்டது. ஜோன்ஸின் துப்பாக்கியும் அவர்கள் கையில் அகப்பட்டுக் கொண்டது. கொடி மரத்தின்கீழ் அதை வைத்து, வருஷத்தில் இரண்டு தடவை அதைச் சுடுவது என்று தீர்மானித்தன மிருகங்கள். பண்ணை வீட்டில் ரவைகள் இருந்தன. அக்டோபர் பன்னிரெண்டாந் தேதியன்று, மாட்டுக் கொட்டில் வெற்றி ஞாபகார்த்தமாகவும் துப்பாக்கியை வெடிப்பது என்று மிருகங்கள் ஒருமனதாக முடிவு செய்தன. ●

# 5

**மா**ரிக்காலத்தில் மாலியால் தொந்தரவு அதிகரித்துக் கொண்டிருந்தது. ஒவ்வொரு நாளும் வேலைக்கு அது காலங்கடந்து வந்தது. "தூங்கிவிட்டேன்" என்று சொல்லி மன்னிப்புக் கேட்டது. தவிரவும் சொல்லிக் கொள்ள முடியாதபடி உடலில் வலிகளும் நோய் நொடிகளும் இருப்பதாகச் சொல்லிக் கொண்டது. ஆனால் அதற்குப் பசி மட்டும் எப்போதும் போலத்தான் இருந்தது. ஏதாவது ஒரு சாக்கைச் சொல்லிக்கொண்டு அது வேலை செய்வதை நிறுத்திவிட்டு ஓடிவிடும். குடி தண்ணீர் நிரம்பியிருந்த குட்டையின் கரையில் போய் நின்று கொண்டு, ஜலத்தில் தெரிந்த தன் பிம்பத்தைப் பார்த்து ஆனந்தப் பட்டுக்கொண்டே பொழுதைக் கழிக்கும். ஆனால் இதைவிட முக்கியமான விஷயம் ஒன்று பற்றியும் வதந்திகள் நிலவின. மிருகப் பண்ணையிலே ஒருநாள் ஆனந்தமாக மாலி நாட்டிய நடை பயின்று கொண்டு வந்தபோது, அதன் அழகிய வால் ஆடுவதையும், அதன் முகபாவத்தையும் பொருட்படுத்தாமல், க்ளோவர் சொல்லிற்று.

"மாலி, உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் சொல்ல வேண்டும். மிருகங்கள் பண்ணையை பாக்ஸ்வுட் பண்ணையிலிருந்து பிரிக்கும் வேலி

ஓரத்தில் நின்று நீ அப்பால் பார்த்துக் கொண்டிருந்ததை நான் இன்று காலையில் பார்த்தேன். மிஸ்டர் பில்கிங்டனின் ஆட்களில் ஒருவன் வேலிக்கப்பால் நின்று கொண்டிருந்தான். நான் வெகு தூரத்தில் இருந்ததால் எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை – எனினும் அவன் உன்னுடன் பேசிக் கொண்டிருந்ததையும், உன்னைத் தடவிக் கொடுத்ததையும் நான் கண்டேன் என்று தான் நினைக்கிறேன். இதற்கு என்ன அர்த்தம், சொல்லு...''

''அவன் என்னைத் தொடவில்லை! நான் அங்கே நிற்கவேயில்லை! அது பொய்'' என்று கத்திற்று மாலி. குதித்துக் கொண்டே கோபமாகத் தரையைக் காலால் பிராண்டியது அது.

''மாலி! இந்தா! என்னை நிமிர்ந்து பார். நிஜமாகவே சொல்கிறாயா? அந்த மனிதன் உன்னைத் தட்டிக்கொடுக்கவேயில்லையா? சத்தியமாக என்னை நிமிர்ந்து பார்த்துச் சொல்லு'' என்றது க்ளோவர்.

''அது பொய்'' என்றது மாலி: ஆனால் க்ளோவரை நிமிர்ந்து பார்க்க அதற்குத் தைரியம் வரவில்லை. அடுத்த விநாடியே அங்கிருந்து துள்ளிக் குதித்து ஓடிப்போய்விட்டது அது.

க்ளோவருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. மற்ற எந்த மிருகத்தினிடமும் எதுவும் சொல்லாமல் அது ரகசியத்தில் மாலியின் அறையைச் சோதனை போட்டுப் பார்த்தது. வைக்கோலைப் புரட்டிப் பார்த்தது. வைக்கோலுக்கு அடியில் பல சர்க்கரைக் கட்டிகளும், பல வர்ண ரிப்பன் கொத்துக்களும் காணப்பட்டன.

இதற்கு மூன்று நாட்களுக்குப் பிறகு மாலி எங்கேயோ மாயமாக மறைந்துவிட்டது. சில வாரங்கள் அது எங்கே போயிற்று என்பது மிகவும் ரகசியமாகவே, ஒரு புதிராகவே இருந்தது. பிறகு வில்லிங்டன் கிராமத்தில் எதிர்ப்பக்கத்தில் அதை ஒருநாள் கண்டதாக புறாக்கள் வந்து சொல்லின. ஒரு சிறிய அழகிய, ரேக்ளா வண்டியை இழுத்துக் கொண்டு அது போய்க் கொண்டிருந்ததாகவும், வண்டி போய் மதுக்கடை முன் நின்றதாகவும், முகம் சிவந்த தடியன் ஒருவன் மாலியைத் தட்டிக் கொடுத்துக் கொண்டு நின்று, அதற்கு சர்க்கரைக் கட்டிகள் கொடுத்துக் கொண்டிருப்பதைக் கண்டதாகவும் புறாக்கள் வந்து சொல்லின. அதன் மேலெல்லாம் மயிர் அழகாக வெட்டி விடப்பட்டிருந்ததாம். பிடறி மயிரில் செக்கச் செவேலென்று அது ஒரு ரிப்பன் அணிந்திருந்ததாம். ''மிகவும் உல்லாசமாக இருந்தது மாலி'' என்று புறாக்கள் வந்து சொல்லின. அதற்குப் பிறகு மிருகங்கள் எதுவும் மாலியைப் பற்றிப் பேசுவதே கிடையாது.

ஜனவரி மாதத்தில் குளிர் மிகவும் கடுமையாக இருந்தது. பூமி இரும்பு மாதிரிக் கெட்டியாக உறைந்து கிடந்தது. வயல்களில் வேலைகள் எதுவும் செய்வதற்கியலவில்லை. பெரிய கொட்டகையில், ஒன்றன்பின் ஒன்றாகப் பல கூட்டங்கள் நடந்தன. அடுத்த பருவகாலத்தில் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றித் திட்டமிட்டுக் கொண்டே பன்றிகள் காலம் கழித்தன. நாளடைவில் பன்றிகள்தான் மிருகங்களிலே அறிவு மிக்கவை என்பதும் அவை தீர்மானித்தபடிதான் பண்ணையில் எல்லாம் நடக்க வேண்டும் என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டு விட்டது. எனினும் எல்லாத் தீர்மானங்களைப் பற்றியும் எல்லா மிருகங்களும் வோட்டளிக்கலாம் என்பது நடைமுறையில் வழக்கமாக இருந்து வந்தது. இந்த ஏற்பாட்டின்படியே எல்லாம் நடந்து வந்திருக்கும். ஆனால் ஸ்நோபாலும் நெபோலியனும் எப்போதுமே ஓயாமல் சண்டைகள் போட்டுக் கொண்டன; முடிவில்லாத விவாதங்கள் நடத்தின. ஒத்துப் போகக்கூடிய காரியங்களெல்லாவற்றிலும் கூட அவை இரண்டும் ஒத்துப்போக மறுத்தன. ஒன்றையொன்று எதிர்ப்பதற்காகவே அவை இருந்தன என்று தோன்றிற்று. ஒன்று "இவ்வருஷம் பார்லி அதிகம் விதைக்கலாம்" என்றால், மற்றது "வேண்டாம் கொள்ளுதான் விதைக்க வேண்டும்" என்று விவாதிக்க ஆரம்பித்துவிடும், "ஒன்று இந்த வயலில் முட்டைகோஸ் போடலாம்" என்றால், "கூடாது; கிழங்குகள்தான் நட வேண்டும்" என்று மற்றது ஆரம்பிக்கும். ஒவ்வொன்றும் கட்சி கட்டிக் கொண்டு விவாதத்துக்குக் கிளம்பும்; இருவருக்கும் பின்பற்றுகிறவர்கள் பலர் இருந்தார்கள்; ஒவ்வொரு சிறிய விஷயத்தைப் பற்றியும் விவாதம் காரசாரமாக நடைபெறும். கூட்டங்களில் மிகவும் அற்புதமாகப் பேசி ஸ்நோபால் தன் கட்சிக்கு பலம் தேடிக் கொள்ளும். ஆனால் இடைவேளைகளில் ரகசியத்தில் பலம் தேடித் தேர்தலில் ஜெயிக்கிற ரகசியத்தை நெபோலியன் நன்கு அறிந்திருந்தது, ஆடுகளிடம் முக்கியமாக நெபோலியன் சொல்வதுதான் எடுபட்டது. சமீப காலத்தில் ஆடுகள் சமய சந்தர்ப்பம் பாராட்டாமல் "நாலுகால் நல்லது, இரண்டு கால் கெட்டது" என்று உரக்க மிருகங்கள் பண்ணையே கிடுகிடுக்கும்படிக் கத்தத் தொடங்கிவிடும். பண்ணை வீட்டில் கிடந்த சில "குடியானவர்களும் ஆடுமாடு வளர்ப்பவர்களும்" என்ற பத்திரிகையின் சில பழைய இதழ்களைப் படித்துப் பல புதுப்புது விஷயங்களை அறிந்து கொண்டு பிரசங்கம் செய்ய வந்திருந்தது ஸ்நோபால். பண்ணையைச் சீர்திருத்தி முன்னேற்ற மடைவதற்கான யோசனைகள் பலவற்றை அது சிந்தித்து வைத்திருந்தது. புள்ளி விவரங்களுடன் பல விஷயங்களை அது தனக்கும் மற்றவர்களுக்கும்

தெளிவாக்கத் தயாராகிக் கொண்டிருந்தது. அறிவு முதிர்ந்த பாவத்துடன் வயலில் வடிகால்கள், தேக்கம், சேறு கூடுவது என்றெல்லாம் பேசும் ஸ்நோபால், மிருகங்கள் சாணி போடுவதை தினம் ஒரே இடத்தில் போடாமல் பல இடங்களில் உபயோகமாகிற வழியில் போட்டால், அதனால் பண்ணையில் வேலை குறையும் என்று அது தக்க ஆதாரங்களுடன் ருஜு செய்தது. நெபோலியன் இதிலெல்லாம் சமர்த்து இல்லாத பன்றி, புதுசாகத் திட்டம் எதுவும் வகுக்கத் தெரியாது அதற்கு. அமைதியாக, ஸ்நோபாலின் திட்டங்களெல்லாம் பலிக்காது என்று வாதம் செய்வதுடன் நின்றுவிடும். காத்திருக்கத் தயாராக இருந்தது நெபோலியன் என்று தோன்றிற்று. ஆனால் அவர்களுடைய விவாதங்களில் மிகவும் காரசாரமாக நடந்ததில் முக்கியமாக காற்று யந்திரம் பற்றி நடந்த விவாதத்தைத் தான் சொல்ல வேண்டும்.

பண்ணை வீட்டுக்கருகில் இருந்த பெரிய புல்தரையில் ஒரு பெரிய மேடு இருந்தது. பண்ணையிலே அது தான் அதிக உயரமான இடம். அந்த இடத்தை எல்லாம் அளந்து கணக்குப் போட்டுப் பார்த்துவிட்டு அங்கு ஒரு காற்றாடி இயந்திரத்தினால் ஒரு மின் இயந்திரம் இயக்கிப் பண்ணைக்கே மின்சாரம் உண்டாக்கலாம் என்றது அது. இரவில் வெளிச்சமும் பகலில் உஷ்ணமும் தர மின்சாரம் உபயோகப்படும்; மிருகங்கள் சௌகரியமாக வாழ்ந்து முன்னேற காற்றாடி யந்திரம் மிகவும் உபயோகப்படும். அது தவிர மின்சாரத்தினால் வட்ட ரம்பம், புல்வெட்டி, மற்றும் பல தினுசான வெட்டிகள், பால் கறக்கும் யந்திரம் எல்லாவற்றையும் இயக்கலாம் என்று சொல்லிற்று ஸ்நோபால். மிருகங்கள் அதுவரையில் இது போல எதையும் பார்த்ததுமில்லை; கேள்விப்பட்டதுமில்லை. (அந்தப் பழைய பண்ணை புதிய மாதிரியில் நாகரிக சாதனங்கள் அடைந்த பண்ணை அல்ல.) மிருகங்கள் எல்லாம் ஆச்சரியத்துடன் ஸ்நோபாலின் திட்டங்களைக் கேட்டன. சௌகரியமாக அவை ஒரு வேலையும் செய்யாமல் மேய்ந்து கொண்டிருக்கையில், மின்சாரத்தால் இயங்கும் விதவிதமான யந்திரங்கள் அவர்களுடைய வேலைகளை எல்லாம் ஒரு விநாடியில் செய்து முடித்துவிடும் என்று ஸ்நோபால் சொல்லியதை ஆச்சரியத்துடன் கேட்டுக் கொண்டிருந்தன அவை. பேசிப் படித்துப் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள மிருகங்களுக்கு ஏராளமான அவகாசம் மின்சாரம் வந்துவிட்டால் இருக்கும். அலுப்பு என்பதே அதற்குப் பிறகு இராது.

சில வாரங்களுக்குள்ளாகவே ஸ்நோபால் காற்றாடி யந்திரத் திட்டத்தைப் பூரணமாக்கிவிட்டது. மிஸ்டர் ஜோன்ஸின் அறையில் இருந்த மூன்று புஸ்தகங்களைப் படித்துப் படித்து அந்தத் திட்டத்தை சாத்தியமாக்குவது எப்படி என்று ஸ்நோபால் கண்டுபிடித்து முடித்துவிட்டது – 'வீட்டில் செய்யக்கூடிய ஆயிரம் காரியங்கள்,' 'ஒவ்வொருவனும் கட்டிடம் கட்டலாம்.' மின்சாரத்தில் ஆரம்பப்பாடங்கள்' என்கிற மூன்று புஸ்தகங்களை வைத்துக் கொண்டு தன் காற்றாடி யந்திரத் திட்டத்தை உருவாக்கிவிட்டது ஸ்நோபால், கோழி முட்டைகளை வைத்துக் குஞ்சு பொறிக்க வைக்கும் அறையில் படங்கள், கட்டிடத் திட்டங்கள், கணக்குகள் எல்லாவற்றையும் போட்டுப் பார்த்துத் தன் திட்டங்களைப் பூரணமாக உருவாக்கிற்று. ஸ்நோபால், மணிக்கணக்காக அங்கே தனியாகக் கதவைச் சாத்திக் கொண்டு வேலை செய்யும். ஒரு கல்லை அடையாளமாக வைத்துக் கொண்டு முன்னங்கால்களுகிடையில் ஒரு சாக்கட்டியைப் பிடித்துக் கொண்டு, வழவழ வென்றிருந்த தரையில் படங்களும், கணக்குகளும் போட்டுப் போட்டு வழிகளைக் கண்டுபிடித்தது ஸ்நோபால். அங்குமிங்கும் ஓடி அது உத்ஸாகமாகத் தனக்குத்தானே பேசிக் கொண்டு திட்டங்களை முடிவு செய்தது. மற்ற மிருகங்கள் வந்து பார்க்கும், அவற்றிற்கு ஒன்றும் புரியாது. தரையில் பாதிக்கு மேல் படங்களும், கோடுகளும், சக்கரங்களும், கணக்குகளுமாகப் பார்ப்பதற்கு அச்சுறுத்துவதாகவும், உண்மையிலேயே பெரிய விஷயமாகவும் தான் இருந்தது அது. தினம் ஒரு தரமாவது வந்து எல்லா மிருகங்களும் ஸ்நோபாலின் ஆராய்ச்சிக் கூடத்தைப் பார்த்துவிட்டு, புரிந்து கொண்ட மாதிரி தலையை ஆட்டிவிட்டுப் போகும். கோழிகளும் வாத்துகளும்கூட வந்து பார்த்தன; கோடுகளில் கால்வைத்து அழித்துவிடாமல் ஒதுங்கி நின்று பார்த்துவிட்டுப் போயின. நெபோலியன் மட்டும் தான் இதிலெல்லாம் பட்டுக் கொள்ளாமல் ஒதுங்கி நின்றது. ஆரம்ப முதலே காற்றாடி யந்திர யோசனை அதற்குப் பிடிக்கவேயில்லை. அப்படியும் ஒரு நாள் ஸ்நோபாலின் கோடுகளையும், திட்டங்களையும் பார்க்க அதுவும் வந்தது. ஒவ்வொரு கோடாக முகர்ந்து பார்த்தது. பிறகு ஒரு ஓரமாக நின்று தலையைச் சாய்த்துக் கொண்டு பார்த்தது. பிறகு தரையில் அந்தத் திட்டத்துக்கு மேல் சிறுநீர் பெய்துவிட்டு அது போய்விட்டது. ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை.

காற்றாடி யந்திரம் பற்றிய விவகாரத்தில் மிருகங்கள் பண்ணையே இரண்டு பட்டது. அதை நிர்மாணிப்பது மிகவும் சிரமமான காரியம் என்பதை

ஸ்நோபால் மறைக்கவில்லை. கல் வெட்டிச் சேர்க்க வேண்டும். கற்களை அடுக்கி சுவர்கள் எழுப்ப வேண்டும். பிறகு பாய் மரங்கள் விசிறிகள், தயார் செய்ய வேண்டும். அப்பால் மின் யந்திரம், கம்பிகள் எல்லாம் செய்ய வேண்டும் (இதெல்லாம் மிருகங்களுக்கு எப்படிக் கிடைக்கும் என்பது பற்றி ஸ்நோபால் பேசவேயில்லை) ஆனால் இதெல்லாவற்றையுமே ஒரு வருஷத்திற்குள் சிரமப்பட்டுச் செய்து முடித்து விடலாம் என்றது ஸ்நோபால். அதை நிர்மாணித்துவிட்டால் அதன் பிறகு மிருகங்கள் வாரத்தில் மூன்றே நாட்கள் உழைத்தால் போதும் என்று கூறியது அது. மற்ற நாட்களில் ஓய்வு எடுத்துக் கொண்டு உல்லாஸமாக இருக்கலாம். இதற்கு எதிர்மாறாக, நெபோலியன் 'உணவு உற்பத்தியை அதிகப்படுத்துவதே உடனடியான தேவை – அதைக் கவனியாமல் காற்றாடி நிர்மாணிக்க மிருகங்கள் போய்விட்டால், பட்டினி கிடந்து சாக வேண்டியதுதான்' என்று வற்புறுத்தியது. இரண்டு கட்சிகளாக மிருகங்கள் பிரிந்தன. ஒன்றின் ஸ்லோகம் ''ஸ்நோபாலுக்கு ஓட்டுப் போடு. வாரத்தில் மூன்று நாள் உழை.'' மற்றொன்றின் ஸ்லோகம்: ''நெபோலியனுக்கு ஓட்டுப் போடு. வயிறார உணவு கிடைக்கும்.'' இரண்டு கட்சிகளிலும் சேராத மிருகம் பெஞ்சமின் ஒன்றுதான். உணவு உற்பத்தி பெருகும் என்றோ, வேலை குறையுமென்றோ அது நம்பத்தயாராக இல்லை. எது எப்படியானாலும் என்றும் எல்லாம் இப்படியேதான் இருக்கும் என்பது அதன் கட்சி. காற்றாடி யந்திரமோ, இல்லையோ – வாழ்வு என்பது எப்போதும் போல, மோசமாகவே தான் நடந்து கொண்டிருக்கும் என்றது அது.

காற்றாடி யந்திரத்தைப் பற்றிய விவாதங்களைத் தவிர, பண்ணையின் தற்காப்பு விஷயமாகவும் விவாதங்கள் கிளம்பின. மாட்டுக் கொட்டில் யுத்தத்திலே மனிதர்களைத் தோற்கடித்து விரட்டியாகிவிட்டது என்றாலும்கூட, அவர்கள் பண்ணையைக் கைப்பற்ற மீண்டும் உறுதியாகவும் பலமாகவும் முயற்சி செய்வார்கள் என்பதை அம்மிருகங்கள் அனைத்தும் நன்கு உணர்ந்தே இருந்தன. மிஸ்டர் ஜோன்ஸை மீண்டும் பண்ணையில் கொண்டு வந்து வைக்க முயற்சிகள் நடக்கும். இந்த முயற்சிகள் தீவிரமாகவும் மும்முரமாகவும் நடக்கும் என்று எதிர்பார்க்கலாம் – ஏனென்றால் மிருகங்களிடம் மனிதர்கள் தோற்று ஓடிப்போன விஷயம் இப்போது நாடெங்கும் பரவி விட்டது. மனிதர்கள் வெற்றி பெற்றுத் தங்கள் கௌரவத்தை ஸ்தாபித்துக் கொள்ளாவிட்டால் மற்ற பண்ணைகளிலும் மிருகங்கள் புரட்சி செய்யத் தொடங்கிவிடலாம். மனிதர்கள் மீண்டும் அதிக

ரோஷத்துடன் யுத்தம் செய்ய வருவார்கள் என்பதில் சந்தேகமேயில்லை. ஆனால் பண்ணையின் தற்காப்புப் பிரச்னை பற்றிய வரையில் வழக்கம் போலவே ஸ்நோபாலும் நெபோலியனும் ஒத்துப்போக முடியவில்லை. நெபோலியன் சொன்னது என்னவென்றால், மிருகங்கள் பண்ணையைச் சேர்ந்த மிருகங்கள் துப்பாக்கிகளும் ஆயுதங்களும் கொணர்ந்து யுத்தத்திற்குத் தயார் செய்து கொள்ள வேண்டும்; எதிர்ப்பைச் சமாளித்து வெற்றி பெறக் கற்றுக் கொள்ள வேண்டும். ஆனால் ஸ்நோபால் சொன்னது வேறு; ஏராளமான புறாக்களை வெளியே அனுப்பி மற்ற பண்ணைகளிலும் உள்ள மிருகங்களைப் புரட்சி செய்யத் தூண்டிவிட வேண்டும்; அதுதான் யுத்தத்தைத் தவிர்க்க வழி. தற்காப்பு வித்தைகள் அறியாமல் போய்விட்டால் யுத்தத்தில் தோற்று விடுவோம் என்றது ஒன்று. மற்றது சொன்னது என்னவென்றால் மற்ற பண்ணைகளிலும் புரட்சிகள் ஏற்பட்டு விட்டால் அதற்குப் பின் யுத்தம், தற்காப்பு என்பதற்கே அவசியம் இராது என்பது தான். மிருகங்கள் முதலில் நெபோலியன் சொன்னதைக் கேட்டன; பிறகு ஸ்நோபால் சொன்னதைக் கேட்டன. எது சொன்ன விஷயம் சரியானது என்று முடிவு செய்ய அவற்றால் இயலவில்லை. அவ்வச்சமயத்தில் யார் பேசுகிறார்களோ அவர்கள் சொல்வதுதான் சரியாக அவற்றிற்குத் தோன்றியது.

கடைசியாக ஒரு நாள் ஸ்நோபாலின் திட்டங்கள் எல்லாம் ஒரு வழியாகப் பூரணத்வம் அடைந்தன. அடுத்து வந்த ஞாயிறன்று நடந்த கூட்டத்தில் காற்றாடி யந்திரம் நிர்மாணிக்கும் வேலையைத் தொடங்குவதா, வேண்டாமா என்கிற விஷயம் வோட்டுக்கு விடப்பட இருந்தது. பெரிய கொட்டிலில் எல்லா மிருகங்களும் கூடியதும், ஸ்நோபால் எழுந்து நின்று முதலில் பேசியது. பல தடவைகள் ஆடுகள் தங்கள் "நாலு கால் நல்லது" என்ற பாட்டைக் கிளப்பி, அதன் பிரசங்கத்தை நிறுத்தின. ஆனால் அதை லக்ஷியம் செய்யாமல் காற்றாடி யந்திரம் நிர்மாணிப்பது ஏன் அவசியம் என்பது பற்றிச் சொல்லிவிட்டு ஸ்நோபால் உட்கார்ந்தது. பிறகு நெபோலியன் பதில் சொல்ல எழுந்து நின்றது. காற்றாடி யந்திரம் என்பதே ஒரு குருட்டுக் கொள்கை. அர்த்தமற்ற பேச்சு, அதற்கு யாரும் வோட் செய்யக்கூடாது என்று சொல்லிவிட்டு நெபோலியன் உட்கார்ந்துவிட்டது. முப்பது விநாடிகள் தான் பேசிற்று, முடிவு என்ன ஆகும் என்பது பற்றி அது கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. இதைக்கேட்ட ஸ்நோபால் மறுபடியும் குதித்தெழுந்து, ஆடுகளின் குரல்களுக்கும் மேலே கேட்கும்படியாக

காற்றாடி யந்திரம் நிர்மாணிப்பதை ஆதரித்து உணர்ச்சி வேகத்துடன் பேசிற்று. இதுவரை சமபலத்துடன் இருந்த கட்சிகள் ஸ்நோபாலின் உணர்ச்சி ததும்பிய பிரசங்கத்தால் மனம் மாறி, காற்றாடி யந்திர அனுதாபிகள் கட்சி வலுவடைந்தது. காற்றாடி யந்திரம் நிர்மாணமாகி அனாவசியமான வேலைகளும், உழைப்பும் அகன்றுவிட்ட மிருகங்கள் பண்ணை எப்படியிருக்கும் – மிருகங்களின் முதுகும் நிமிரும் என்று ஸ்நோபால் உருக்கமாக வர்ணித்தது. கற்பனையில், மின்சக்தி கொண்டு புல் வெட்டுவது, கறிகாய் நறுக்குவது என்பதை எல்லாம் தாண்டிப் போய்விட்டது ஸ்நோபால் மின்சக்தியால், ஏர்கள், கலப்பைகள், மண் வெட்டிகள் உருளைகள், கட்டுக் கட்டுகிற ஆயுதங்கள், அறுவடை செய்யும் வண்டி எல்லாமே அதிதுரிதமாக இயங்கும் என்றது ஸ்நோபால். பண்ணை பூராவும் மின்சார விளக்குகள் எரியும். குளிர்ந்த ஜலம். சூடான ஜலம் இரண்டும் கிடைக்கும், உஷ்ணமூட்ட அடுப்புகள் தேவையானபடி செய்து கொள்ளலாம். ஸ்நோபால் பேசி முடித்ததும் தெளிவாகவே எல்லோருக்கும் தெரிந்துவிட்டது – காற்றாடி யந்திரத்துக்குச் சாதகமாகத் தான் வோட்டுக்கள் எல்லாம் விழும் என்பது. ஆனால் அந்தச் சமயம் பார்த்து நெபோலியன் எழுந்து நின்று, ஸ்நோபாலைப் பக்க வாட்டில் ஒரு தினுசாகப் பார்த்துக் கொண்டு, சன்னமாக ஆனால் வெகுதூரம் எட்டக்கூடிய குரலில் சீட்டியடித்தது. அப்படி அது சீட்டியடித்ததை அதற்கு முன் மிருகங்கள் பண்ணையில் எந்த மிருகமும் கேட்டதில்லை.

உடனேயே வெளியே வேட்டை நாய்களின் குரல் கேட்டது. பயங்கரமாகக் கேட்டது. கழுத்தில் பித்தளைப் பொத்தான்கள் பதித்த வளையங்களுடன் உள்ளே பாய்ந்து ஓடி வந்தன ஒன்பது பெரிய வேட்டை நாய்கள். ஸ்நோபாலை நோக்கிப் பாய்ந்தன அவை. கடிக்கத் தயாராகத் திறந்திருந்த அவற்றின் வாய்களிலிருந்து மயிரிழையில் தப்பித் தாண்டிக் குதித்து நின்றது ஸ்நோபால். ஒரு விநாடியில் அது கொட்டகையைவிட்டே வெளியேறி விட்டது – அதைத் தொடர்ந்து நாய்களும் ஓடின. பேசுவதற்கோ, எதிர்த்துச் சொல்வதற்கோ முடியாதபடி ஆச்சரியமும் பயமுமடைந்து மிருகங்கள் எல்லாம் அந்த நாய்கள் ஸ்நோபாலைத் துரத்துவதைப் பார்த்துக் கொண்டு கொட்டகையின் கதவண்டை வழியை அடைத்துக் கொண்டு நின்றன. ஸ்நோபால் பெரிய வயலைத் தாண்டி, பண்ணைக்கு வெளியே செல்லும் பாதையை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. பன்றியால்

மட்டுமே ஓடக்கூடிய வேகத்துடன்தான் ஓடிற்று அது –ஆனாலும் வேட்டை நாய்கள் அதைவிடாமல் துரத்தின. திடீரென்று ஸ்நோபாலுக்கு வழுக்கிவிட்டது; நாய்கள் அதைப் பிடித்து விட்டன என்று தான் சொல்ல வேண்டும். ஆனால் உடனேயே சமாளித்துக் கொண்டு எழுந்து முன்னிலும் அதிக வேகமாக ஓடிற்று அது. நாய்கள் தான் வென்றுவிடும் போல இருந்தது. ஒரு நாய் அதன் வாலைத் தன் பல்லால் கவ்வக்கூடக் கவ்விவிட்டது. சமயத்தில் வாலை ஆட்டித் தப்பித்துக் கொண்டது ஸ்நோபால். பிறகு மூச்சைப் பிடித்துக் கொண்டு ஓடி, வேலியில் இருந்த ஒரு பொந்தில் புகுந்து மறைந்துவிட்டது; அதற்குப் பிறகு அது மிருகங்கள் பண்ணையிலிருந்த மிருகங்களின் கண்களில் படவேயில்லை.

பீதியடைந்தவையாக, மௌனமாக, எல்லா மிருகங்களும் வந்து மீண்டும் கொட்டகையில் கூடின. ஒரு விநாடிக்குப் பிறகு வேட்டை நாய்களும் தாவிக் குதித்து ஓடி வந்தன. முதலில் இந்த வேட்டை நாய்கள் எங்கிருந்து வந்தன என்பதை மிருகங்கள் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் சிறிது நேரத்திற்குள் எல்லாம் விளங்கிவிட்டது. நெபோலியன் நாய்களிடம் இருந்து விலக்கி ரகசியமாக வளர்த்துப் பழக்கிய நாய்க்குட்டிகள் அவை. இன்னும் பூரணமான வளர்ச்சி பெறாதவை தான் அவை என்றாலும், பிரம்மாண்டமாக இருந்தன. ஓநாய்கள் போல அச்சுறுத்துபவையாக இருந்தன; நெபோலியனை நெருங்கிச் சுற்றி வந்தன அவை. அந்த நாட்களில் மிஸ்டர் ஜோன்ஸைக் கண்டு நாய்கள் வாலாட்டுவது போலவே அவை இப்போது நெபோலியனைக் கண்டு வாலாட்டியதை கவனித்தன மிருகங்கள் எல்லாம்.

தன் நாய்கள் பின்தொடர நெபோலியன் மேடை மேல் ஏறி நின்று கொண்டது. கிழட்டு மேஜர் தன் கனவைப் பற்றிச் சொல்ல அன்றொருநாள் அந்த மேடையின் மேல் தான் ஏறி நின்றது. "இனி ஞாயிற்றுக்கிழமைக் கூட்டங்களே அவசியமில்லை. பொழுதையும் வீணாக்கிய அந்தக் கூட்டங்கள் இனி நடக்காது. பண்ணை சம்பந்தமான நடைமுறைப் பிரச்னைகள் எல்லாவற்றையும் பன்றிகளாலான ஒரு வேலைக்கமிட்டி தீர்மானித்து முடிவு செய்யும். அந்தக் கமிட்டிக்கு நானே தலைமை வகிப்பேன். ரகசியமாகக் கூடுகிற இந்தக் கமிட்டிக் கூட்டங்களின் முடிவுகள் மட்டும் மற்ற மிருகங்களுக்கு உரிய காலத்தில் அறிவிக்கப்படும். ஆனால் ஞாயிறன்று காலை நேரத்தில் வழக்கம்போல் மிருகங்கள் ஒன்று சேர்ந்து

'இங்கிலாந்தின் மிருகங்கள்' பாட்டைப் பாடும். வாரத்தில் செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றிய உத்தரவுகள்கூட அந்தக் கூட்டத்தில் அளிக்கப்படும். மற்றபடி எதைப் பற்றியும் விவாதங்கள், ஆக்ஷேப சமாதானங்கள், எதுவும் இராது'' என்று அறிவித்தது நெபோலியன்.''

ஸ்நோபால் அடித்துத் துரத்தப்பட்டதே பெரிய அதிர்ச்சியாக இருந்தது மிருகங்களுக்கெல்லாம். அதைத் தொடர்ந்து வந்த இந்த அறிக்கையும் அதிர்ச்சி தருவதாகத்தான் இருந்தது. எல்லையற்ற கவலையில் ஆழ்ந்து மயங்கித் திகைத்தன மிருகங்கள் எல்லாம். சரியான வார்த்தைகளும், பிரயோகங்களும் ருஜுக்களும் தெரிந்திருந்தால் பல மிருகங்கள் இதற்கெல்லாம் ஆக்ஷேபித்திருக்கக்கூடும். பாக்ஸருக்கக்கூட இந்த அறிக்கை தெளிவில்லாத ஒரு மனக்குழப்பத்தையும் துன்பத்தையும் தருவதாக இருந்தது. காதை நிமிர்த்திக் கொண்டு, பிடரியைச் சிலிர்த்துக் கொண்டு, தன் சிந்தனைகைள ஒழுங்குபடுத்திக் கொள்ள முயன்றது பாக்ஸர். ஆனால் கடைசியில் பார்க்கும்போது சொல்வதற்கு விஷயம் எதுவும் அகப்படவில்லை அதற்கு. ஆனால் பன்றிகளிலேயே சில, பலதரப்பட்ட வார்த்தைகளை உரக்கக் கொட்டின; தங்கள் ஆக்ஷேபத்தை பலமாகத் தெரிவித்தன. முன் வரிசையில் இருந்த நாலு வாலிபப் பன்றிகள் தங்கள் ஆக்ஷேபத்துக்கு அறிகுறியாகப் பல குரல்களில் கிறீச்சிட்டன. ஒரே சமயத்தில் நாலு பன்றிக் குட்டிகளும் எழுந்து நின்று கொண்டு பேசத் தொடங்கின. ஆனால் திடீரென்று நெபோலியனைச் சுற்றி உட்கார்ந்திருந்த நாய்கள் எல்லாம் பயமுறுத்துகிற வகையில் அந்தப் பன்றிக் குட்டிகளைப் பார்த்து உறுமின. பன்றிக்குட்டிகள் பேசாமல் உட்கார்ந்து விட்டன; மௌனமாகி விட்டன. உடனே ஆடுகள் உரத்த குரலில் "நாலுகால் நல்லது; இரண்டு கால் கெட்டது'' என்று பாடத் தொடங்கின. இது கிட்டத்தட்ட ஒரு கால்மணி நேரம் நடக்கவே விவாதம் செய்யவே முடியாமற் போய்விட்டது.

புது ஏற்பாடுகளைப் பற்றி அந்தப் பண்ணையிலுள்ள எல்லோரிடமும் சொல்லுவதற்காக ஸ்க்வீலர் என்ற பன்றி அனுப்பப்பட்டது.

"தோழர்களே! உங்களுக்கெல்லாம் தெரியும் – நான் சொல்லியா இது தெரிய வேண்டும்? தோழர் நெபோலியன் மகத்தான தியாக சிந்தனையுடன் இந்த அதிகப்படியான சுமையையும் தாமே ஏற்றுக் கொண்டிருக்கிறார். தலைமைப் பதவி என்பது இன்பம் பயப்பது என்று தோழர்களே நீங்கள் தவறுதலாக எண்ணக் கூடாது; அது எதிர்மாறானது, அது மிகவும் சிரமமான பொறுப்பு. எல்லா மிருகங்களும் சரிநிகர் சமமானவை என்பதைத்

தோழர் நெபோலியனைவிட உறுதியாக நம்புபவர்கள் வேறு யாருமில்லை. உங்கள் பிரச்னைகளை அலசி முடிவுகட்ட உங்களையே விட்டுவிடத் தோழர் நெபோலியன் தயார்தான். ஆனால் நீங்கள் தவறான தீர்மானம் செய்து, முடிவு கட்டிவிட்டால் என்ன பண்ணுவது? அதற்குப் பிறகு மிருகங்கள் பண்ணை சரிவர இயங்காதே! ஸ்நோபாலைப் பின்பற்றுவது என்று நீங்கள் தீர்மானித்திருந்தால் என்ன ஆகியிருக்கும்? காற்றாடி யந்திரம் என்கிற அஸ்திவாரமற்ற அவன் கனவைப் பின்தொடர நீங்கள் தீர்மானித்திருந்தால், மிருகங்கள் பண்ணை என்னவாகி யிருக்கும்? தோழர்களே யோசித்துப் பாருங்கள், ஸ்நோபால் ஒரு குற்றவாளி – வேறு என்ன?''

''ஆனால் அது மிகவும் தீரமாக மாட்டுக் கொட்டில் சண்டையில் ஈடுபட்டதே'' என்று சொல்லிற்று ஒரு குரல்.

''தீரமும் வீரமும் போதுமா? பணிவும், பக்தியும், சொன்னதைக் கேட்டுப் படியும் குணமும் வேண்டாமா?'' என்று கேட்டது ஸ்க்வீலர் பன்றி. தலைவரை மதிக்கும் தன்மைதான் நமது முதல் தேவை. தவிரவும் மாட்டுக் கொட்டில் சண்டையில் ஸ்நோபாலின் பங்கு சமீப காலத்தில் மிகைப்படுத்திக் கூறுப்படுகிறது என்று எனக்குத் தோன்றுகிறது. கட்டுப்பாடு – உறுதியான கட்டுப்பாடு! – அதுதான் இப்போது நம் முக்கிய கொள்கை. தோழர்களே! தவறி ஒரு விஷயத்தில் ஒரு அடி எடுத்து வைத்து விட்டாலும் உடனே நமது எதிரிகள் நம்மேல் பாய்ந்து பிடித்துக் கொண்டு விடுவார்கள். தோழர்களே, உங்களை நான் கேட்கிறேன் – ஜோன்ஸ் திரும்பி வந்து விடுவதை நீங்கள் யாரும் விரும்பவில்லையே?''

இந்தத் தடவையும் இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்ல முடியும்? நிச்சயமாக மிருகங்களில் எதுவும் ஜோன்ஸ் திரும்பி வருவதை விரும்பவில்லை என்பதில் சந்தேகத்துக்கு இடமேயில்லை. ஞாயிற்றுக்கிழமை விவாதங்கள் காலை நேரத்தில் நடப்பதால் அவன் திரும்பிவந்து விடக்கூடும் என்றால், அன்று அந்த விவாதங்களை விட்டு விடுவது நல்லதுதானே! இத்தனை நேரம் யோசனையில் முழுகி ஒரு முடிவுக்கு வந்துவிட்ட பாக்ஸர், பொது அபிப்பிராயத்தை, தெளிவாகச் சொல்லிவிட்டது. ''தோழர் நெபோலியன் அப்படிச் சொன்னால் அது சரியாகத்தான் இருக்கும்.''அந்த நிமிஷம் முதல் அதுவும் மற்ற மிருகங்களும் ''நெபோலியன் செய்வதே சரி'' என்று ஒரு கொள்கையைக் கடைப்பிக்கத் தீர்மானித்தன. ''இன்னும் சிரமப்பட்டு உழைப்பேன்'' என்கிற தன் சொந்தக் கொள்கையுடன் இதையும் சேர்த்துக் கொண்டது பாக்ஸர்.

இதற்குள் பருவம் மாறிவிட்டது. வஸந்தகாலத்து உழவு தொடங்கிவிட்டது. ஸ்நோபால் தன்னுடைய காற்று யந்திரத் திட்டத்தை வரைந்திருந்த கொட்டகை சாத்திப் பூட்டப்பட்டது. தரையிலிருந்த படங்களும், கணக்குகளும், திட்டங்களும் அழிக்கப்பட்டிருக்கும் என்றுதான் மற்ற மிருகங்கள் எண்ணிக் கொண்டிருந்தன். ஒவ்வொரு ஞாயிறன்றும் காலையில் பெரிய கொட்டகையில் கூடிய மிருகங்கள் வாரத்து வேலைகளைப் பற்றிய உத்தரவுகளைப் பெற்றுக் கொண்டு கலைந்தன. கிழட்டு மேஜர் பன்றியின் மண்டையோடு பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டு, துப்பாக்கிக்குப் பக்கத்தில், கொடிமரத்தின் மேல் வைக்கப்பட்டது. கொடியைப் பறக்க விட்டபின், மிருகங்களெல்லாம் அந்த மண்டையோட்டை வணங்கி மரியாதையுடனும், பணிவுடனும் கொட்டகைக்குள் வரவேண்டும் என்று விதிக்கப்பட்டது. முன்னெல்லாம் போல இப்போது எல்லா மிருகங்களும் சரிசமமாக உட்காருவதில்லை. கவிகள் புனைந்து பாடுவதில் வல்ல மினிமஸ் என்ற ஒரு பன்றியும், ஸ்க்வீலரும், நெபோலியனும் மேடைமேல் உட்காரும், அவற்றிற்குப் பின்னால் அர்த்த சந்திர வடிவத்தில் ஒன்பது வேட்டை நாய்களும் நின்றன. மேடைமேல் மற்ற பன்றிகள் எல்லாம், நெபோலியனுக்குப் பின்னால் உட்கார்ந்திருந்தன. கொட்டகையின் கீழ்ப் பரப்பில் மற்ற எல்லா மிருகங்களும் நெபோலியனைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்தன. அந்த வாரத்து உத்தரவுகளை நெபோலியன் உரத்த ராணுவ அதிகாரக்குரலில் வாசிக்கும். வாசித்தானதும் 'இங்கிலாந்தின் மிருகங்கள்' பாட்டை ஒருதரம் பாடிவிட்டு மிருகங்கள் கலைந்துவிடும்.

ஸ்நோபாலை விரட்டியடித்த மூன்றாவது ஞாயிறன்று, ஸ்நோபாலின் காற்றாடி யந்திரம் எப்படியும் நிர்மாணிக்கப்படும் என்று நெபோலியன் அறிவித்தபோது, மற்ற மிருகங்களெல்லாம் ஆச்சரியப்பட்டன. தன் மனதுமாறினதற்குக் காரணம் எதுவும் உண்டு என்று நெபோலியன் சொல்லவில்லை. ஆனால் காற்றாடி யந்திரம் நிர்மாணிப்பதற்கு மிருகங்கள் எல்லாமாகச் சேர்ந்து வெகுவாகப் பாடுபட வேண்டும் என்று மட்டும் உஷார்ப்படுத்தியது நெபோலியன். கொடுக்கப்படும் உணவு அளவுகூடக் கொஞ்ச காலம் குறையலாம் என்று சொல்லிற்று. கடைசிப் புள்ளி விவரங்கள், கோடுகள், ஆணிகள், சக்கரங்கள் வரையில் எல்லாம் சரிவரப் பூரணமாகத் தயாராகிவிட்டன. மூன்று வாரங்களாக ஒரு பிரத்தியேகப் பன்றிக் கமிட்டி அந்த வேலைகளைக் கவனித்து வந்திருந்ததாம்; பல பது

சீர்திருத்தங்களுடன் காற்றாடி யந்திரம் நிர்மாணமாக இருந்தது; இரண்டு வருஷங்களில் கட்டி முடித்துவிடலாம் என்றும் அறிவித்தது நெபோலியன்.

அன்றுமாலை ஸ்க்வீலர் பன்றி ஒவ்வொரு மிருகத்திடமும் போய் ஆரம்ப முதலே நெபோலியன் காற்றாடி யந்திரத்தை உண்மையில் எதிர்க்கவேயில்லை என்று ஸ்தாபிக்க முயன்றது. அது கூறியதாவது நெபோலியன் தான் காற்றாடி யந்திர யோசனையை முதலில் சொன்னது: அதற்கான திட்டங்களையும் வரைந்து ரகசியமாக வைத்திருந்தது. ஸ்நோபால் அந்தத் திட்டத்தைத் திருடித் தன்னுடையதாக வெளியிட்டது" என்று விவரமாக எல்லா மிருகங்களுக்கும் புரியக் கூடிய பாஷையில், சொல்லிற்று ஸ்க்வீலர். காற்றாடி யந்திரம் என்பது நெபோலியனின் தனி முழு சிருஷ்டிதான் – வேறில்லை. "அப்படியானால் ஏன் நெபோலியன் முதலில் அதை அப்படி ஆக்ஷேபித்தது?" என்று ஒரு மிருகம் கேட்டது. இதைக்கேட்ட ஸ்க்வீலர் கெட்டிக்காரத்தனமான ரகசியக்குரலில் சொல்லிற்று. "அதுதான் தோழர் நெபோலியனின் கெட்டிக்காரத்தனம்" என்றது அது. காற்றாடி யந்திரத்தை எதிர்ப்பதாக வேஷம் போட்டதே தவிர வேறு அல்ல. அப்படி வேஷம் போட்டதால்தானே தந்திரமாக ஸ்நோபாலை விரட்டிவிட்டு தன் கற்பனையை தன் திட்டத்தை தானே நிறைவேற்றவும் வழி ஏற்பட்டது! ஏன் ஸ்நோபாலை விரட்ட வேண்டும் என்று கேட்டால், "அது தீய குணங்கள் படைத்த மிருகம்; மிருகங்களின் எதிரி; மற்றவர்கள் வேலை செய்வதையும் தடுக்கும் துர்க்குணம் படைத்த துரோகி, இதெல்லாமே ராஜ்ய தந்திரம்" என்றது ஸ்க்வீலர். பல தடவைகள் "தந்திரம் தோழர்களே, ராஜ்ய தந்திரம்" என்று சொல்லிற்று ஸ்க்வீலர். ராஜ்ய தந்திரம் என்றால் என்னவென்று மிருகங்களுக்கு நிச்சயமாகத் தெரியவில்லை என்பது உண்மைதான். எனினும் ஸ்க்வீலர் அப்படி ரகசியக் குரலில், எல்லாம் தெளிவாகிவிட்ட மாதிரிப் பேசும்போது, அவனை என்ன செய்ய முடியும்? புரிந்து விட்ட மாதிரி பேசாதிருந்துவிட்டன. போதாததற்கு அதன் கட்சியை வலியுறுத்த நெபோலியனின் மூன்று வேட்டை நாய்களும் ஸ்க்வீலர் பக்கத்தில் வந்து நின்று கொண்டு, மற்ற மிருகங்களைப் பார்த்து உறுமிக்கொண்டிருந்தன. வேறு கேள்விகள், சந்தேகங்கள் கேட்டு விவாதத்தை வளர்க்காமல், மற்ற மிருகங்கள் ஸ்க்வீலர் சொன்ன விளக்கவுரையை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்து விட்டன. ●

# 6

அந்த வருஷம் பூராவும் மிருகங்கள் எல்லாம் அடிமைகள்போல வேலை செய்தன. ஆனால் வேலை செய்வதிலே ஒரு ஆனந்தம் இருப்பதைக் கண்டன அவை. எந்தத் தியாகமும் செய்யத் தயங்கவில்லை அவை: எப்படிப் பாடுபட வேண்டுமானாலும் பாடுபடத் தயாராகவே இருந்தன. எது செய்தாலும் கடைசியில் தங்களுக்கே அது லாபகரமானதாக இருக்கும் என்று அவற்றிற்கு நம்பிக்கை இருந்தது. தங்கள் வாழ்நாளில் அது லாபந்தராவிட்டாலும், பிற்கால சந்ததியாருக்கு நிச்சயம் பலன் தரும் என்கிற நம்பிக்கையில் அவை எதையும் கஷ்டப் பட்டுச் செய்யத் தயாராக இருந்தன. தவிரவும் தங்கள் உழைப்பினால் சோம்பேறிகளான மனிதர்கள், திருட்டுப் புத்தியுள்ள மனிதர்கள் நிச்சயமாக லாபமடையமாட்டர்கள் என்கிற நம்பிக்கையும் அவர்களை வெகுவாக ஊக்கி முன்னேறச் செய்தது.

வஸந்தத்திலும் கோடையிலும் அவை வாரத்தில் அறுபது மணிநேரம் வேலை செய்தன. ஆகஸ்டு மாதத்தில் இனிமேல் ஞாயறன்று மாலை

நேரங்களிலும், அவை உழைத்தாகவேண்டும் என்று நெபோலியன் உத்தரவிட்டது. தானாக ஏற்று மனசுடன் செய்த வேலைதான் அது. ஆனாலும் எந்த மிருகமாவது அப்படி வேலைசெய்யத் தவறினால் கொடுக்கப்படும் உணவு பாதியாகக் குறைக்கப்படும் என்று நெபோலியன் சொல்லிற்று. இப்படியெல்லாம் உழைத்தும், பல காரியங்கள் செய்யப் படாமலும் பூர்த்தியாகாமலுந்தான் இருந்தன. முந்திய வருஷத்தைவிட அறுவடை குறைவாகவே இருந்தது. கோடை ஆரம்பத்தில் கிழங்கு நடவேண்டிய இரண்டு வயல்களில் கிழங்கு நடவேயில்லை: வயல்கள் உரிய சமயத்தில் உழுது பண்படுத்தத் தயாராகவில்லை. அடுத்த மாரிக்காலத்தில் கஷ்டங்கள் இன்னும் அதிகமாகிவிடும் என்று கண்டுகொள்வது சுலபமாகவே இருந்தது.

காற்றாடி யந்திரம் நிர்மாணிக்கும் வேலையும் சற்று எதிர்பார்த்ததையும்விடக் கடினமானதாகத்தான் இருந்தது. எதிர்பாராத சில கஷ்டங்களும் முளைத்தன. கல்வெட்டி எடுக்க, சுக்காங்கற்குன்று ஒன்று பண்ணையிலே இருந்தது. பண்ணையிலே போதுமான சுண்ணாம்பும் சிமிட்டியும் தயாராக இருந்தன. கட்டிடம் கட்டுவதற்குத் தேவையான சாமான்கள் எல்லாம் சுலபமாகவே கிடைத்தன. ஆனால் அந்தக் கற்களைத் தேவையான அளவுக்கு எப்படி உடைத்துச் சேர்ப்பது என்பதுதான் முதலில் மிருகங்களுக்குத் தெரியவில்லை. கற்கோடரியையும், சம்மட்டியையும் கொண்டுதான் இதைச்செய்ய முடியும்போல இருந்தது. ஆனால் இதை. உபயோகிக்க மிருகங்களால் முடியாது. பின்னங்கால்களால் நின்று கொண்டால் ஒழிய இது சாத்தியமல்ல. பல வாரங்கள் வியர்த்தமாகப் பல முயற்சிகள் செய்தபின்தான் சரியான யோசனை ஒரு மிருகத்துக்குத் தோன்றியது– குன்றின் மேலிருந்து கற்களை உருட்டிவிட்டால் தானே கீழே விழுந்து அவை சிறுசிறு கற்களாக நொறுங்கிவிடும். கீழே பல பெரிய கற்கள் கிடந்தன. அவற்றை ஒன்றன் பின் ஒன்றாகக் குன்றின்மேல் எல்லா மிருகங்களுமாகச் சேர்ந்து புரட்டிக்கொண்டுபோய் உச்சியிலிருந்து உருட்டித் தள்ளின. உச்சியில் கொண்டுபோய்க் கற்களைச் சேர்ப்பதுதான் மிகவும் பிரயாசையான காரியமாக இருந்தது. கயிற்றைக் கட்டி, ஆடு, மாடு. குதிரை எல்லாமாகச் சேர்ந்து மேலே இழுத்தன; அவசியமானபோது இந்த வேலையில் பன்றிகள் கூட உதவின. உடைந்த கற்களைக் கொண்டுவந்து காற்றாடி யந்திரம் கட்டவேண்டிய இடத்தில் சேர்ப்பது சுலபமான வேலைதான். வண்டியில் போட்டுக் குதிரைகள் கொணர்ந்தன; சில ஆடுகள்

ஒவ்வொரு கல்லாகவும் புரட்டிக்கொணர்ந்து சேர்த்தன; முரியலும் பெஞ்சமினும் கூட பழைய ரேக்ளா வண்டியில் கற்களைப் போட்டு இழுத்துக் கொணர்ந்து சேர்த்தன. கோடை முடிவுக்குள் தேவையான கற்கள் வந்து சேர்ந்துவிட்டன. பன்றிகளின் மேற்பார்வையில் அதற்குப் பிறகு கட்டிட வேலை தொடங்கிற்று.

ஆனால் அது மிகவும் மெதுவாக, ரொம்ப ரொம்ப மெதுவாக நடந்தது. சிரம சாத்தியமான காரியமாகத்தான் இருந்தது அது. ஒரு நாள்பூராவும் அலுப்புத் தருகிற வகையிலே முழு முயற்சியும் செய்தால் ஒரு பெரிய கல்லைக் குன்றின் மேல் எல்லா மிருகங்களுமாகச் சேர்ந்து உருட்டி ஏற்ற முடிந்தது. சில சமயம் கீழே புரட்டிவிடப்பட்ட கல் உடையவில்லை, பாக்ஸர் மட்டும் முழுமனதுடனும் வேலை செய்யவில்லை என்றால் அந்தக் காரியமும் உருப்படியாக நடைபெற்றிராது. மற்ற எல்லா மிருகங்களும் சேர்ந்து சாதித்த காரியங்களை பாக்ஸர் தனியாகவே சாதிக்கும் வலுவும், உறுதியும் பெற்றிருந்தது. குன்றின் சரிவிலே ஏற்றிக் கொண்டிருந்த பெரிய கல் நழுவ ஆரம்பிக்கும்; மற்ற மிருகங்கள் எல்லாம் சேர்ந்தும் சமாளிக்க முடியாமல் திணறும், அவையும் சேர்ந்து சரிவிலே நழுவிக் கீழே இழுத்துச் செல்லப்படும். அப்போதெல்லாம் கயிற்றை இழுத்துப் பிடித்து கல் சரியாமலும், மிருகங்கள் நழுவி விழுந்து உயிர் இழந்து விடாமலும் காப்பாற்றியது பாக்ஸர் தான். மூச்சுத் திணற ஒரு ஒரு அங்குலமாக அது கல்லையும் கட்டி இழுத்துக் கொண்டு சரிவிலே ஏறுவதைப் பார்க்கும் போது ஆனந்தமான அற்புதமான நம்பிக்கை யூட்டும் காட்சியாகத் தான் இருந்தது அது. உடலெல்லாம் வியர்வை அரும்பி வழிந்தோடும்: கால் குளம்புகள் பூமிக்குள் பள்ளமே பறித்து விடும் போல அழுந்தும்; எல்லா மிருகங்களும் அதிசயத்துடனும் ஆச்சரியத்துடனும் பாக்ஸர் வேலை செய்வதைப் பார்த்து, நம்பிக்கையுடன், மேலும் கெட்டியாக வேலை செய்ய ஊக்கம் கொள்ளும். இப்படி அதிக வேலை செய்தால் உடல் கெட்டுவிடும் என்று சில சமயம் க்ளோவர் பாக்ஸருக்குச் சொல்வதுண்டு. ஆனால் பாக்ஸர் அதைக் காதில் போட்டுக்கொள்ளாது. அதனுடைய இரண்டு ஆதாரக் கொள்கைகளாகிய, "இன்னும் அதிகமாக நான் உழைப்பேன்" என்பதும், "நெபோலியன் செய்வதே சரி" என்பதும்— அதைப் பற்றிய வரையில் எதற்கும் போதுமானவையாக இருந்தன. எல்லாப் பிரச்னைகளுக்கும், சந்தேகங்களுக்கும் அந்த இரண்டு ஸ்லோகங்களிலும் பதில் அடங்கியிருந்தது, பாக்ஸரைப் பற்றியவரையில். ஒரு சேவலிடம் சொல்லி

மற்றவர்கள் எழுந்திருப்பதற்கு அரைமணி முன்னால் தன்னை எழுப்பிவிடும்படி ஏற்பாடு செய்து கொண்டிருந்தது. முதலில் அரைமணி முன்னால் எழுந்த பாக்ஸர் சில நாட்களுக்கப் பிறகு முக்கால் மணி முன்னதாக எழுந்திருக்கப் பழகிக் கொண்டது. இப்பொழுதெல்லாம் ஒழிந்த நேரம் என்று சொல்ல நேரமே கிடையாது அதற்கு; ஆனால் ஒரு விநாடி நேரம் கிடைத்தால் கூட அது தானாகவே கல் பட்டறைக்குப் போய் ஒரு கூடை உடைத்த கற்களைச் சுமந்து வரும். தானாவே பிறர் உதவியை நாடாமல் செய்யக் கூடிய காரியங்களை எல்லாம் செய்துவிடும்.

வேலை தான் கடுமையாக இருந்ததே தவிர, மற்றபடி அந்தக்கோடை பூராவும் மிருகங்களெல்லாம் செளகரியமாகவே இருந்தன. ஜோன்ஸ் காலத்தில் கிடைத்ததை விட அதிகமாக உணவு கிடைக்கவில்லை என்றாலும், அதே அளவாவது கிடைக்கிறதே என்று சந்தோஷப்பட்டன அவை. தங்களைத் தவிர வேறு யாருக்கும் உணவு சம்பாதித்துத் தரவேண்டிய அவசியம் இல்லாததற்காக எத்தனை அசெளகரியங்கள் வேண்டுமானாலும் பட அவை தயாராக இருந்தன. பல காரியங்களில், மனிதர்கள் செய்ததைவிடச் சுலபமாகவும், சீக்கிரமாகவும் தங்கள் ஒரு வேலைகளை செய்து முடித்தன மிருகங்கள். எந்த காரியத்தையும் செய்து முடிப்பதற்கு மிருகங்கள் கையாண்ட முறை, மனிதர்கள் கையாண்ட முறைகளை விட ரொம்பத் திறமை வாய்ந்ததாக இருந்தது. உதாரணமாக களைபிடுங்கும் வேலையை, மனிதர்களைக் காட்டிலும் மிருகங்கள் பூரணமாகச் செய்ய முடியும் என்பதில் சந்தேகம் என்ன? தவிரவும் மிருகங்கள் எதையும் இப்போது திருடுவதில்லை, ஆகவே தானிய வயல்களைச் சுற்றி வேலிகள் அவசியமில்லாது போய்விட்டது. வேலிகளையும் கதவுகளையும் அமைத்துக் காப்பாற்ற வேண்டிய வேலையும் குறைந்தது. இருந்தும், கோடை செல்லச் செல்ல, எதிர்பாராத பல குறைபாடுகள் பண்ணையிலே தெரியத் தொடங்கின. பாரஃபின், எண்ணெய், ஆணிகள், கயிறு, நாய் பிஸ்கோத்துகள், லாடத்துக்கு இரும்பு முதலியனவெல்லாம் அவசியமாயின. ஆனால் அவற்றைப் பண்ணையில் உற்பத்தி செய்ய முடியாது. விதைகள், செயற்கை எரு முதலியனவும் பின்னால் தேவைப்படும். அது தவிர விதவிதமான ஆயுதங்கள் வேண்டியதாக இருந்தன. கடைசியாக காற்றாடி யந்திரத்துக்கு அவசியமான பாகங்கள் வேறு தேவைப்பட்டன. இவற்றையெல்லாம் எப்படிச் சேர்ப்பது என்று தான் மிருகங்களுக்கெல்லாம் புரியவில்லை.

ஒரு ஞாயிறன்று காலையில், மிருகங்கள் எல்லாம் பெரிய கொட்டகையில் கூடியிருந்தபோது, நெபோலியன் ஒரு புது நடைமுறைக் கொள்கையை வெளியிட்டது. அதைத்தானே தீர்மானித்து முடிவுகட்டிவிட்டதாக வெளியிட்டது. இப்போது முதல் மிருகங்கள் பண்ணையைச் சுற்றிலும் இருந்த மற்ற பண்ணைகளுடன் உறவு கொண்டாடி பேரம் பண்ணி அவசியமான பொருள்களை வாங்கிக் கொள்ளும். இப்படிப் பேரம் செய்வது கேவலம் வியாபாரார்த்தம் அல்ல. அவசியமான பல தேவைகளைத் திருப்தி செய்து கொள்வதற்காக இந்த பேரம் அவசியமாகிறது என்றது நெபோலியன். மற்ற எல்லாவற்றையும் விட அதிமுக்கியமானதாகக் காற்றாடி யந்திரத்தின் தேவைகளைக் கருத வேண்டும் என்றது அது. பண்ணையின் எதிர்கால சுபிட்சம் காற்றாடி யந்திரத்தைப் பொறுத்தது என்பதனால் அது அத்தியாவசியமாயிற்று என்றது. ஆகவே வைக்கோல் போர்களில் சிலவற்றையும், அறுவடை செய்த கோதுமையில் ஒரு பங்கையும் விற்க வேண்டியது என்று தான் தீர்மானித்துவிட்டதாக அறிவித்தது நெபோலியன் பின்னர் இன்னும் பணம் வேண்டியதாக இருந்தால், கோழிகள் இட்ட முட்டைகளையும் விற்க வேண்டி நேரிடலாம். வில்லிங்டன் கிராமத்தில் கோழி முட்டைகளுக்கு எப்போதுமே கிராக்கியுண்டு; விலை போகும். காற்றாடி யந்திரத்தை நிர்மாணிக்க கோழிகள் செய்த பிரத்தியேகத்தியாகமாக இதை எண்ணி, அவை ஏழேழு ஜன்மத்துக்கும் பெருமைப்படலாம் என்றது நெபோலியன்.

மீண்டும் மிருகங்களிடையே தெளிவில்லாத ஒரு அதிருப்தியும் அவநம்பிக்கையும் தலை தூக்கின. மனிதர்களுடன் எந்த மாதிரியும் பழகுவதில்லை; வியாபாரத்தில் எக்காரணம் கொண்டும் ஈடுபடுவதில்லை; பணத்தைக்கையிலும் தொடுவதில்லை– என்பவை யெல்லாம் புரட்சிக்கே ஆதாரமான கொள்கைகள் அல்லவா? ஜோன்ஸை அடித்து விரட்டியவுடன் மிருகங்கள் கூடத் தீர்மானித்துக் கொண்ட அடிப்படை விஷயங்கள் அல்லவோ அவையெல்லாம்! மிருகப் புரட்சி வெற்றியின் அஸ்திவாரமே அவை தானே? இப்படித் தீர்மானங்கள் செய்த விஷயம் பல மிருகங்களுக்கும் நன்றாகவே ஞாபகம் இருந்தது– அல்லது ஞாபகம் இருப்பது போல இருந்தது. நெபோலியன் விவாதக் கூட்டங்கள் தேவையில்லை என்று சொன்னபோது எதிர்த்து இரண்டு வார்த்தைகள் சொன்ன நாலு வாலிபப் பன்றிகளும் இப்போதும் அதிகத் தெம்பில்லாமல். இது பற்றித் தங்கள் சந்தேகங்களை வெளியிட்டன. ஆனால் அவர்களைப் பார்த்து வேட்டை

நாய்கள் உறுமத் தொடங்கியவுடனே அவை வாயை மூடிக்கொண்டு விட்டன. உடனேயே ஆடுகள் "நாலு கால் நல்லது: இரண்டு கால் கெட்டது" என்கிற பாட்டைத் தொடங்கியவுடனே துணிச்சலற்ற எதிர்ப்புக் குரல்கள் யார் காதிலும் விழவேயில்லை. யாரோ எதிர்த்தார்கள் என்கிற அசட்டுக் காரியமே அமுங்கிப் போய் விட்டது. கடைசியில் மௌனமாக இருங்கள் என்பதற்கு அறிகுறியாக நெபோலியன் ஒரு காலைத் தூக்கிக் காட்டிவிட்டு, ஏக மனதாக நிறைவேறிய இந்தத் தீர்மானத்தின்படிச் செயலாற்ற வேண்டியதற்கான வழிகளிலெல்லாம் தான் ஏற்கெனவே ஏற்பாடு செய்து விட்டதாக அறிவித்தது. மிருகங்களில் எதுவும் எந்த மனித ஜந்துவையும் அணுக அவசியமே கிடையாது. அப்படி நேர்ந்தால் அது நல்லதற்கல்ல என்கிற அபிப்பிராயத்தை அது ஆணித்தரமாகத் தெரிவித்தது. ஆனால் தானே இந்த அவசியமான ஆனால் வெறுக்க வேண்டிய பொறுப்பை ஏற்று நடத்தச் சித்தமாக இருப்பதாகத் தெரிவித்தது நெபோலியன். கிராமத்தில் வசித்த மிஸ்டர் விம்பர் என்கிற ஒரு வக்கீல் மூலம் மிருகங்கள் பண்ணையின் கொடுக்கல் வாங்கல் காரியங்களெல்லாம் நடைபெற ஏற்பாடு செய்திருந்தது நெபோலியன். வெளியுலகுக்கும், மிருகங்கள் பண்ணைக்கும் உள்ள ஒரே தொடர்பு அந்த வக்கீல் தான். ஒவ்வொரு திங்கள் அன்றும் அந்த வக்கீல் பண்ணைக்குள் வந்து ஒரு வாரத்துக்கான தகவல்களைப் பெற்றுக் கொண்டு செல்வார். பிரசங்கத்தை "மிருகங்கள் பண்ணை வாழ்க! வாழ்க!" என்று சொல்லி வழக்கம் போல முடித்தது நெபோலியன். மிருகங்கள் எல்லாம் 'இங்கிலாந்தின் மிருகங்கள்' பாட்டைப்பாடிவிட்டுக் கலைய அனுமதிக்கப்பட்டன.

அதற்குப் பிறகு, ஸ்க்வீலர் பன்றி மிருகங்கள் பண்ணையில் அங்கு மிங்கும் ஓடித் திரிந்து மிருகங்களின் மனதில் எழுந்த சந்தேகங்களை யெல்லாம் நிவர்த்தி செய்து வைத்தது. வியாபாரம் செய்வதில்லை என்றோ, பணத்தையே தொடுவதில்லை என்றோ புரட்சிக்குப் பின் தீர்மானங்கள் நிறைவேற்றப்படவேயில்லை என்று சாதித்தது அது. அப்படிப்பட்ட தீர்மானங்களை யாரும் கொண்டு வரவே இல்லை என்றது அது. கற்பனை தான் அது: ஸ்நோபால் கிளப்பிவிட்ட அநேக பொய் வதந்திகளில் அதவும் ஒன்றாக இருந்தாலும் இருக்கலாம் என்றது ஸ்க்வீலர் பன்றி. சில மிருகங்களுக்கு இன்னும் கொஞ்சம் சந்தேகமாகத் தான் இருந்தது, ஸ்க்வீலர் அவற்றைக் கேட்டது: "இப்படியெல்லாம் தீர்மானங்கள் செய்ததாக நீங்கள் கனவு கண்டிருப்பீர்கள். சில தோழர்கள் கனவு கண்டால் அது

உண்மை என்று அர்த்தமாகி விடுமா என்ன? எங்கேயாவது இந்தத் தீர்மானங்களை எழுதி வைத்திருக்கிறதா, சொல்லுங்கள்? எங்கும் எழுதப்படாத தீர்மானங்கள் நிறைவேறியதாக எப்படிச் சொல்ல முடியும்?'' உண்மை தான். எங்கும் இத்தீர்மானங்கள் எழுதிவைக்கப்படவில்லை என்பது உண்மைதான். சந்தேகப்பட்ட மிருகங்கள் தாங்கள் நினைத்தது தவறாகத் தான் இருக்கும் என்று தங்கள் மனதை மாற்றித் தேற்றிக் கொண்டன.

ஏற்பாடு செய்யப்பட்டபடி ஒவ்வொரு திங்களன்றும் மிஸ்டர் விம்பர் மிருகங்கள் பண்ணைக்கு விஜயம் செய்தார். கிருதா மீசையுடன் தந்திரக்கார மனிதர் போலத் தோற்றமளித்தார் அவர். ரொம்ப சொற்பமாகத்தான் அவருக்குத் தொழில் நடந்தது. ஆனால் கெட்டிக்காரர் என்று தெரிந்தது. மற்ற பண்ணைகளுடன் பேச்சுவார்த்தை நடத்த மிருகங்கள் பண்ணைக்கு ஒரு வக்கீல் தேவையாக இருக்கும் என்பதை எல்லோருக்கும் முன்னாலேயே தெரிந்துகொண்டார். அங்கு கிடைக்கக்கூடிய லாபம் கமிஷன் முதலியன போதுமானவையாக இருக்கும் என்பதையும் அறிந்து அந்தப் பதவியைத் தேடிக்கொண்டார் அவர். அவர் வந்து போவதை ஒரு தினுசான பயத்துடனும், பீதியுடனும் பார்த்தன மிருகங்கள் எல்லாம். அவர் பக்கம் போவதேயில்லை அவை. இருந்தாலும் நிமிர்ந்து இரண்டு கால்களில் நின்று கொண்டிருந்த விம்பர் மனிதன் நாலுகால் பன்றியாகிய நெபோலியனின் உத்தரவுகளைக் கேட்டு, அவற்றிற்குக் கீழ்ப்படிந்து நடப்பது அவர்கள் மனதுக்கும் ஓரளவு உத்ஸாகம் தருவதாக இருந்தது; பெருமையாகவே இருந்தது. புது ஏற்பாடு கூட நல்ல ஏற்பாடுதான் என்று நினைக்க அவர்களைத் தூண்டியது. இரண்டு கால் ஆசாமி, நாலுகால் மிருகங்களுக்குக் கீழ்ப்பணிந்து நடந்தது உத்ஸாகம் தரும் காக்ஷியாகத்தான் அந்த மிருகங்களுக்குப்பட்டது. இப்போது மனிதர்களுடன் மிருகங்களின் உறவு முன்பிருந்ததைப் போல இல்லை; மாறிவிட்டது. அது க்ஷேமப் பாதையில் முன்னேறிக் கொண்டிருந்தது என்பதற்காக மிருகங்கள் பண்ணையை மனிதர்கள் குறை சொல்லாமலோ, கேலி செய்யாமலோ, வெறுக்காமலோ இல்லை. முன்பு வெறுத்ததைவிட இப்போது அதை அதிகமாக வெறுத்தார்கள் என்றே சொல்ல வேண்டும். இன்றோ நாளையோ, கூடிய சீக்கிரத்தில் ஒரு நாள் மிருகங்கள் பண்ணை கவிழ்ந்து அழிந்துவிடும் என்றுதான் மனிதர்களில் ஒவ்வொருவரும் நம்பினார்கள்; அப்படி நம்ப வேண்டியதுதான் தங்கள் தருமம் என்றும்

அவர்கள் எண்ணினார்கள். காற்றாடி யந்திர முயற்சி ஒருக்காலும் பலிக்கப் போவதில்லை என்பது அவர்களுக்குத் தெளிவாகவே தெரிந்தது. மதுக்கடைகளிலும், சத்திரஞ்சாவடிகளிலும் சந்திக்கும்போது பேனாவும், பென்சிலும், பேப்பருமாகக் கோடுகள் போட்டு வரைந்து காட்டி, தெளிவான ஒரு விஷயத்தை, ஏன் காற்றாடி யந்திரம் சாய்ந்து விடும் என்பதை மீண்டும் ஒருதரம் ஒருவருக்கொருவர் ருஜுப்பித்துக் கொள்வார்கள். சாயாமல் நிமிர்ந்து நின்றாலும்கூட அதன் வேலையை அது செய்யவே செய்யாது என்று தலையை ஆட்டிக்கொண்டே சொல்வார்கள். இருந்தாலும், சித்தமில்லாமலே, மிருகங்கள் தங்கள் அலுவல்களைக் கவனித்து முன்னேறியதுபற்றி அவர்கள் ஒரு நல்ல அபிப்பிராயம் கொள்ளாமலிருக்க முடியவில்லை. மிகவும் சிறப்பான முறையில் மிருகங்கள் சுறுசுறுப்பாகப் பயன் தருகிற மாதிரிக் காரியங்களை செய்தன என்று ஏற்றுக்கொண்டு மனிதர்களும் அந்த மிருகங்கள் பண்ணை மிருகங்களுக்கு மரியாதை தரத் தயாராகவே இருக்கவேண்டியதாக இருந்தது. இன்னமும் அதைப் பெரிய பண்ணை என்று சொல்லாமல், அதற்குரிய பெயரான மிருகங்கள் பண்ணை என்கிற பெயரிட்டு அழைத்ததையே இந்த மரியாதைக்கு ஒரு ருஜுவாகச் சொல்லலாம். ஜோன்ஸைப் பாராட்டி, அவனுக்கு உதவுவதாக வீம்பு கூறுவதையும் மனிதர்கள் நாளடைவில் விட்டுவிட்டார்கள். தன் பண்ணை இனித் தன் கைக்கு வராது என்கிற தீர்மானத்துடன் ஜோன்ஸ் அந்தப் பிராந்தியத்தை விட்டு வேறு இடத்துக்குப் போய்க் குடியேறிவிட்டான். விம்பர் மூலமாக ஏற்பட்டதைத் தவிர வெளி உலகத்துக்கும் மிருகங்கள் பண்ணைக்கும் நேரடியான தொடர்புகள் ஒன்றும் இல்லை இன்னமும். ஆனால் நெபோலியன் பாக்ஸ்வுட் பண்ணை சொந்தக்காரரான மிஸ்டர் பில்கிங்டனுடனோ அல்லது பிஞ்ச்ஃபீல்ட் முதலாளியான ஃப்ரகிங்டனுடனோ உடனடியாக வியாபார ஒப்பந்தம் ஒன்றும் செய்துகொள்ளப் போகிறது என்கிற வதந்தி மட்டும் எழுந்து எழுந்து அடிக்கடி அடங்கிக் கொண்டிருந்தது. இந்த இருவரில் ஒருவருடன் மட்டுந்தான் நெபோலியன் உடன்படிக்கை செய்து கொள்ளும் என்பது தீவிரமாக வற்புறுத்தப்பட்டு வந்தது. ஒரே சமயத்தில் இருவருடனும் ஒப்பந்தம் செய்து கொள்வதாக இல்லை நெபோலியன்.

சற்றேறக்குறைய இதே சமயத்தில் பன்றிகள் திடீரென்று பண்ணை வீட்டுக்குள் குடியேறின. ஆரம்ப காலத்தில் பண்ணை வீட்டில் குடியிருப்பதுபற்றி ஒரு தீர்மானம் நிறைவேற்றியதாக மிருகங்களுக்கு

லேசாக ஒரு ஞாபகம் இருந்தது. மீண்டும் ஸ்க்வீலர் எத்தனையோ பேச்சுக்கள் பேசி அப்படியெல்லாம் ஒன்றுமில்லையே என்று ஸ்தாபித்துவிட்டது. பண்ணையின் அஸ்திவார மூளைகளான பன்றிகள் அமைதியான ஒரு இடத்தில்தான் தங்கள் வேலைகளைச் சரிவரக் கவனிக்க முடியும் என்றது ஸ்க்வீலர். இப்போதெல்லாம் நெபோலியனைப் பெயர் சொல்லிக் குறிப்பதில்லை அது; தலைவன் என்றுதான் குறிப்பிடும். தலைவரின் கௌரவத்துக்கும் ஏற்றது அந்த வீட்டில் வசிப்பதுதான்; பன்றிக் கொட்டிலில் தலைவர் அடைபட்டுக் கிடந்தால் அது பண்ணையின் கௌரவத்துக்கே இழுக்கான காரியம் அல்லவா? இப்படியெல்லாம் ஸ்க்வீலர் பேசியும் மிருகங்கள் சிலவற்றிற்கு அதிருப்தியாகத்தான் இருந்தது. பன்றிகள் சமையலறையில் சாப்பிட்டன என்பது மட்டுமன்றி, படுக்கை அறைகளில் படுத்துறங்கின என்று அறிந்தபோது மிருகங்களுக்கு மன நிம்மதியில்லாமல் போயிற்று. பாக்ஸர் வழக்கம்போல "நெபோலியன் செய்வதே சரி" என்று சொல்லி விவாதத்தை முடித்துவிட்டது. ஆனால் க்ளோபருக்குப் புரட்சி காலத்திய விதி ஒன்று, மிருகங்கள் படுக்கையில் படுத்துறங்குவதைத் தடுத்ததாக ஞாபகம் இருந்தது. கொட்டகையின் கோடிச் சுவரில் எழுதியிருந்த ஏழு விதிகளையும் போய்ப் பார்த்தது. பாவம், அதற்குத் தனி எழுத்துக்களைத் தவிர வேற எதையும் படிக்க வரவில்லை. முரியலை அழைத்துவந்து படிக்கச் சொல்லிற்று.

"முரியல்! நீ அந்த நாலாவது விதியைப் படி. படுக்கையில் படுத்துறங்குவது பற்றி அதில் என்ன சொல்லியிருக்கிறது படி" என்றது.

மிகவும் சிரமப்பட்டு முரியல் எழுத்துக் கூட்டிப் படித்தது.

"விதி சொல்கிறது; விரிப்பு விரித்த படுக்கையில் மிருகங்கள் படுத்து உறங்கக் கூடாது' என்று" கடைசியாக வாசித்தது முரியல்.

விரிப்புகளைப் பற்றிப் புரட்சிக் காலத்திய விதிகளில் எதுவும் இருந்ததாக க்ளோவருக்கு ஞாபகமேயில்லை என்பது உண்மைதான். ஆனால் நாலாவது விதிதான் தெளிவாக எழுதியிருந்ததே! அதில் தவறு என்ன இருக்கக் கூடும்? இரண்டு வேட்டை நாய்களுடன் அந்த சமயம் அகஸ்மாத்தாக அங்கு வந்து சேர்ந்த ஸ்க்வீலர் கொஞ்ச நஞ்சம் இருந்த சந்தேகத்தையும் தீர்த்துக் கட்டிவிட முற்பட்டது.

அது சொல்லிற்று; "தோழர்களே; நாங்கள் வீட்டில் படுக்கைகளில் படுத்துறங்குகிறோம் என்று கேள்விப்பட்டீர்களா? அது உண்மைதான். ஏன்

கூடாது? படுக்கைகளைப் பற்றி புரட்சி விதிகள் தடுப்பானேன்? படுத்து உறங்குமிடமெல்லாம் படுக்கைதான். ஒரு வைக்கோல் போரும், மாட்டுக் கொட்டில் அடைப்பும் படுக்கைதான். மனிதர்கள் உபயோகிக்கும் விரிப்புகளை மிருகங்களாகிய நாம் உபயோகிக்கக் கூடாது என்பதுதான் விதியின் சாரம். பண்ணை வீட்டுப் படுக்கையிலிருந்து விரிப்புகளை யெல்லாம் அகற்றிவிட்டோம் நாங்கள். கம்பளிகளை மட்டும் உபயோகிக்கிறோம். சௌகரியமான படுக்கைகள் அவை என்று நான் சொன்னால் நீங்கள் நம்பலாம். மூளை வேலை செய்யும் பன்றிகளாகிய எங்களுக்கு இந்தச் சொற்ப சௌகரியங்கள் கூட இல்லாவிட்டால் பண்ணைக் காரியங்கள் எப்படித்தடையின்றி நடக்கும்? செவ்வனே நடக்கும்? அதுவும் இப்போது மிகவும் சிரமமான காலத்தில் எங்கள் மூளைக்கு வேலை அதிகரித்துக் கொண்டிருக்கிறதே தவிர, குறையவில்லை. எங்கள் தூக்கத்தைத் கெடுக்க விரும்புகிறீர்களா நீங்கள்? தோழர்களே சொல்லுங்கள், நாங்கள் சரியாகத் தூங்காமல், வேலை நேரத்தில் அயர்ந்து அலுத்து விட்டால் என்ன ஆகும்? மிஸ்டர் ஜோன்ஸ் திரும்பிவந்து விடுவதை நீங்கள் விரும்புகிறீர்களா என்ன?''

உடனேயே இந்த விஷயத்தில் ஒருமனதாகத் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தன மிருகங்கள் எல்லாம். அதற்குப் பிறகு பன்றிகள் படுக்கைகளில் படுத்துறங்குவது பற்றி எந்த மிருகமும் எதுவும் பேசவில்லை. இதற்குப் பிறகு சில நாட்கள் கழித்து காலை நேரங்களில் பன்றிகள் காலதாமதமாக எழுந்து வருகின்றன என்று பார்த்த பிறகுங்கூட மிருகங்கள் எதுவும் சொல்லவில்லை. மூளை வேலை செய்பவை ஒரு மணிநேரம் அதிகமாகத் தூங்குவதுபற்றி எந்த மிருகமும் குறைசொல்ல முன்வரவில்லை.

இலையுதிர்கலம் வரும்போது மிருகங்களுக்கு வேலை செய்து, வேலை செய்து களைப்பாகத்தான் இருந்தது. ஆனால் அவை உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் இருந்தன, சிரமமான வருஷம்தான். வைக்கோலும் தானியமும் பாதிப் பாதி விற்றாகிவிட்டது என்பதனால், மாரிக்காலத்துக்குப் போதுமானது இல்லைதான்; ஆனால் காற்றாடி யந்திரம் எழுந்து உருவாகிக் கொண்டிருந்தது. அது ஒன்றே போதும் மற்ற சிரமங்களையெல்லாம் சரிக்கட்ட. அநேகமாகப் பாதி வேலையாகிவிட்டது, காற்றாடி யந்திரத்திற்கானது. அறுவடைக்குப்பின், மழையில்லாமல் பல நாட்கள் கிடைத்தன மிருகங்களுக்கு, மிகவும் சுறுசுறுப்பாக எப்போதையும் விட

அதிகமாக முனைந்து வேலை செய்தன அவையெல்லாம். ஒரு அடி உயரம் காற்றாடி யந்திரச் சுவரை எழுப்ப எல்லா மிருகங்களுமாகக் கல்லுடைத்துப் புரட்டித் துக்கி இரண்டு நாட்கள் பாடுபட்டன. இந்த உழைப்பெல்லாம் வீண் போகாது என்கிற திடசித்தத்துடன் பாடுபட்டன. அறுவடைச் சந்திரன் ஒளியில் பாக்ஸர் சில சமயம் இரவுகளில் தானாகச் சில சிரமமான காரியங்களைச் செய்துமுடிக்கும். ஓய்வு கிடைத்த நேரத்தில், எழுந்துகொண்டிருந்த சுவர்களைச் சுற்றிச் சுற்றி வந்து கூத்தாடிக் களியாட்டம் ஆடின மிருகங்கள் எல்லாம். சுவர்கள் உறுதியாகவும், நேராக நிமிர்ந்து நிற்பதையும் பார்த்துப்பார்த்து ஆனந்தப்படும். இப்படிப்பட்ட அதிசயத்தைத் தங்களால் சாதிக்க எப்படி முடிந்தது என்று ஆச்சரியப்படும்! கிழட்டு பெஞ்சமின் மட்டும்தான் காற்றாடி யந்திரம்பற்றி உத்ஸாகமோ, ஆனந்தமோ கொள்ள மறுத்தது. ஆனால் வழக்கம்போல அது வார்த்தைகள் எதுவும் சொல்வதில்லை: கழுதைகள் நீண்ட காலம் வசிக்கின்றன என்கிற புதிர்வாக்கியத்தைத்தைத் தவிர வேறு எதையும் அதுசொல்லவில்லை.

நவம்பர் மாதம் வந்தது. தென்மேற்குப் பருவக்காற்று கடுமையாக வீசிற்று. சிமிட்டி கெட்டிப்படாத மாதிரி இப்போது ஒரே ஈரமாக இருந்ததால், காற்றாடி யந்திரக் கட்டிட வேலை நின்றுவிட்டது. கடைசியில் ஒரு இரவில் புயல் மிகவும் பலமாகவே வீசியது. காற்று அடித்த வேகத்தில் பண்ணைக் கட்டிடங்களே அடியோடு பேர்ந்துவிடும்போல ஆடின. கூரை மேலிருந்து பல ஒடுகள் காற்றிலே பறந்துபோய்விட்டன. கோழிகள் கூச்சலிட்டுக் கொண்டு எழுந்து ஓடின அங்குமிங்கும். தூரத்தில் எங்கேயோ ஒரு துப்பாக்கி வெடிச் சப்தம் கேட்டது என்று எல்லா மிருகங்களும் ஒரே சமயத்தில் கனவு கண்டு விழித்துக்கொண்டு நடுங்கின. காலையில் எழுந்து வந்து பார்த்ததும் கொடிமரம் சாய்ந்து கிடந்தது, ஒரு பெரிய பழைய எல்ம் மரம் வேரோடு சாய்ந்துவிட்டது– காற்று அதைக் கிழங்கைப் பிடுங்குவதுபோலப் பிடுங்கிப் போட்டிருந்தது. இதைக் கவனித்தவுடனேயே எல்லா மிருகங்களும் ஒரு பக்கமாகத் திரும்பி மனம் உடைந்து ஒன்றாய்க் கத்தின. அதி பயங்கரமான காட்சி ஒன்றை அவர்கள் கண்டார்கள்: காற்றாடி யந்திரம் அடியோடு நாசமாகிவிட்டது.

ஒரே மனதாக அவை அங்கு ஓடிப்போய்ப் பார்த்தன. இப்போதெல்லாம் நிதானமாக அடிமேல் அடி வைத்து நடந்து செல்லப் பழகிக் கொண்டிருந்த நெபோலியன் கூட. அவையெல்லாம் அதிவேகமாக ஓடி காற்றாடி

யந்திரத்தருகே சென்றன. – ஆம். அது சாய்ந்து கிடந்தது! அவர்கள் பட்ட சிரமமெல்லாம் அடியோடு வியர்த்தமாகி விட்டது. தரைமட்டமாகிவிட்டது. அவை எவ்வளவு சிரமப்பட்டு எழுப்பிய கட்டிடம் அரும்பாடுபட்டு சேர்த்து அடுக்கிய கற்கள் நாலா பக்கமும் சிதறிக்கிடந்தன. முதலில் அவற்றால் ஒரு வார்த்தையும் பேச முடியவில்லை. துயரம் தொண்டையை அடைக்க, விழுந்து கிடந்த கற்களைப் பார்த்துக்கொண்டு நின்றன. நெபோலியனும் மௌனமாகக் குறுக்கும் நெடுக்கும் நடந்தது. அடிக்கடி பூமியை முகர்ந்து பார்த்தது. அதன் வால் விரைத்துக்கொண்டு, அங்குமிங்கும் அலைந்தது. அது மிகவும் தீவிரமான யோசனையில் ஆழ்ந்திருந்தது என்பதற்கு அந்த வாலின் நிலைதான் அறிகுறி என்பது மிருகங்களுக்குத் தெரியும். திடீரென்று நின்று, ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டதுபோல் நிமிர்ந்து பார்த்தது நெபோலியன்.

அமைதியாக அது பேசத் தொடங்கிற்று. "தோழர்களே! இதற்குக் காரணம் யாரென்று தெரியுமா உங்களுக்கு? இரவில் ரகசியமாக வந்து, நமது காற்றாடி யந்திரத்தைக் கவிழ்த்த விரோதி யார் தெரியுமா உங்களுக்கு?" இடிபோன்ற குரலில் அந்த விரோதியின் பெயரைச் சொல்லிற்று நெபோலியன். ஸ்நோபால்! ஸ்நோபால்தன் இதற்கு மூலகாரணம். ஸ்நோபால்தான் நம் மேலுள்ள விரோதத்தால் இதைச் செய்திருக்கிறது. தீங்கு செய்வது என்கிற எண்ணத்துடன், நமது திட்டங்களைப் பாழாக்கும் உத்தேசத்துடன், தனக்கு நேர்ந்த நாடு கடத்தலுக்கு வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் ஒரே நோக்கத்துடன், நமது விரோதி, நாட்டின் எதிரி, இதைச் செய்திருக்கிறது. ஒரு வருஷத்து வேலையை இரவிலே வந்து வீணாக்கிவிட்டது. தோழர்களே! ஸ்நோபாலுக்கு நான் இப்போது மரண தண்டனை விதிக்கிறேன். எந்த மிருகம் அதைக் கொன்று வீழ்த்துகிறதோ அதற்கு 'மிருகவீரன், இரண்டாம் வகுப்பு பட்டமும், அரைப்படி ஆப்பிளும் தருவேன். உயிருடன் பிடித்துக் கொணர்ந்து ஸ்நோபாலை என்னிடம் விடுகிறவர்களுக்கு ஒரு படி ஆப்பிளும் இனாம் அளிக்கப்படும் என்பதை இதனால் சகல மிருகங்களும் அறியவும்."

மிருகங்கள் ஸ்தம்பித்துவிட்டன. ஸ்நோபால் கூட இப்படிப்பட்ட தீச்செயல் செய்திருக்க முடியுமா என்பது அவர்களுக்குச் சந்தேகமாக இருந்தது. இருந்தாலும் எல்லா மிருகங்களும் கோபமாக ஆரவாரித்தன.

உடனேயே ஸ்நோபால் திரும்பி வந்தால் அதைப்பிடிக்க என்னென்ன வழிகளைக் கையாளலாம் என்று மிருகங்கள் எல்லாம் சிந்திக்கத் தலைப்பட்டன. உடனேயே தரையில் ஒரு பன்றியின் காலடிச் சுவடுகள் கண்டுபிடிக்கப் பட்டன– காற்றாடி யந்திரம் இருந்த பக்கத்தில் பல கெஜ தூரம் தெரிந்த சுவடுகள் வேலியில் ஒரு பொந்து வரை போவதுபோல இருந்தது. அந்தச் சுவடுகளை முகர்ந்து பார்த்துவிட்டு நெபோலியன் அவை ஸ்நோபாலின் காலடிச் சுவடுகள்தான் என்ற சொல்லிற்று. பாக்ஸ்வுட் பண்ணைப் பக்கமாக வந்து, மிருகங்கள் பண்ணையில் புகுந்து அழிக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கலாம் ஸ்நோபால் என்று அபிப்பிராயப்பட்டது நெபோலியன்.

"தாமதங்கள் வேண்டாம், தோழர்களே!"என்று கூவியது நெபோலியன், "அந்தக் காலடிச் சுவடுகளைக் கவனித்தானபின், செய்வதற்கு வேலை கிடக்கிறது. காற்றாடியை மீண்டும் நிர்மாணிக்க இன்றே வேலை தொடங்குவோம், மாரியில். மழையோ பனியோ வெய்யிலோ பொருட்படுத்தாமல், ஆக்கவேலையில் ஈடுபடுவோம், நமது வேலையை அவ்வளவு சுலபமாக அழித்தொழித்துவிட முடியாது என்று இந்தத் துரோகிக்குத் தெளிவாக்கவேண்டியது அவசியம்! ஞாபகமிருக்கட்டும் தோழர்களே! நமது திட்டங்களில் எள்ளளவும் மாறுதல் கிடையாது. ஒன்றுக்கு நாலாகப் பாடுபட்டுத் திட்டங்களை நிறைவேற்றுவோம். முன்னேறுங்கள், தோழர்களே! காற்றாடி யந்திரம் நீடுழி வாழட்டும்! மிருகங்கள் பண்ணை வாழ்க!"



# 7

மிகவும் கடுமையான மாரிக்காலம் வந்தது. அந்த வருஷப் புயற் காற்றுகளைத் தொடர்ந்து, பனிக்காற்றும், பனியும் வந்தன. அவற்றைத் தொடர்ந்து பூமியில் உறைந்த பனி ஃபிப்பிரவதரி மாதம் வரையில் உடையவேயில்லை. காற்றாடி நிர்மாணவேலையை இந்த நிலையில் எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம், எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமாக, மிருகங்கள் சோர்வுற்றாலும் பாராட்டாமல் செய்து வந்தன. வெளி உலகம் தங்களைக் கவனித்துக் கொண்டிருக்கிறது என்கிற ஞாபகத்துடன் அவை வேலை செய்தன. காற்றாடி யந்திரம் குறித்த காலத்தில் கட்டி முடியாவிட்டால் பொறாமைபிடித்த மனிதர்கள் சந்தோஷப் படுவார்கள்; வெற்றி விழாக் கொண்டாடுவார்கள் என்பதை உணர்ந்து மிருகங்கள் அரும்பாடுபட்டன.

அனுதாபமும் பொறாமையின்மையும் காரண மாக வெளி உலகத்து மனிதர்கள் காற்றாடி யந்திரக் கட்டிடத்தைத் தரைமட்டமாக்கியது ஸ்நோபாலல்ல

என்று சொன்னார்கள். ஸ்நோபால் சதி செய்ததாக நெபோலியன் சொன்னதை அவர்கள் நம்பத் தயாராக இல்லை. அவர்கள் பலமாக இல்லாததால், காற்றில் கட்டிடம் தானாகவே சரிந்து விட்டது என்றார்கள். இது உண்மையல்ல என்று மிருகங்களுக்குத் தெரியும். இருந்தும் இந்தத் தடவை சுவர்களை பழையபடி ஒன்றரை யடிக்குப் பதிலாக மூன்றடிக் கனத்துடன் எழுப்புவது என்று தீர்மானித்தன மிருகங்கள். முன்னைவிட அதிகமாகக் கற்கள் இதற்குத் தேவைப்பட்டன. பல நாட்கள் வரை கல்வெட்டும் இடத்திலே பனி படர்ந்துகிடந்தபடியால் கற்களை எடுக்க முடியவில்லை; எடுத்த கற்களையும் உடைக்க முடியவில்லை. பனி போனபிறகும் கடும் மாரியில் அங்கு வேலை செய்வது கடினமாகத்தான் இருந்தது. முன்னிருந்தது போல நம்பிக்கையும் மிருகங்களுக்கு அற்றுப்போய் விட்ட மாதிரியிருந்தது. குளிர் என்பது மட்டுமல்ல– தினமும் பட்டினி கிடக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. பாக்ஸரும், க்ளோவரும் மட்டுமே எதற்கும் அஞ்சாமல், நம்பிக்கை இழக்காமல் இருந்தன என்று சொல்ல வேண்டும். சேவை, உழைப்பு என்பதெல்லாம் பற்றி ஸ்க்வீலர் பன்றி உத்ஸாகமாகப் பிரசங்கங்கள் பல செய்தது. ஆனால் இந்தப் பிரசங்கங்களைவிட பாக்ஸரின் உதாரணமும், பலமும் தவறாமல் அது சொன்ன 'நான் இன்னும் அதிகமாக உழைக்க முயலுவேன்' என்கிற ஸ்லோகமும் மிருகங்களுக்கு ஊக்கமளித்தன என்றே சொல்ல வேண்டும்.

ஜனவரி மாதத்தில் உணவு பற்றாக்குறையாகி விட்டது. தானிய அளவு தாரளமாக, சோர்வு தருகிற அளவுக்கும் குறைந்து விட்டது. தானியத்துக்குப் பதிலாக, கொஞ்சம் உருளைக்கிழங்கு அதிகப்படியாகத் தரப்படும் என்று அறிவிக்கப்பட்டது. பிறகு கிழங்கும் சரிவர விளையவில்லை என்று தெரிந்தது: பனியில் வீணாகி விட்டது உருளைக் கிழங்கு அறுவடை. தின்னக்கூடிய கிழங்குகள் மூன்றுக்கு ஒன்று வீதந்தான் இருந்தன. மற்றவையெல்லாம் வெம்பிக் கறுத்து வீணாகிவிட்டன. பல நாட்கள் உமியையும் பொட்டையும் தவிர வேறு எதுவும் மிருகங்களுக்கு உணவாகக் கிடைக்கவில்லை. பட்டினியும் பஞ்சமும் வந்து விட்டதுபோல இருந்தது.

வெளி உலகத்துக்கு இது தெரியாமல் மறைத்து வைக்க வேண்டியது அவசியமாக இருந்தது. ஏற்கனவே காற்றாடி யந்திரக் கட்டிடம் சரிந்ததால் தெம்பூட்டப்பட்டவர்களாக, மனிதர்கள், மிருகங்கள் பண்ணையைப் பற்றி ஏராளமான சரடுகளைத் திரித்துக்கொண்டிருந்தார்கள். இந்த நிலையில்

பஞ்சம் என்கிற உண்மையும் அவர்களுக்குத் தெரிய வந்ததானால் என்னதான் சொல்வார்களோ? மிருகங்கள் தின்பதற்கு உணவு கிடைக்காமல் பட்டினி கிடக்கின்றன என்றும் தீராத வியாதியால் அவதியுறுகின்றன என்றும், ஓயாமல் ஒன்றோடொன்று சண்டை போட்டுக் கொள்கின்றன என்றும், ஒன்றையொன்று அடித்துத் தின்கின்றன என்றும் மனிதர்கள் தங்கள் சுயநலம் கருதி, மிருகங்கள் பண்ணைபற்றி ஏராளமான அவதூறுகளைக் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தார்கள். உணவுப் பற்றாக்குறை வந்துவிட்டது என்று அறிந்தால் அவர்கள் இன்னும் என்னென்ன சொல்வார்களோ? நெபோலியன் இதற்கு ஏற்பாடு செய்தது. உண்மை நிலை வெளியே தெரியாதிருப்பதற்காக வெகுவாக யோசித்து மிஸ்டர் விம்பரைப் பிரசாரத்துக்கு உபயோகித்துக் கொள்வது என்று தீர்மானித்தது. நாட்டிலே மிருகங்கள் பண்ணைபற்றி நல்ல அபிப்பிராயத்தைப் பரவவிட அந்த வக்கீலை உபயோகித்துக் கொள்ளத் தீர்மானித்தது நெபோலியன். வாராவாரம், திங்கள் அன்று விம்பர் வரும்போது மிருகங்கள் அந்த மனிதர் கண்ணிலேயே படாது– ஒதுங்கிப் போய்க்கொண்டிருந்தன. இப்போது சில மிருகங்கள், முக்கியமாக ஆடுகள் மட்டும் விம்பர்முன் எதிர்ப்பட்டன. உணவு அளவு அதிகரித்துத் தரப்பட்டிருப்பதாக விம்பர் காதில் விழும்படியாக ஆனால் தங்களுக்குள்ளாகவே அந்த ஆடுகள் பேசிக்கொள்ள வேண்டும் என்று நெபோலியன் உத்தரவிட்டது. அதைத் தவிர பண்ணையில் இருந்த களஞ்சியங்களில் உச்சி வரையில் மண்ணைப் போட்டு மேலே ஒரு அங்குலம் இரண்டு அங்குலம் தானியம் பரப்பி வைக்கப்பட்டது. ஏதாவது ஒரு தகுதியான சாக்கை வைத்துக்கொண்டு விம்பர் அந்தக் களஞ்சியங்கள் இருந்த பக்கம் அழைத்துச் செல்லப்பட்டால், களஞ்சியங்களிலெல்லாம் தானியம் நிரம்பியிருப்பதாக எண்ணி ஊரில் சொல்லட்டுமே என்று திட்டமிட்டது நெபோலியன். விம்பர் ஏமாளிதான். மிருகங்கள் பண்ணையில் உணவுக்குப் பஞ்சமில்லை என்கிற செய்தி நாளடைவில் ஊரில் வக்கீல் மூலம் நன்கு பரவி விட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

அப்படியிருந்தும் ஜனவரி மாதக் கடைசிக்குள் மிருகங்கள் உயிர் வாழ்வதற்கே ஏதாவது கொஞ்சம் தானியமாவது, வேறு எந்த உணவாவது வெளியே வாங்கித்தானாக வேண்டும் என்கிற நிலைமை தெளிவாகிவிட்டது. இந்த நாட்களில் அநேகமாக நெபோலியன் வெளியே காணப்படுவதே கிடையாது– பண்ணை வீட்டுக்குள்ளேயே இருந்துவிட்டது

அது. வீட்டின் ஒவ்வொரு கதவையும் வேட்டை நாய்கள் காவல் புரிந்து வந்தன. அவசியம் நேர்ந்து நெபோலியன் வெளியே கிளம்பினால், ஏதோ ஊர்வலம் கிளம்புவது போல இருக்கும். முன்னும் பின்னும் வேட்டை நாய்கள் புடை சூழ்ந்து காவல் காக்கத் தான் வரும். யாராவது தப்பித் தவறி நெருங்கி வந்துவிட்டால் ஒரே சமயத்தில் சில நாய்களாவது உறுமத் தொடங்கிவிடும். ஞாயிறு அன்று காலையில் கூடப் பல தடவைகள் நெபோலியனைக் காண முடியாது. வேறு யாராவது ஒரு பன்றி மூலம்– அநேகமாக அது ஸ்குவீலர் பன்றியாகத் தான் இருக்கும்– அடுத்த வாரத்துக்குத் தன் உத்தரவுகளை அது மிருகங்களுக்குத் தெரிவித்துவிடும்.

ஒரு ஞாயிறன்று காலையில், முட்டையிட விருந்த பெட்டைக் கோழிகள் இட்ட முட்டைகளை யெல்லாம் தந்துவிட வேண்டுமென்று ஸ்குவீலர் பன்றி அறிவித்தது. வாரத்தில் நானூறு முட்டைகள் தருவதாகக் கிராமத்துடன், வக்கீல் விம்பர் மூலம் நெபோலியன் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தது. இதனால் கிடைக்கும் பணத்தைக் கொண்டு தேவையான தானியமும் உணவும் வாங்க இயலும்– பண்ணை மிருகங்களைக் கோடை வரையில், அடுத்த அறுவடையில்லாமல் பட்டினியில் காப்பாற்றிவிடலாம். நிலைமை வசதியாக மாறும் வரையில் பெட்டைக் கோழிகள் இட்ட முட்டைகளை யெல்லாம் தந்துவிட வேண்டுமென்று அறிவித்தது ஸ்க்வீலர்.

இதைக் கேட்ட பெட்டைக் கோழிகள், பயங்கரமாகக் கூச்சலிட்டன. முன்னரே அவற்றிற்கு அறிவிக்கப்பட்டிருந்தது– இந்த மாதிரியான ஒரு தியாகம் செய்ய வேண்டியதாயிருக்கலாமென்று. இருந்தும் இப்படி ஒரு நாள் நேர்ந்துவிடலாம் என்று அவை நம்பாமலே இருந்து விட்டன. வஸந்த கால முட்டையிடலுக்குத் தயார் செய்து கொண்டிருந்த அவை, முட்டைகளைக் கொடுக்க மறுத்துக் கூவின; முட்டைகளை எடுத்து விற்பது கொலைகாரன் செயல் என்றன. ஜோன்ஸை விரட்டியதற்குப் பிறகு இப்பொழுது தான் முதல் தடவையாக, புரட்சி, கலகம் என்று சொல்லக்கூடிய அளவில் இந்த மாதிரியான சம்பவம் மிருகங்கள் பண்ணையில் நிகழ்ந்தது. வாலிப கருப்பு மினோர்க்கா கோழிகள் மூன்றின் தலைமையில், பெட்டைக் கோழிகள் நெபோலியனின் உத்தரவை எதிர்த்து நிற்கத் தயாராயின. கீழ்ப்படிய மறுத்தன. அவை கூரை உச்சியிலே உத்தரத்திலே உட்கார்ந்து கொண்டு முட்டைகளை இட்டன. முட்டைகள் கீழே விழுந்து உடைந்தன. நெபோலியன் தயை தாக்ஷிண்யமே காட்டாமல் உடனேயே அவற்றைத் தண்டிக்கத் தொடங்கிற்று. பெட்டைக் கோழிகளுக்கு உணவு தருவது, நெபோலியன்

உத்தரவுப்படி நிறுத்தப்பட்டது. பெட்டைக் கோழிக்கு ஒரு மணி தானியம் கொடுக்கிற மிருகத்துக்கு சாவு தண்டனை விதிக்கப்படுமென்று அறிவிக்கப்பட்டது. இந்த உத்தரவு அமுல் செய்யப்பட்டதா என்று நாய்கள் கண்காணித்துக் கொண்டன. ஐந்து நாட்கள் பெட்டைக் கோழிகள் புரட்சியை நீடித்து நடத்தின. பிறகு பணிந்து தங்கள் குடில்களுக்கு முட்டையிடத் திரும்பின. இடையில், உணவில்லாமல், ஒன்பது கோழிகள் மரித்து விட்டன. தோட்டத்தில் அவற்றைப் புதைத்துவிட்டு நெபோலியன் அவை சர்க்கிடியாஸிஸ் என்கிற புது வியாதியால் மரித்ததாக ஊருக்கு அறிவித்துவிட்டது. இந்தப் புரட்சியைப் பற்றி விம்பர் காதில் எதுவும் விழவில்லை. ஒப்பந்தப்படி முட்டைகள் வக்கீலிடம் தரப்பட்டன. அவற்றை எடுத்துப்போக ஒரு கடைக்காரனின் வண்டி வாரத்துக்கொருதரம் மிருகங்கள் பண்ணைக்கு வந்து போயிற்று.

இத்தனை காலமும் ஸ்நோபாலைப் பற்றி ஒரு விதமான தகவலும் நிச்சயமாகத் தெரியவில்லை. அண்டையில் இருந்த பண்ணைகளில் ஒன்றில், அது பாக்ஸ்வுட்டோ, பிஞ்ச்ஃபீல்டோ என்பது நிச்சயமாகத் தெரியவில்லை, அது ஒளிந்து கொண்டிருப்பதாக ஒரு வதந்தியிருந்தது. முன்னைவிட இப்போது நெபோலியன் அண்டை அயல் பண்ணைக்காரர்களிடம் சுமுகமான உறவு பூண்டிருந்தது. பத்து வருஷங்களுக்கு முன் ஜோன்ஸ் ஒரு பீச்மரக் காட்டைத் திருத்தி, அந்த மரங்களையெல்லாம் வெட்டி அடுக்கியிருந்தான். மரம் நன்கு வைரமேறி இருந்தது; பதமாக இருந்தது அந்த மரத்தை யெல்லாம் விற்றுவிடலாம் என்று விம்பர் சொன்னதன் பேரில் நெபோலியன் அதை விற்கத் தயாராயிற்று. பில்கிங்டனும், மிஸ்டர் ஃப்ரடெரிக்கும் அதை வாங்கிக் கொள்ள அவசரப்பட்டனர்– இருவருமே அதற்காகப் போட்டி போட்டனர் என்று சொல்லலாம். யாருக்கு விற்பது என்று தீர்மானிக்க முடியாமல் நெபோலியன் தயங்கிக்கொண்டிருந்தது. ஃப்ரடெரிக்கிடம் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம் என்கிற அபிப்பிராயம் கொள்ளுகிறபோதெல்லாம், ஸ்நோபால் பாக்ஸ்வுட் பண்ணையில் தலை மறைவாக இருப்பதாகப் பேசிக் கொள்ளப்படும். பில்கிங்டனிடம் விற்பது என்று யோசிக்கும்போது ஸ்நோபால் பிஞ்ச்பீல்டில் தலைமறைவாக இருப்பதாகச் சொல்லப்படும்.

திடீரென்று, வஸந்தத்தின் ஆரம்ப காலத்தில், திகைக்க வைக்கும் ஒரு ஆச்சரியகரமான விஷயம் கண்டுபிடிக்கப்பட்டது. இரவில் ரகசியமாக ஸ்நோபால் மிருகங்கள் பண்ணைக்கு வந்து போய்க் கொண்டிருந்தது

என்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்தச் செய்தியால் கலவர மடைந்த மிருகங்களால் இரவில் படுத்து உறங்க முடியாமல் போய்விட்டது. ஒவ்வொரு இரவும், இருட்டியவுடன், ஸ்நோபால் பண்ணைக்குள் வந்து விஷமங்கள் பல செய்து விட்டுப் போனதாகச் சொல்லப்பட்டது. தானியத்தைத் திருடியது; பால் பாத்திரங்களை உருட்டி விட்டது; முட்டைகளை உடைத்தது; விதை விதைத்திருந்த பாத்திகளை மிதித்து வீணாக்கியது; பழந்தரும் மரங்களின் பட்டைகளை உரித்தெடுத்தது– எல்லாம் ஸ்நோபால் செய்த வேலைதான் என்று சொல்லப்பட்டது. பண்ணையில் எது தவறாக நடந்தாலும் அது ஸ்நோபாலின் காரியம் என்று சொல்லுவது வழக்கமாகிக் கொண்டிருந்தது. ஜன்னல் கண்ணாடி உடைந்துவிட்டதா? சாக்கடை ஓடாமல் அடைத்துக் கொண்டதா? ஸ்நோபால் இரவில் வந்து தன் விஷமத்தைச் செய்துவிட்டுப் போய்விட்டது என்று ஏதாவது ஒரு மிருகம் சொல்லத் தவறாது. களஞ்சியத்தின் கதவுச்சாவி காணாமற் போனபோது அதைக் கிணற்றுக்குள் ஸ்நோபால் தான் தூக்கியெறிந்திருக்க வேண்டும் என்று சொல்ல சில மிருகங்கள் கூடத் தயங்கவில்லை. இதில் விசேஷம் என்னவென்றால், ஒரு சாக்குக் கடியில் சாவி கண்டு எடுக்கப்பட்ட பின்பும், இதை நம்பத்தயாராக இருந்தன மிருகங்கள் என்பதுதான். தூங்கிக் கொண்டிருக்கும்போது இருட்டில் திருட்டுத்தனமாக வந்து தங்களை எல்லாம் கறந்து, பாலைத்தரையில் ஊற்றி விட்டுப் போய்விட்டது ஸ்நோபால் என்று பசுமாடுகள் எல்லாம் ஏகமனதாகக் குற்றம் சாட்டின. மாரிக்காலத்தில் வழக்கத்துக்கு நேசமாக இருப்பதாகச் சொல்லப்பட்டது.

ஸ்நோபாலின் எல்லா விஷமங்களையும் நன்கு ஆராய்ந்து பூரணமாகக் கண்டுபிடித்துவிட வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டுப் புறப்பட்டது நெபோலியன். நாய்கள் புடை சூழ அது கிளம்பி, பண்ணைக் கட்டிடங்களையும், வயல்களையும், தோட்டங்களையும் துருவித் துருவிப் பார்த்தது. மற்ற மிருகங்கள் எல்லாம் சற்றுப் பின்னால் மரியாதையாக வந்தன. சில அடிகளுக்கொருதரம் நின்று நெபோலியன் தரையை மூக்கால் முகர்ந்தது. ஸ்நோபாலின் காலடிச் சுவடுகளைப் பின் பற்றி அங்குமிங்கும் சென்றது. ஸ்நோபாலின் நாற்றம் அடிக்கிறது அந்தச் சுவடுகளிலே என்றது அது. மூலை முடுக்கு விடாமல் முகர்ந்து பார்த்தது. களஞ்சியம், கொட்டகை, மாட்டுக்கொட்டில், கோழிக் குடில்கள், காய்கறித் தோட்டம்– எங்குமே ஸ்நோபாலின் காலடிச் சுவடுகள் இருப்பதைக் கண்டு சொல்லியது நெபோலியன். தரையை மூக்கால் தேய்த்துக் கொண்டு உறுமி உறுமி மூச்சை இழுத்துவிட்டு ''அந்த அயோக்கியன் ஸ்நோபால், இதோ இங்கே

வந்து போயிருக்கிறான்'' என்று முணு முணுக்கும் நெபோலியன். பிறகு சிறிது கழித்து ''இங்கேயும் வந்து போயிருக்கிறான்'' என்று சொல்லும். ''தெளிவாகவே வீசுகிறது அதன் வாடை?'' என்று சொல்லும். ஸ்நோபால் என்கிற பெயரைக் கேட்டவுடனேயே நாய்கள் எல்லாம் ரத்தம் உறையும்படியாக உறுமும். பற்கள் தெரிய வாயைப் பிளக்கும், குரைக்கும்.

மற்ற மிருகங்களெல்லாம் அளவு கடந்த பீதியடைந்தன. ஸ்நோபால் என்கிற கண்ணுக்குத் தெரியாத ஒரு பிசாசு தங்களையெல்லாம் பிடித்து ஆட்டிவைக்கிறது என்கிற அசைக்கமுடியாத எண்ணம் அவற்றிற்கு ஏற்பட்டுவிட்டது. காற்றிலேயே கலந்து நின்றது ஸ்நோபால் என்கிற தீய உருவம்! எத்தனையோ தீமைகளை மிருகங்களுக்கு விளைவிக்கக் காத்திருந்தது அது! இந்த நிலையில், மாலையில் ஸ்க்வீலர் பன்றி மிருகங்களை அழைத்து ஒரு கூட்டம் போட்டது. முகத்திலே ஒரு பயத்தோற்றத்துடன் முக்கியமான விஷயம் ஒன்று சொல்வதற்கு இருக்கிறது என்று மிருகங்களுக்கு அறிவித்தது.

''தோழர்களே'' என்று கத்திற்று ஸ்க்வீலர். மேலும் கீழும், பக்கத்திலும், குதித்துக் குதித்து நின்று வாலை ஆட்டிக் கொண்டே, ''மிகவும் பயங்கரமான விஷயம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டு விட்டது. ஸ்நோபால் என்கிற துரோகியை பிஞ்ச்பீல்ட் முதலாளி ஃபிரடெரிக் விலைகொடுத்து வாங்கிவிட்டான். அவன் உதவியுடன் ஸ்நோபால் நம்மைத் தாக்கி நம் பண்ணையைப் பிடுங்கச் சதி செய்து கொண்டிருக்கிறது. ஃபிரெடிரிக் நம்மீது படையெடுக்கும்போது அவனுக்கு வழிகாட்டவும் யுக்திகள் சொல்லித்தரவும் ஸ்நோபால் சம்மதித்துவிட்டது. ஆனால் அதையும் விட மோசமான செய்தி ஒன்றும் இப்போது நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதாக இருக்கிறது . ஸ்நோபாலின் துரோகமும் புரட்சியும் அதனுடைய பேராசையாலும், கர்வத்தாலும் உண்டாயிற்று என்று நாம் இதுகாறும் எண்ணியிருந்தோம். வேறு காரணங்கள் இல்லை அதன் துரோகத்துக்கு என்று எண்ணினோம். அப்படி நாம் நினைத்தது தவறு தோழர்களே! அதன் துரோகத்துக்கு ஆதார காரணம் என்ன தெரியுமா? ஆரம்ப முதலே ஸ்நோபால் ரகசியத்தில் ஜோன்ஸின் கட்சியைத்தான் ஆதரித்து வந்திருக்கிறது. எப்போதுமே அது ஜோன்ஸின் ரகசிய ஒற்றனாகவும் பிரதிநிதியாகவுந்தான் இருந்து வந்திருக்கிறது, அது விட்டுச் சென்ற ரகசிய கடிதங்கள் மூலம் இதெல்லாம் இப்போது தெரியவந்துவிட்டது. இப்போதுதான் அந்தக் கடிதங்கள் கண்டுபிடிக்கப்

பட்டன. இந்த விஷயம் ஸ்நோபாலின் நடத்தையில் பல விஷயங்களை நமக்குத் தெளிவாக்குகிறது என்றுதான் சொல்லவேண்டும். நாமே கண்கொண்டு பார்க்கவில்லையா?– மாட்டுக் கொட்டில் சண்டையிலே நம்மைத் தோல்வியடையச் செய்ய ஸ்நோபால் செய்த முயற்சிகளை நாமே கண்கொண்டு பார்க்கவில்லையா? நல்லவேளையாக அதன் முயற்சிகள் பலிக்கவில்லை!''

மிருகங்களெல்லாம் பிரமித்து நின்றன. ஸ்நோபால் காற்றாடி யந்திரத்தை அழித்ததையும்விடப் பெரிய துரோகம் இது! ஆனால் இதைப் பூரணமாகத் தெரிந்துகொள்ள அந்த மிருகங்களுக்குக் கொஞ்சநேரம் பிடித்தது. அவற்றிற்கெல்லாம் ஞாபகமிருந்தது– அல்லது ஞாபகமிருந்ததாக ஞாபகம் மட்டும்தான் இருந்ததோ? மாட்டுக்கொட்டில் யுத்தத்திலே ஸ்நோபால் தானே யுத்தவரிசையில் முதலில் நின்று மற்ற மிருகங்களுக்கெல்லாம் முன்னால் போய் எதிர்த்து வந்து மனிதர்களைத் தாக்கிற்று. ஒவ்வொரு தடவையும் மற்ற மிருகங்களை ஊக்கி, உற்சாகமூட்டி, மேலும் தூண்டிப் போரிடத் தைரியம் தந்தது ஸ்நோபால் தானே? ஜோன்ஸின் துப்பாக்கிக் குண்டுகள் முதுகில் தைத்தபோதும் பின் வாங்காமல், பாய்ந்து தாக்கியது அதே ஸ்நோபால் தானே? ஜோன்ஸின் கட்சியில், ரகசியத்தில் சதி செய்தது என்பது உண்மையானால், இதற்கெல்லாம் எப்படி அர்த்தம் கற்பிப்பது? இது சரியல்லவே! கேள்விகள் அதிகம் கேட்காமல் எதையும் நம்பத் தயாராக இருந்த பாக்ஸருக்குங்கூட இது பெரும் புதிராகத்தான் இருந்தது. முன்னங்கால்களை மடக்கிக் கொண்டு, படுத்தது பாக்ஸர். சிறிது நேரம் சிந்தித்தது. கண்களை மூடிக்கொண்டது. தன் சிந்தனைகளுக்கு வார்த்தை உருக்கொடுக்கச் சிரமப்பட்டு முயன்றது.

அது சொல்லிற்று. ''இதை நம்ப நான் தயாராக இல்லை. மாட்டுக் கொட்டில் சண்டையில், நம் கட்சியில், ஸ்நோபால் வெகு தைரியத்துடன் வீரப்போர் செய்தது. நானே பார்த்தேனே, என்கண்ணால், 'மிருகவீரன், முதல் வரிசை' என்கிற மெடலை நாம் அதற்குத் தரவில்லையா? யுத்தத்துக்குப் பிறகு, உடனே நடந்த விஷயம் அது!''

''அதுதான் நாம் செய்த முதல் பிசகு, தோழரே'' என்றது ஸ்க்வீலர், ''நாங்கள் கண்டெடுத்த ரகசியக் கடிதங்களில் முழுச்சதியும் பூராத் தகவல்களுடன் எழுதப்பட்டிருக்கிறது. நம்மை ஒழித்துவிடவே அது நம்மைத் தூண்டி அன்று சண்டையிட வைத்தது!''

"ஆனால் அதற்குக் காயம் ஏற்பட்டதே! அதன் ரத்தம் தரையில் சிவப்பாகத் தெரிந்ததே!" என்றது பாக்ஸர்.

"அதெல்லாம் முன்கூட்டியே ஏற்பாடு செய்து கொண்டு நடித்துக் காட்டிய ஒரு நாடகம்" என்றது ஸ்க்வீலர். "ஜோன்ஸினுடைய துப்பாக்கிக் குண்டுகள் ஏன் அதன்மேல் மட்டும் அதிகம் காயம்படவில்லை? 'நான் சுடுகிறாற்போல் சுடுகிறேன்' என்று ஜோன்ஸ் முன்கூட்டியே செய்துகொண்ட ஏற்பாடுதான் அது. இதெல்லாம் முன்னேற்பாட்டின்படிச் செய்துகொண்ட ஏற்பாடுகள் என்பதை உங்களுக்குப் படிக்கத் தெரிந்தால் நீங்களே ஜோன்ஸின் கையெழுத்திலும், ஸ்நோபாலின் கையெழுத்திலும் உள்ள கடிதங்களைப் படித்து அறிந்து கொள்ளலாம். சரியான சமயத்தில் மிருகங்களுக்கும் போக்குக் காட்டி ஏமாற்றிவிடுவது என்பது ஸ்நோபாலின் திட்டம். ஓடச் சைகை தந்துவிட்டால். வீட்டையும், பண்ணையையும் மனிதர்கள் கைப்பற்றி விடுவார்கள் என்று செய்த யுத்தி அது. அநேகமாக ஸ்நோபாலின் யுக்தி பலித்தே விட்டது என்றுதான் சொல்ல வேண்டும்–இல்லையா? அதைப் பார்க்கவிடாமல் செய்து நம்மைக் காப்பாற்றியது யார்? தெரியுமா? சொல்கிறேன் கேளுங்கள் தோழர்களே! நமது வீரத்தலைவர், தோழர் நெபோலியன் செய்த தீரச் செயல்களினால் நாம் அன்று தப்பினோம். உங்களுக்கு ஞாபகமில்லையா? ஜோன்ஸும், அவன் ஆட்களும் முற்றத்துக்குள் வந்தபோது எப்படி ஸ்நோபாலும், மற்ற மிருகங்களும் பயந்து பின்வாங்கின என்று உங்களுக்கு ஞாபகமில்லையா? அப்படி பின்வாங்கக் காரணமாக இருந்தது ஸ்நோபால்தான். அந்தச் சமயத்திலே, பீதி உச்சியை எட்டியிருக்கும் சமயத்திலே, எல்லா மிருகங்களும் திரும்பி ஓடித் தப்பிக்க எண்ணும் சமயத்திலே, எல்லாம் போய்விட்டது என்று எண்ணுகிற சமயத்திலே, தோழர் நெபோலியன் குதித்துப் பாய்ந்தது. 'மனிதகுலம் நசிக்கட்டும்' என்று கத்தியது. பாய்ந்து ஓடி ஜோன்ஸின் ஆடு சதையைப்பற்றிக் கடித்தது? இதெல்லாம் நிச்சயமாக உங்களுக்கெல்லாம் ஞாபகம் இருக்கவேண்டுமே, தோழர்களே?" என்றது ஸ்க்வீலர் சுறுசுறுப்பாக அங்குமிங்கும் குதித்துக் கொண்டே.

இப்படி விறுவிறுப்பான வார்த்தைகளில் அந்த யுத்தகளத்தை ஸ்க்வீலர் வர்ணிக்கும்போது, மற்ற மிருகங்களுக்கும் இதில் ஏதோ நடந்தது என்கிற ஞாபகம் வரத்தான் செய்தது. எது எப்படியானாலும், ஸ்நோபால் திரும்பி, புறமுதுகிட்டு ஓடியது என்றும், மற்ற மிருகங்கள் அதைப் பின்பற்றின என்றும் ஞாபகம் வரத்தான் வந்தது. இருந்தும் பாக்ஸருக்குத் திருப்தியோ, அமைதியோ பிறக்கவில்லை.

கடைசியில் அது சொல்லிற்று: "ஸ்நோபால் முதலிலேயே துரோகியாக இருந்ததாகத் தோன்றவில்லை. பின்னர் செய்தது வேறு காரியம். ஆனால் மாட்டுக் கொட்டில் யுத்தத்தில் அது நம்முடன் நம்மில் ஒன்றாகத் தான் இருந்தது. நல்ல தோழனாகத்தான் இருந்தது."

ஸ்க்வீலர் நிமிர்ந்து சொல்லிற்று: "நமது தலைவர், தோழர் நெபோலியன் சொல்லுகிறது இதுதான் அழுத்தமாக. சந்தேகத்துக் கிடமின்றி நெபோலியன் சொல்லி விட்டது. புரட்சி என்பது பற்றிய சிந்தனை ஏற்படுவதற்கு முந்திய நாட்களிலிருந்தே, ஸ்நோபால் துரோகியாகத்தான் இருந்து வந்திருக்கிறது. எப்போதும் அது ஜோன்ஸின் உளவாளியாகத்தான் இருந்து வந்திருக்கிறது என்று நெபோலியன் மறுபேச்சுக்கிடமின்றி தெரிவித்து விட்டது. "

"அப்படியானால் அது வேறு விஷயம். தோழர் நெபோலியன் இப்படிச் சொல்லிவிட்டால் இதற்கு மறுபேச்சு ஏது?" என்று விஷயத்தை ஏற்றுக் கொண்டது பாக்ஸர்.

"அதுதான் சரியான வழி தோழரே" என்று பாக்ஸரைப் பாராட்டிய அதே நிமிஷம் ஸ்க்வீலர் அதை ஒரு வெறுப்புப் பார்வையும் பார்த்தது. போவதற்குத் திரும்பிய அது, மீண்டும் திரும்பிச் சொல்லிற்று; "இந்தப் பண்ணையில் வாழும் ஒவ்வொரு மிருகமும் எப்போதும் சிவந்த கண்ணுடன் இருக்கவேண்டும் என்று எச்சரிக்கிறேன். இன்று நம்மிடையே ஸ்நோபாலின் உளவாளிகள் சிலர் இருக்கிறார்கள் என்று தகவல் கிடைத்திருக்கிறது. ஜாக்கிரதையாக இருக்கவேண்டியது நம் பொறுப்பு!"

நாலு நாட்களுக்குப் பிறகு ஒருநாள் மாலையில் வெளி முற்றத்தில் எல்லா மிருகங்களும் வந்து கூட வேண்டும் என்று நெபோலியன் அறிவித்தது. மிருகங்கள் எல்லாம் வந்து கூடியபின், நெபோலியன் தன் மாளிகையிலிருந்து, வேட்டை நாய்கள் புடை சூழ வந்தது. அந்த சந்தர்ப்பத்திற்கென்று அது தானே தனக்கு அளித்துக்கொண்ட தன் மெடல்கள் இரண்டையும் (மிருக வீரன்– முதல் வர்க்கம், மிருக வீரன் – இரண்டாம் வர்க்கம்) அணிந்துகொண்டு வந்து நின்றது. ஒன்பது வேட்டை நாய்களும் பயங்கரமாகக் கத்திக்கொண்டு தலைவர் நெபோலியனைச் சுற்றிச் சுற்றி வந்தன. நாய்களின் குரல் கூடியிருந்த மிருகங்களை அச்சுறுத்துவதாக இருந்தது. என்ன நடக்கப் போகிறதோ, ஏதோ என்று மௌனமாகப் பயந்து நடுங்கின மிருகங்கள் எல்லாம். ஏதோ பயங்கரமான ஒரு காரியம் நடக்கத்தான் போகிறது என்பது அவற்றிற்கு முன் கூட்டியே தெரிந்து விட்டது.

முகத்தைச் சுளித்துக்கொண்டு கூடியிருந்த சபையைப் பார்த்துக்கொண்டே மௌனமாகச் சிறிது நேரம் நின்றது நெபோலியன். பிறகு உரக்க ஒரு தரம் உறுமிற்று. உடனே வேட்டை நாய்கள் பாய்ந்தோடிப்போய் நாலு வாலிபப் பன்றிகளைக் காதைப்பிடித்துக் கடித்துத் தூக்கிக் கொணர்ந்து இழுத்துவந்து நெபோலியன் காலடியில் கிடத்தின. பயத்தாலும், வலியாலும் கத்தின அந்தப்பன்றிகள். அவற்றின் காதுகளிலிருந்து ரத்தம் ஒழுகியது. ரத்தத்தை ருசி பார்த்தறிந்த வேட்டை நாய்கள், கட்டுக் கடங்காமல் வெறி கொண்டு விடுமோ என்று ஒரு சில விநாடிகள் எல்லோருக்குமே பயமாக இருந்தது. நாய்களில் மூன்று திடுதிப்பென்று பாக்ஸர் மேலும் பாய்ந்ததைக் கண்டு கூடியிருந்த மிருகங்கள் ஆச்சரியப்பட்டுப் போயின. ஆனால் நாய்கள் பாய்ந்து வருவதைக் கண்டபாக்ஸர், முன்னங்காலைத் தூக்கி, ஒரு நாயை அலாக்காக வெகு தூரத்துக்கப்பால் போய் விழும்படி உதைத்தது. ஒரு நாயைத் தன் காலால் அறைந்து அமுத்திக் கொண்டது. வாலைத் தொங்கவிட்டுக் கொண்டு மற்றது ஓடி விட்டது . காலின்கீழ் அகப்பட்டுக்கொண்ட நாய் பரிதாபமாகக் கத்தித் தன்னை விடுவித்து விடும்படி கெஞ்சியது. நெபோலியனைப் பார்த்த பாக்ஸர்– நாயை விடுவிப்பதா வேண்டாமா என்று கேட்கிற மாதிரி. நெபோலியனின் முகம் இருண்டது; கூச்சலிடும் குரலில் 'விட்டுவிடு' என்று உத்தரவிட்டதும் பாக்ஸர் நாயைத் தப்பிப்போக விட்டது. உடம்பில் பல காயங்களுடன், ஊளையிட்டுக் கொண்டே, வாலைக் காலுக்கிடையில் தொங்கவிட்டுக்கொண்டு, நாய் நெபோலியன் காலடியில் போய்க் கிடந்தது.

கூக்குரலும், ஆரவாரமும் சிறிது நேரத்திற்கெல்லாம் அடங்கி விட்டன. முகத்திலே குற்றவாளிகளின் பாவங்களுடன், நாலு பன்றிகளும் தங்கள் கதி என்னவாகுமோ என்று நடுங்கிக்கொண்டு நின்றன, அவற்றின் குற்றங்களை ஒப்புக்கொண்டு, அவை தம்மையே குற்றஞ்சாட்டிக் கொள்ள வேண்டும் என்று உத்தரவிட்டது நெபோலியன். இனி ஞாயிறன்று காலையில் விவாதக் கூட்டங்கள் வேண்டாம் என்று நெபோலியன் உத்தரவிட்டபோது, அதை மறுத்து ஆர்ப்பாட்டம் செய்த பன்றிகள்தான் அவை, வேறு எவ்விதமான தூண்டுதலும் இல்லாமலே அவை ஒன்றன்பின் ஒன்றாகத் தங்கள் தவறுகளையெல்லாம் சொல்லின. ஸ்நோபால் நாடு கடத்தப்பட்டதிலிருந்து அதனுடன் அவை உறவு கொண்டாடி வந்திருப்பதாகவும், ரகசியத்தில் மிருகங்கள் பண்ணையையும், நெபோலியனையும் கவிழ்க்க அவை ஸ்நோபாலுடன் சேர்ந்து சதி செய்து வந்திருப்பதாகவும், காற்றாடி யந்திரத்தைச் சாய்க்க அவை உதவி

செய்ததாகவும், மிருகங்கள் பண்ணையை மிஸ்டர் ஃப்ரடெரிக்குக்குத் தந்து விடுவதாக அவையும் ஸ்நோபாலும் வாக்களித்திருப்பதாகவும் அவை தாமாகவே ஒப்புக் கொண்டன. இதையும் தவிர, ஸ்நோபால் தான் எப்போதுமே ஜோன்ஸின் கையாளாக இருந்து வந்திருப்பதாகத் தங்களிடம் ரகசியத்தில் ஒப்புக் கொண்டதையும் சொல்லின அவை. இப்படித் தங்கள் குற்றப் பத்திரிகைகளைத் தாங்களே படித்து முடித்ததும் நாய்கள் அவற்றின் மேல் பாய்ந்து குரல் வளையைக் கிழித்து அங்கேயே அந்த நாலு துரோகிகளையும் கொன்றுவிட்டன. வேறு எந்த மிருகமாவது வேறு எந்தக் குற்றமாவது செய்திருந்தால் அதை ஒப்புக்கொள்ள முன்வரலாம் என்று பயங்கரமான குரலில் சொல்லிற்று நெபோலியன்.

முட்டைகளைப் பற்றிப் புரட்சி எழுந்தபோது. அதில் தலைமைவகித்த மூன்று பெட்டைக் கோழிகளும் முன்னால் வந்து தங்கள் குற்றச்சாட்டுகளைப் படித்தன. ஸ்நோபால் தங்கள் கனவில் வந்து நெபோலியனுக்கு எதிராகத் தங்களைச் சதி செய்யச் சொல்லித் தூண்டியதாக அவை ஒப்புக் கொண்டன. ''நெபோலியனின் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படியாதே!'' என்று கனவில் ஸ்நோபால் சொன்னதாக அவை கூறின. அந்த மூன்று கோழிகளும் அங்கேயே உயிர் துறந்தன. பிறகு ஒரு வாத்து முன் வந்து முந்திய அறுவடைக் காலத்தில் ஆறு கதிர்களை ரகசியத்தில் திருடித் தான் தின்றுவிட்டதாக ஒப்புக் கொண்டது. பிறகு ஒரு ஆடு முன் வந்து, தான் ஸ்நோபாலின் தூண்டுதலால் குடி ஜலம் நிரம்பிய குளத்தில் மூத்திரம் பெய்ததாக ஏற்றுக் கொண்டது. ஒரு கிழட்டு ஆட்டை. அது இருமலால் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் போது, சொக்கப்பனையைச் சுற்றிச் சுற்றித் துரத்தித் தாங்கள் கொன்றுவிட்டதாக இரண்டு ஆடுகள் தங்களையே குற்றம் சாட்டிக் கொண்டன. அந்தக் கிழட்டு ஆடு நெபோலியனின் சிறந்த பக்தர்களில் ஒன்று என்றும் சொல்லின. எல்லாவற்றிற்கும் சாவு தண்டனை அந்த இடத்திலேயே விதித்து நிறைவேற்றப்பட்டது. இப்படியாகப் பல மிருகங்கள் தங்களைப் பற்றியே விதம் விதமாகக் குற்றம் சாட்டிக் கொண்டு அங்கேயே உயிர் துறந்தன. நெபோலியன் காலடியில் சடலங்கள் போர்போலக் குவிந்தன. ரத்த நாற்றம் காற்றிலே கலந்து வீசியது. ஜோன்ஸ் போன பிறகு, அந்தப் பண்ணையிலே இதுவரை இவ்வளவு ரத்தவாடை அடித்ததே கிடையாது.

இதெல்லாம் ஆன பிற்பாடு பன்றிகளையும், நாய்களையும் தவிர மற்ற மிருகங்களெல்லாம் சேர்ந்து கொண்டு தலை தொங்க முற்றத்தை விட்டு

வெளியேறின. அவை குலை நடுங்கி துயரத்தில் ஆழ்த்தின. எது அதிகத் துயரமும் பயமும் தந்தது அவற்றிற்கு என்று அவைகளாலேயே நிச்சயிக்க இயலவில்லை. ஸ்நோபாலுடன் கூடிக் கொண்டு மிருகங்கள் பண்ணையைக் கவிழ்க்கச் சதி செய்த மிருகங்களைத் திட்டுவதா? அல்லது இப்போது கண்முன் நடந்த தண்டனை நிறைவேற்றுதலைத் திட்டுவதா என்று அவற்றிற்குத் தெரியவில்லை. துரோகத்தைப் போலவே, இந்த ரத்த வெறித் தாண்டவமும் மனதுக்குக் கஷ்டம் தந்த காரியம் என்று அவை கருதின. இதைப்போலவே பயங்கரமான ரத்தம் சிந்தல் காரியங்கள் முந்திய நாட்களில் பண்ணையிலே இருந்திருக்கின்றன. ஆனால் தங்கள் சுதந்திரத்துக்குப் பின் நேர்ந்த இந்த முதல் ரத்த வெறி எல்லாவற்றையும் விடப் பயங்கரமானதாக அந்த மிருகங்களுக்குப்பட்டது. ஜோன்ஸ் அடித்துவிரட்டப்பட்டதன் பின், இன்று வரை, பண்ணையிலே ஒரு மிருகமும் வேறு ஒரு மிருகத்தையும் கொன்றதில்லை. ஒரு எலியைக் கூட எந்த மிருகமும் கொன்றதில்லை. இப்படி யோசித்துக் கொண்டே மிருகங்கள் எல்லாம் பாதி முடிந்திருந்த காற்றாடி யந்திரத்தண்டை போய்ச் சேர்ந்தன. ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு வாய்திறவாமல் சிறிது நேரம் படுத்துக்கிடந்தன.உஷ்ணமும் பரஸ்பர உதவியும் தேவை என்று எண்ணியவை போல க்ளோவர், முரியல், பெஞ்சமின், மாடுகள், ஆடுகள், ஒரு கூட்டம் வாத்துகள் கோழிகள் எல்லாம் நெருக்கியடித்துக் கொண்டு படுத்திருந்தன. அந்தப் பன்றிகளையும் நாய்களையும் தவிர மற்ற மிருகங்களெல்லாம் அங்கிருந்தன. பூனையைத் தவிர மற்றதெல்லாம் இருந்தன. நெபோலியன் கூட்டம் கூட உத்தரவிடுதற்குச் சற்று முந்தியே பூனை எங்கேயோ போய்விட்டது. சிறிது நேரம் எந்த மிருகமும் பேசவில்லை. பாக்ஸர் மட்டும் பேசாமல், படுக்கவும் படுக்காமல், எழுந்து நின்று கொண்டிருந்தது, மேலும் கீழும் நடந்து கொண்டே, வயிற்றுப் பக்கத்தில் வாலால் தட்டி அடித்துக் கொண்டு, ஆச்சரியத்தைக் குறிப்பதற்காக ஒரு கனைப்புக் கனைத்துக் கொண்டு அது நின்றது, கடைசியில் அது சொல்லிற்று;

''எனக்குப் புரியவில்லை, இந்த மாதிரியான காரியங்கள் நமது பண்ணையிலே நடக்குமென்று நான் எண்ணவேயில்லை. இதெல்லாமே நமக்குள் ஏற்பட்டுள்ள குற்றங் குறைகளால் வருவதாகத்தான் இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இதற்கு வழி என்ன என்று எனக்குத் தெரிகிறது தெரியுமா? நாம் இன்னும் அதிகமாகச்

சிரமப்பட்டு வேலை செய்ய வேண்டும். அவ்வளவுதான்.இன்று முதல் நான் முக்கால் மணிக்குப் பதில் ஒரு மணி முன்னதாக வேலை செய்யத் தொடங்குவேன்.''

தட தட வென்று நடந்து கல் வெட்டும் குன்றுப் பக்கம் போயிற்று பாக்ஸர், அங்கேயே போய், ஒன்றன் பின் ஒன்றாக, இரண்டு வண்டிகள் நிறையக் கற்களை நிரப்பி வண்டிகளை இழுத்து வந்து காற்றாடி யந்திரத் தருகே சேர்த்தது. அது முடிந்த பிறகு தான் அது இரவு படுத்தது.

க்ளோவரைச் சுற்றிப் படுத்திருந்தன, மிருகங்கள் பேச்சு எதுவும்பேசாமலே. அவர்கள் படுத்துக்கிடந்த அந்த மேட்டிலிருந்து பார்த்தால் எதிரே பண்ணை பூராவும் நன்றாகத்தெரிந்தது. ராஜபாட்டைவரை பரந்து கிடந்த பெரிய மைதானம். வைக்கோல் வயல், கிணறு, குட்டை, குடி தண்ணீர்க் குளம், உழுது பண்பட்ட வயல்களும் அதில் எழும்பி வளர்ந்து கொண்டிருந்த இளம் பச்சைப் பயிர்க் கோதுமை. பண்ணைக் கட்டிடத்தின் சிவப்புக் காரைகளுக்கு மத்தியில் புகைப் போக்கியிலிருந்து புகை வானை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. எல்லாமே அங்கிருந்து தெரிந்தது. வானம் தெளிவாகவும் களங்கமற்று மிருந்தது. வஸந்த காலத்து மாலைப்போது அது. புல்லும், வஸந்த கால ரஸத்தால் வெடித்துக் கொண்டிருந்த வேலிப் பச்சைகளும் சூரிய ஒளியில் பள பளத்தன. பண்ணை இவ்வளவு அழகான, ஆசையூட்டும் பிரதேசம் என்பதை அவை இதற்கு முன் அவ்வளவு நன்றாக அறிந்ததேயில்லை. இவ்வளவும் தங்களுக்கே சொந்தமானவை என்பதை நினைத்துப் பார்த்தபோது அவற்றிற்கு ஆச்சரியம் உண்டாயிற்று. மேட்டின் சரிவிலே பார்க்கும் போது, க்ளோவரின் கண்களில் நீர் நிறைந்தது. அதன் சிந்தனைகளை அதனால் வாய்விட்டுச் சொல்ல முடிந்தால் அது என்ன சொல்லியிருக்கும்? பல வருஷங்களுக்கு முன் மனித குலத்தை அழித்து விடுவது என்று புரட்சிக்கோலம் பூண்ட மிருகங்கள் இந்த நிலையை எய்துவதற்காகவா இப்படித் தொடங்கினார்கள்? அவர்கள் கொண்ட லக்ஷியம் என்ன? நடந்திருப்பது என்ன? கிழட்டு மேஜர் அன்று, அந்த முதல் இரவு புரட்சியைப் பற்றிப் பேசி, மிருகங்களைச் செயலுக்குத் தூண்டியது இந்த பயங்கர நிகழ்ச்சிகளும் பலிகளும் உயிர்க் கொலைகளும் நிகழுவதற்காகவா? இல்லவே இல்லை! எதிர் காலம் என்று க்ளோவர் எப்படி அப்போது தன் மனதில் உருவகப் படுத்திக் கொண்டிருந்தது? அரட்டையும்

பட்டினியும் அற்ற ஒரு சமூகத்தை அது கற்பனை செய்து பார்த்தது. மிருகங்கள் ஒன்றுக் கொன்று சரி நிகர்ச் சமானமாக, தோளோடு தோள் நிமிர்ந்து நின்று சுதந்தரமாக இருக்கும் ஒரு நிலையை எண்ணிப் புரட்சியில் இறங்கியது அதுபலசாலி பலமற்றதைக் காப்பாற்றும். ஒவ்வொன்றும் அதனதன் பசிக்கேற்றபடி வேலை செய்யும்; அதனதன் பசிக்கேற்றபடி உணவு உட் கொள்ளும். அன்று, கிழட்டு மேஜர் பேசிய போது, தன் காலடியில் உட்கார்ந்து கொண்டு பிரசங்கத்தைக் கேட்ட வாத்துக் குஞ்சுகளின் ஞாபகம் வந்தது க்ளோவருக்கு– அந்த மாதிரி பலமுள்ளவர்கள் பல மற்றவர்களைக் காப்பாற்ற வேண்டும். ஏன் இப்படியெல்லாம் நடந்தது என்று க்ளோவருக்குத் தெரியவில்லை– லக்ஷிய பூமிக்குப் பதில், ரத்தக்காடாக நாற்றமெடுக்கும் பண்ணையாக மாறி விட்டதே இது! மனதிலிருந்ததை உரக்கச் சொல்லத்தைரிய மில்லாமல் மிருகங்கள் நடமாட வேண்டியதாகி விட்டதே! பண்ணையிலே சுதந்திரமாகத் திரிந்தவை உறுமிக் கொண்டும் பயமுறுத்திக் கொண்டும் திரிந்த அந்த நாய்கள் தான்– வேறு யாருமில்லை; தன் சகாக்கள் எதிரிலேயே குற்றவாளிகள் என்று சில மிருகங்கள் கிழித்தெறியப் பட்டதைப் பார்க்கும்படியும் வந்துவிட்டதே! உன் தோழர்கள் என்னதான் குற்றம் செய்திருந்தாலும் உன் கண்ணெதிரிலேயே கொல்லப்படுவது என்பது சகித்துக் கொள்ளக்கூடிய காக்ஷியா? புரட்சி என்கிற சிந்தனையோ, எதிர்த்து எழுவது என்கிற சிந்தனையோ க்ளோவரின் மனதில் இல்லவே இல்லை. இப்பொழுது இருக்கிற நிலையிலும் கூட மிருகங்கள் இந்தப் பண்ணையில் ஜோன்ஸ் காலத்தைவிடச் சிறந்த, உயர்ந்த நிலையில் இருந்தன என்பதை அது அறிந்திருந்தது. மற்றது எப்படியானாலும், மனிதர்கள் திரும்பி வருவது என்கிற காரியம் நடக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம் என்றும் அது அறிந்திருந்தது. எப்படி எது நடந்தாலும் அது பயபக்தியுடன் இருக்கும்; சிரத்தையாகவே தன் வேலைகளை கவனிக்கும்; தனக்கிடப்பட்ட உத்தரவுகளை அப்படியே நிறைவேற்றி வைக்கும், நெபோலியனின் தலைமையை ஒருவித நிபந்தனையும் இன்றி ஏற்றுக்கொள்ளும், ஆனாலும் இருந்தாலும், தானும் மற்ற மிருகங்களும் எதிர்பார்த்தது இதுவல்ல; உழைத்ததும் இதற்காகவல்ல என்று அதனால் எண்ணாதிருக்க முடியவில்லை. இதற்காகவா அவ்வளவு சிரமப்பட்டு அவை காற்றாடி யந்திரத்தை நிர்மாணிக்க முயன்றன! இதற்காகவா அவை ஜோன்ஸின் துப்பாக்கிக்கும் அஞ்சாமல் போராடின?

இப்படி ஓடின க்ளோவரின் சிந்தனைகள்– இதையெல்லாம் வெளிப்படச் சொல்ல அதற்கு வார்த்தைகள்தான் அகப்படவில்லை.

கடைசியில் கிடைக்காத வார்த்தைகளுக்குப் பதில் ஒரு யுக்தியைக் கையாண்டது அது. 'இங்கிலாந்தின் மிருகங்கள்' என்கிற பாட்டை அது உரக்கப்பாட ஆரம்பித்தது. சுற்றி உட்கார்ந்திருந்த மிருகங்கள் எல்லாம் உடன் பாடத் தொடங்கின. ஒரு தடவை– இரண்டு தடவை– மூன்றாவது தடவையும் அவை அந்தப் பாட்டைப்பாடி முடித்தன. மெதுவாக, முழு மனதுடன், துயரம் ஆறுகிற வரையில் பாடின. அதற்கு முன் இவ்வளவு துயர மனோபாவத்துடன், இவ்வளவு உருக்கமாக அதைப் பாடியது கிடையாது.

மூன்றாவது தடவை அவை அந்தப் பாட்டைப்பாடி முடிப்பதற்கும் ஸ்க்வீலர் இரண்டு வேட்டை நாய்கள் பின் தொடர அங்குவந்து சேருவதற்கும் சரியாக இருந்தது. அது வரும்போதே ஏதோ முக்கியமான சமாசாரம் சொல்ல வருகிறது என்பது தெரிந்தது. தோழர் நெபோலியனின் தனி அறிக்கையின்படி, இனி மிருகங்கள் 'இங்கிலாந்தின் மிருகங்கள்' என்கிற பாட்டைப் பாடக்கூடாது என்றது. இனிமேல் அதைப்பாடுவது சட்டவிரோதமாகும் என்றது.

மிருகங்களுக்குத்தூக்கி வாரிப்போட்டது.

"ஏன்?" என்று கேட்டது முரியல்.

"அந்தப் பாட்டுக்கு இனி அவசியமேயில்லை தோழரே! " என்று பதில் அளித்தது ஸ்க்வீலர் விரைப்பாக. "இங்கிலாந்தின் மிருகங்கள் என்கிற பாட்டு புரட்சியின் கீதமாக இருந்தது. இப்போது புரட்சி முடிந்து விட்டது . புரட்சியின் கடைசி கட்டம். இன்று நமது எதிரிகள், சதிகாரர்கள் கொலை யுண்டதுடன் முடிந்து விட்டது. வெளியேயும் உள்ளேயும் உள்ள எதிரிகளை நாம் வெற்றி கொண்டுவிட்டோம். எதிர்காலத்தில் நல்ல சமுதாயம் உருவாக வேண்டும் என்பதற்காகப் புரட்சி சமயத்தில் நாம் அந்தப் பாட்டைப்பாடினோம். இப்போது அப்பாட்டால் எதிர்பார்க்கப்பட்ட மிருக லக்ஷிய சமுதாயம் உருவாகிவிட்டது; நிலைத்தும் விட்டது. இனிமேல் நம்மிடையே அந்தப் பாட்டுக்குத் தேவையேயில்லை!"

மிருகங்கள் வெகுவாகப் பீதியடைந்திருந்தன. எனினும் ஒரு சில மிருகங்களாவது இது பற்றி ஏதாவது விவாதம் தொடங்கியிருக்கும்.

ஆனால் அந்தச் சமயம் பார்த்து ஆடுகள் ''நாலு கால் நல்லது, இரண்டு கால் கெட்டது'' என்று உரக்கச் சந்தை வைத்தன. பல நிமிஷ நேரம் நீடிக்க இந்தச் சந்தையினால் இந்த விவாதம் சீக்கிரமே முடிவடைந்துவிட்டது.

ஆகவே அதற்குப் பிறகு மிருகங்கள் பண்ணையில், இங்கிலாந்தின் மிருகங்கள் என்கிற பாட்டும் பாடப்படாமல் போய்விட்டது. அதற்குப் பதில் மினிமஸ் என்கிற கவி ஒரு புதுப்பாட்டுக் கட்டினான்.

''மிருகங்கள் பண்ணை! மிருகங்கள் பண்ணை!

அதற்கு எதிராக நாங்கள் எதுவும் செய்யமாட்டோம்''

என்று தொடங்கியது அந்தப் புதிய பாட்டு, கொடி பறக்க விட்ட பின் ஒவ்வொரு ஞாயிறன்றும் இதற்குப் பிறகு இந்தப் புதிய பாட்டுத்தான் பாடப்பட்டது. ஆனால் அந்தப் பழைய பாட்டைப் போல புது இசையும் புது வார்த்தைகளும் மிருகங்களில் பெரும் பாலானவற்றிற்குப் பிடிக்க வில்லை. 'இங்கிலாந்தின் மிருகங்கள்' என்பது தான் உயர்ந்த பாட்டு என்று அவை நினைத்திருந்தன– எனினும் அதை வெளிப்படையாகச் சொல்ல முடியவில்லை. ●

# 8

**சி**ல நாட்கள் கழிந்தன. கொலைத் தண்டனையால் ஏற்பட்ட பயங்கரம் ஒருவாறு அடங்கிய பிறகு சில மிருகங்களுக்கு ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. புரட்சிக் காலத்தில் செய்த ஆறாவது விதியின்படி "எந்த மிருகத்தையும் மற்றொரு மிருகம் கொல்லவே கூடாது" என்று சட்டம் இயற்றினோம் போல இருக்கிறதே, அது என்ன ஆயிற்று இப்போது என்று சில மிருகங்கள் சிந்தித்தன. பன்றிக் காதிலோ நாய்கள் காதிலோ விழும்படியாக மிருகங்களில் எதுவும் இந்த விஷயங்கள் பற்றிப் பேசவில்லை– எனினும் நடந்த கொலைத் தண்டனைகள் இந்த விதியை மீறியே நடந்தன என்றுதான் எல்லா மிருகங்களும் அபிப்பிராயப்பட்டன. பாக்ஸர் ஆறாவது விதியைச் சுவரிலிருந்து வாசித்துச் சொல்லச் சொல்லி பெஞ்சமினைக் கேட்டது. ஆனால் பெஞ்சமின் இதிலெல்லாம் நான் சம்பந்தப்படமாட்டேன் என்று வழக்கப்படி சொல்லிவிடவே, முரியலைக் கூப்பிட்டு அந்த விதியை வாசிக்கச் சொல்லிற்று. முரியல் வாசித்தது. "எந்த மிருகமும் எந்த மிருகத்தையும்

சரியான காரணமில்லாமல் கொல்லக் கூடாது'' என்று எழுதியிருந்தது. சரியான காரணமில்லாமல் என்கிற வார்த்தைகள் மிருகங்கள் கவனத்தில் நிற்காமல் நழுவிவிட்டிருந்தன. இப்பொழுது அவற்றிற்கும் புரிந்தது– விதிகளில் எதுவும் மீறிவிடப்படவில்லை என்பது. ஸ்நோபாலுடன் சேர்ந்துகொண்டு மிருகங்கள் பண்ணைக்கெதிராகச் சதி செய்தவர்களைக் காரணமில்லாமல் கொன்றதாக யாரும் விவாதிக்க முடியாதல்லவா?

முந்திய வருஷத்தில் வேலை செய்ததைவிட அதிகமாக இந்த வருஷம் பூராவும் வேலை செய்தன மிருகங்கள் எல்லாம். காற்றாடி யந்திரத்தைத் திரும்பவும் நிர்மாணிப்பது மட்டுமல்ல; அதன் சுவர்களை முன்னைக்கிப்போது இரண்டு மடங்கு கனமுள்ளதாகச் செய்யவேண்டும். மற்ற பண்ணைக் காரியங்களையும் உரிய காலத்தில் கவனித்துக் கொள்ளவேண்டும். இதையெல்லாம் செய்வதற்கு மிருகங்கள் திணறத்தான் வேண்டியதாக இருந்தது. மிகவும் பிரமாதமான உழைப்பின் பேரில்தான் அதெல்லாம் சாத்தியமாயிற்று. சில சமயங்களில் ஜோன்ஸ் காலத்தை விட அதிகமாகத் தாங்கள் வேலை செய்வது போலவும், ஆனால் அதைவிடக் குறைவாக உணவு அருந்துவது போலவும் சில மிருகங்களுக்கும் தோன்றும். ஞாயிறன்று காலை வேலைகளில், ஸ்க்வீலர் பன்றி, கையில் காகிதத்தில் குறிப்புகளுடன் புள்ளிவிவரக் கணக்குகளை மிருகங்களின் வாழ்க்கைத்தரம் எவ்வளவு உயர்ந்திருக்கிறது என்று கணக்கிட்டுச் சொல்லிக்காட்டும். உணவு தான்யங்கள் உற்பத்தி இருநூறு சதம் ஏறியிருப் பதாகவும், அல்லது சில மாதங்கள் முந்நூறு ஐந்நூறு சதவிகிதம் ஏறியிருப்பதாகவும், சமயத்துக்கேற்றபடி, புள்ளி விவரங்கள் தரும் அந்த ஸ்க்வீலர் பன்றி. அதைப்பற்றி மிருகங்களில் எதுவும் அவநம்பிக்கைப்பட்டுக் கொள்ள விரும்பவில்லை. அவநம்பிக்கைப்பட ஆதாரமும் எதுவும் இல்லை; ஏனென்றால் அந்த மிருகங்களுக்கு ஜோன்ஸ் காலத்தில் வாழ்க்கை எப்படியிருந்தது என்பது அநேகமாக மறந்துகூடப் போய்விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். அது எப்படியானாலும் மிருகங்கள் மனத்தில் ஸ்க்வீலர் பன்றி புள்ளி விவரக் கணக்குக்குப் பதில் உணவை அதிகமாகத் தந்ததானால் நன்றாக இருக்கும் என்கிற எண்ணம் ஏற்படாமல் இல்லை.

பண்ணை மிருகங்களுக்கு உத்தரவுகள் எல்லாம் இப்போது ஸ்க்வீலர் பன்றி மூலமாகவோ, அல்லது வேறு ஏதாவது ஒரு பன்றி மூலமாகவோ தரப்பட்டது. பதினைந்து நாளைக்கொருதரம் கூட நெபோலியன் மற்ற மிருகங்கள் கண்ணில் படுவது கிடையாது. என்றாவது வெளியே வந்தால்,

நாய்கள் புடைசூழ வருவது மாத்திரமில்லை; அதற்குமுன் உரத்த குரலில் கட்டியங் கூறிக்கொண்டு தங்க நிறமான சேவல் ஒன்றும் வந்தது. நெபோலியன் பேச வாயைத் திறக்குமுன் ஒருதரம் கூவும் இந்தக் கோழி. பண்ணை வீட்டிலேயும் கூட நெபோலியன் மற்ற பன்றிகளுடன் வசிக்காமல் தனியாகத் தன் அறையில் வசித்து வந்ததாகத்தான் சொன்னார்கள். சாப்பிடுவதும் தனியாகத்தான். இரண்டு நாய்களைத் தவிர வேறு எதையும் அருகில் அது அண்டவிடுவதில்லையாம். வீட்டு முன்னறையில் அலங்கார மாகக் கண்ணாடி அலமாரியில் முன்னெல்லாம் வைக்கப்பட்டிருந்த க்ரௌன் டெர்பி உணவுத் தட்டுகளில்தான் சாப்பிடுவதாம். மற்ற இரண்டு சுப தினங்களிலும்போல, இனி நெபோலியன் பிறந்தநாளன்றுகூடத் துப்பாக்கி வெடிச் சப்தம் கேட்கும் என்று அறிவிக்கப்பட்டது.

இப்போது நெபோலியனை வெறுமனே நெபோலியன் என்று யாரும் சொல்வது கிடையாது. ''நமது தலைவர் தோழர் நெபோலியன்'' என்றுதான் எல்லோரும் குறிப்பிடுவார்கள். பன்றிகள் அந்தத் தலைவருக்கென்று பல விதமான பெயர்கள் சூட்டி ஆனந்தித்தன– 'மிருகங்களின் தந்தை' 'மனிதகுலத்தின் பயங்கர எதிரி 'ஆட்டு மந்தையின் காவலாளன்,' 'வாத்துக்களின் நண்பன்'– இத்யாதிப் பெயர்கள் அநேகம் நெபோலியனுக்குச் சூட்டப்பட்டன. ஸ்க்வீலர் தன் பிரசங்கங்களில், கண்கள் இரண்டும் ஆறாய்ப் பெருக, நெபோலியனின் அறிவு, ஆற்றல், பெருந்தன்மை, நன்மனம், மிருகங்களிடம் அது கொண்டுள்ள அன்பு, ஆதரவு எல்லாவற்றையும் பற்றி மிக மிக உருக்கமாகப் பேசும். மற்ற பண்ணைகளில் இன்னமும் அடிமையாக புரட்சியின் நலன்கள் ஏதுமின்றி, அறிவிலிகளாக வசித்துவரும் மிருகங்களிடம் நெபோலியன் எவ்வளவு ஆர்வமும் ஆதரவும் கொண்டிருந்தது என்பதை அடிக்கடி எடுத்துச் சொல்லிக் கண்ணீர் விடும் ஸ்க்வீலர். ஏதாவது ஒரு காரியம் வெற்றி கரமாக முடிந்தாலோ, அல்லது ஒரு நற்பயன் ஏற்பட்டாலோ அது நெபோலியனாலேயே ஏற்பட்டது என்று சொல்வது வழக்கமாகிவிட்டது. பேச்சளவிலேனும் அதை நெபோலியனின் சொத்தாகச் சொல்வது அதிகரித்துக் கொண்டிருந்தது. ஒரு பெட்டைக் கோழி இன்னொன்றினிடம் சொல்லும்; ''நமது தலைவர், தோழர் நெப்போலியன் வழிகாட்டியதால் நான் ஆறு நாட்களில் ஐந்து முட்டைகள் இட்டேன்.'' குளத்தில் நீர் குடிக்கப் போகும் இரண்டு பசுக்கள் பேசிக் கொள்வதைக்கேளுங்கள்: ''தோழர் நெபோலியனைப் பற்றி இருந்த அபிப்பிராயத்தை மினிமஸ் என்கிற கவி

எழுதிய பாட்டு நன்கு பிரதிபலிக்கிறது. பாட்டின் தலைப்பு "தோழர் நெபோலியன்."

*"தந்தையற்றவர்களின் நண்பனே!*
*ஆனந்தத்தின் வற்றாத ஊற்றே!*
*உணவின் பிரபுவே! உன்னைப் பார்க்கும் தோறும்*
*தீப்பொறி எழுகிறது என் உள்ளத்திலே.*
*அமைதியும் ஆற்றலும் உள்ள உன் கண்கள்*
*வானிலே ஆதவன்போல ஒளி வீசுகின்றன*
*தோழர் நெபோலியன்!*
*உன் மிருகங்கள் கேட்பதை யெல்லாம்*
*இல்லை யெனாமல் கொடுப்பவன் நீ*
*இரண்டுவேளை முழு உணவு; படுத்துறங்க வைக்கோல்*
*பெரியதும் சிறியதுமான மிருகங்கள் பலவும்*
*தங்களிடங்களில் அமைதியாக உறங்குகின்றன.*
*எல்லாவற்றையும் பாதுகாக்கிறாய் நீ*
*தோழர் நெபோலியன்!*
*எனக்கு ஒரு பன்றிக்குட்டி பிறந்தால்*
*அது முஷ்டிப் பிரமாணமாகுமுன்,*
*அப்பளாக் குழவி அளவு ஆகுமுன்*
*உன் பெருமை பாடக் கற்றுத் தருவேன்;*
*உனக்கு நன்றிபாராட்டக் கற்றுத்தருவேன்;*
*உனக்கு உண்மையாக இருக்கக் கற்றுத்தருவேன்.*
*முதல் மூச்சிலே அதுசொல்லவேண்டும்*
*"தோழர் நெபோலியன்"* என்று!

நெபோலியனே இந்தக் கவிதையைப் பாராட்டிப் புகழ்ந்தது. ஏழு விதிகள் பொறித்திருந்த சுவருக்கு எதிர்த்த சுவரில் இந்தக் கவிதையும் பொறிக்கப்பட்டது. அதற்குமேல் மூக்கு நீளமாகத் தெரியும்படியான நிழல் உருவமாக நெபோலியனின் உருவப்படமும் வரையப் பட்டிருந்தது. வெள்ளை வர்ணத்தில் அதை வரைந்தது ஸ்க்வீலர் பன்றிதான்.

இடையில், விம்பர் என்கிற வக்கீலின் உதவியால், நெபோலியன் பலதரப்பட்ட சிக்கலான பேரங்களில், முக்கியமாக ஃப்ரடெரிக், பில்கிங்டன் இருவரிடமும் ஈடுபட்டிருந்தது. வெட்டிவைத்த மரம் இன்னும் விற்காமலே

கிடந்தது. இருவரில் ஃப்ரடெரிக் தான் அந்த மரத்தை வாங்கிவிடவேண்டும் என்று அதிகமாகத் துடித்தான். ஆனால், அவன் சரியான விலைதர இணங்கவில்லை, அதே சமயம் ஃப்ரடரிக் மிருகங்கள் பண்ணைக்கு எதிராகச் சதிசெய்து கொண்டிருக்கிறான் என்றும், மிருகங்களை எதிர்த்துப் போராடி காற்றாடி யந்திரத்தைத் தரைமட்டமாக்கப் போகிறான் என்றும் வதந்திகள் மீண்டும் எழுந்து உலாவின. மிருகங்கள் கட்டிக்கொண்டிருந்த அந்தக் காற்றாடி யந்திரத்தைப் பற்றி அவர்கள் பெரிதும் பொறாமை யுற்றிருந்தார்கள் என்று பேசிக்கொள்ளப் பட்டது. ஸ்நோபாலே இன்னமும் பிஞ்ச்ஃபீல்டு பண்ணையில்தான் ஒளிந்திருக்கிறது என்றும் வதந்தி இருந்து வந்தது. கோடை மத்தியிலே மூன்று கோழிகள் தாமாகவே முன்வந்து, ஸ்நோபாலுடன் சேர்ந்து கொண்டு தாங்கள் நெபோலியனைக் கொல்ல சூழ்ச்சிகள் செய்ததாகத் தங்களையே சுட்டிக் காட்டிக்கொண்டன. இதைக் கேள்வியுற்ற மிருகங்கள் பதறிப்போயின. மூன்று கோழிகளும் உடனேயே கொலையுண்டன். நெபோலியனைக் காப்பாற்ற இன்னும் பலமான பந்தோபஸ்துகள் செய்யப்பட்டன. நாலு மூலைக்கு நாலு நாய்களாக நின்று அதன் படுக்கையை இரவு பூராவும் உறங்காமல் காவல் காத்தன. பிங்கை என்கிற ஒரு பன்றிக் குட்டி. நெபோலியனுக்கென்று தயாராகும் உணவுகள் எல்லாவற்றையும் தின்று பார்த்துவிட்டு, விஷம் கலக்கவில்லை என்று சொன்ன பிறகுதான், தலைவர் சாப்பிடுவது என்கிற வழக்கமும் எற்பட்டது.

அதே சமயம் நெபோலியன் மரத்தை யெல்லாம் மிஸ்டர் பில்கிங்டனுக்கு விற்க ஏற்பாடு செய்துவிட்டதாகச் சொல்லிக் கொள்ளப்பட்டது. மிருகங்கள் பண்ணைக்கு அவசியமான பல பொருள்களை பாக்ஸ்பீல்டு பண்ணை ஒழுங்காகத் தந்துவர வேண்டியது என்று நெபோலியனும் பில்கிங்டனும் ஒப்பந்தம் செய்துகொள்ளப் போகிறார்கள் என்று கூட வதந்தி இருந்தது, விம்பர் தான் பேச்சிலெல்லாம் நடுவே நின்று ஏற்பாடுகள் செய்தது, எனினும் நெபோலியனும் பில்கிங்டனும் மிகவும் சிநேக பாவத்துடனேயே இருந்தார்கள். மற்ற மிருகங்களுக்கு பில்கிங்டனிடம் நம்பிக்கை இல்லை, அவனும் மனிதன்தானே? எப்படி அவன் நல்லவனாக இருக்க முடியும்? ஆனால் ஃப்ரடெரிக்கைவிட அவன் எவ்வளவோ மேல் என்ற நினைத்தன மிருகங்கள். ஃப்ரடெரிக்கைப் பற்றி அவை பயமும் அருவருப்பும் வெறுப்பும் கொண்டிருந்தன. கோடை முதிர முதிர, காற்றாடி யந்திரக் கட்டிடவேலை முடிவு நாள் நெருங்க நெருங்க, மிருகங்கள் பண்ணையை ரகசியமாகத்

தீர்மானமாக ஃப்ரடெரிக் ஒருநாள் தாக்கப்போகிறான் என்கிற வதந்தி வலுத்துக் கொண்டிருந்தது. அதற்கான எற்பாடுகள் எல்லாம் அவன் செய்து கொண்டிருக்கிறான் என்றும் சொன்னார்கள். ஃப்ரடெரிக் இருபது மனிதர்கள் இருபது துப்பாக்கிகளைக் கொண்டு வரப்போகிறான் என்றார்கள். நீதிபதி, அரசாங்கம் எல்லாவற்றிற்கும் லஞ்சம் கொடுத்துக் கொஞ்சநேரம் கண்மூடிக் கொள்ள ஏற்பாடு செய்துவிட்டான் என்றும் சொல்லிக்கொண்டார்கள். எப்படியாவது அவன் மிருகங்கள் பண்ணையைக் கைப்பற்றிவிடடால், அந்தப் பண்ணையையும் அவன் சொத்தாகவே பாவித்து ஏற்பாடுகள் செய்வதாக அதிகாரிகளும் ஒப்புக்கொண்டு விட்டார்களாம். இதெல்லாம் தவிர, பிஞ்ச் ஃபீல்ட் பண்ணையில், தன் மிருகங்களை எவ்வளவு கொடுமையாக நடத்தினான் ஃப்ரடெரிக் என்பது பற்றிக் கதை கதையாக மிருகங்கள் எல்லாம் கேள்விப்பட்டன. ஒரு கிழட்டுக் குதிரையை அவன் சவுக்காலடித்தே கொன்று விட்டானாம்! அங்கு பசுக்களெல்லாம் பட்டினிதான் கிடந்தன; அடுப்பிலே போட்டு உயிரோடு ஒரு நாயை எரித்துவிட்டானாம் அவன். கோழிகளின் கால்களில் கத்திகளைக் கட்டி, அவற்றை ஒன்றோடொன்று சண்டையிட வைத்து, வேடிக்கை பார்த்தானாம், அவன். தங்கள் தோழர்களை இப்படியெல்லாம் கொடுமையாக நடத்துகிறான் அவன் என்று கேள்விப்பட்டுக் கேள்விப்பட்டு 'ஃப்ரடெரிக்' என்றாலே அவற்றின் ரத்தம் கொதிக்கத் தொடங்கியது– கோபத்தாலும் ஆத்திரத்தாலும் வெறியூட்டப்பட்டவர்கள் போலாயின அவை. சில சமயம் தாங்களே கிளம்பிப் போய் பிஞ்ச் ஃபீல்டுக்குள் புகுந்து, போராடி, எல்லாவற்றையும் அழித்துவிட்டு வரவேண்டும் என்ற மிருகங்கள் ரோஷம் கொண்டு எழுந்தன; மனிதர்களை அடித்து விரட்டிவிட்டு, அந்தப் பண்ணை மிருகங்களுக்கும் சுதந்திரம் அளிப்பதுபற்றி யோசித்தன இந்த மிருகங்கள். அவரசப்பட்டு எதையும் செய்யக் கூடாது என்றும், தங்கள் தலைவர் தோழர் நெபோலியன் தலைமையில் அவை பூரண நம்பிக்கை வைக்கவேண்டும் என்றும் சொல்லி ஸ்க்வீலர் பன்றி இந்தச் சந்தர்ப்பங்களில் அவற்றைச் சமாதானம் செய்யும்.

இருந்தாலும் ஃப்ரடெரிக்கைப் பற்றிய வரையில் மிருகங்களின் உணர்ச்சிகள் கொந்தளித்துக் கொண்டு தான் இருந்தன. ஒரு ஞாயிறன்று காலை, நெபோலியனே கொட்டகைக் கூட்டத்தில் காட்சியளித்துத் தான் எப்போதுமே ஃப்ரடெரிக்கிடம் பேரங்கள் எதுவும் வைத்துக்கொண்டதில்லை என்று அறிவித்தது. மரத்தை அவனுக்குத் தருவதாகப் பேச்சு வார்த்தையே

நடைபெறவில்லை என்றது அது. இந்த மாதிரியான ஒரு அயோக்கியனுடன் பேச்சுவார்த்தை நடவடிக்கைகள் வைத்துக் கொள்வதே தன் கௌரவத்துக்கு இழுக்கு என்று பேசிற்று நெபோலியன். புரட்சிச் செய்திகளை வெளியே பரப்பப் போய் வந்து கொண்டிருந்த புறாக்கள் கூட இனி பாக்ஸ்ஃபீல்ட் பக்கம் போகக்கூடாது என்று உத்தரவிடப்பட்டது, "மனிதர்கள் சாகட்டும்!" என்கிற ஸ்லோகத்துக்குப் பதிலாக அவை "ஃப்ரடெரிக் சாகட்டும்!" என்கிற ஸ்லோகத்தைத் தான் இனி உபயோகிக்க வேண்டும் என்றும் உத்திரவிடப் பட்டது. கோடை முடியும் தருவாயில் ஸ்நோபாலின் இன்னொரு அதருமக் காரியம் வெளியாயிற்று, கோதுமை வயலிலே, தானியப் பச்சைகளுக்குப் பதில் ஏராளமான பூண்டு பச்சைகள் வளர்ந்து விட்டன. இது எதனால் என்றால், ஓரிரவு ஸ்நோபால் மிருகங்கள் பண்ணைக்கு வந்து கோதுமை விதைகளுடன் பூண்டு விதைகளையும் கலந்துவைத்து விட்டுப் போய்விட்டது, இந்தக் காரியத்தில் ஸ்நோபாலுக்குத் தான் உதவியதாகத் தன்னையே குற்றம் காட்டிக்கொண்டு ஒரு ஆண் வாத்து விஷத்தைச் சாப்பிட்டு விட்டுத் தற்கொலை செய்து கொண்டது. இப்போது புதுசாக ஒரு விஷயம் மிருகங்களுக்குத் தெரிய வந்தது. அவற்றில் பெரும்பாலானாவை ஸ்நோபாலுக்கு "மிருக வீரன் முதல் வர்க்கம்" பட்டம் தரப்பட்டதாகத் தப்பாக எண்ணிக் கொண்டிருந்தன. அது தப்பு– என்றுமே அந்தப்பட்டம் ஸ்நோபாலுக்குத் தரப்படவில்லை என்று இப்போது தெளிவாக்கப்பட்டது. மாட்டுக் கொட்டில் யுத்தத்துக்குப் பிறகு ஸ்நோபால் தற்பெருமையாகத் தானே பரப்பிக் கொண்ட ஒர கட்டுக்கதையே தவிர அது உண்மையே யல்ல. பட்டம் தருவதா? யுத்தத்தில் செய்த சதிக்கு அதைத் தண்டிக்காமல் விட்டதே பிசகு! தண்டிக்காமல் கண்டிப்பு வார்த்தைகள் மட்டும் பேசி யனுப்பியது நெபோலியன் என்று மிருகங்களுக்கு ஞாபகம் இருக்கவேண்டுமே! அப்படி ஒன்றும் ஞாபகமில்லை மிருகங்களுக்கு. இதையெல்லாம் குழம்பிய ஒரு மனோபாவத்துடன்தான் மிருகங்கள் கேட்டுக் கொண்டிருந்தன. எது உண்மையென்று நம்புவதென்றே அவற்றிற்குத் தெரியவில்லை; ஆனால் ஸ்க்வீலர் சிறிது நேரம் பேசி "ஞாபக சக்திக் குறைவினால் தான் நீங்கள் அப்படி நினைத்துவிட்டீர்கள்" என்றது. மிருகங்களுக்கு எவ்வித சந்தேகத்துக்குமே இடமில்லாது போய் விட்டது.

இலையுதிர் காலத்தில், ரொம்பச் சிரமப்பட்டு, பிரமாதமாக முயற்சி செய்து காற்றாடி யந்திரக் கட்டிட வேலையை ஒரு வழியாக முடித்துவிட்டன

மிருகங்கள். அதே சமயம் அறுவடையும் ஆகவேண்டியதாக இருந்ததால், வேலை மிகவும் கடுமை தான். உள்ளே யந்திரங்கள் பொறுருத்த வேண்டியது பாக்கி. விம்பர் அந்த யந்திரங்கள் வாங்குவதற்குப் பேரம் செய்து கொண்டிருந்தான். கட்டிடம் தயாராகிவிட்டது. எவ்வளவோ கஷ்டங்களைச் சமாளித்து, அனுபவமில்லாததையும் பொருட்படுத்தாமல், மிகவும் எளிய ஆயுதங்களை மட்டும் உபயோகித்து, துரதிருஷ்டம், ஸ்நோபாலின் எதிர்ப்பு யுக்திகள் எல்லாவற்றையும் மீறி, மிருகங்கள் பெரியதொரு சாதனையைச் சாதித்துவிட்டன. திட்டமிட்டபடி முடித்துவிட்டன. அலுப்பாகத்தான், எனினும் பெருமையாகவுந்தான் இருந்தது. தங்களுடைய மஹோன்னதமான சிருஷ்டி யாகிய அந்தக் கட்டிடத்தைச் சுற்றிச் சுற்றி வந்து குதித்தன. முதல் தடவை நிர்மாணித்திருந்ததை விட இப்போது கட்டிடம் அதிக அழகாக இருந்ததாக அவற்றிற்குத் தோன்றியது. தவிரவும் கட்டிடச் சுவர்கள் முன் போல இரண்டு மடங்கு கனம் இருந்தன. வெடி மருந்து வைத்துக் கிளப்பினால் ஒழிய, கட்டிடத்தை யாரும் எதுவும் அசைக்கக் கூட முடியாது, எப்படித்தான் உழைத்துப் பாடுபட்டார்களோ? எத்தனை எதிர்ப்புகளையும் அவநம்பிக்கையையும் அவை சமாளிக்க வேண்டியதாக இருந்தது! காற்றாடி யந்திரம் சுழல ஆரம்பித்த பின் மிருகங்களின் வாழ்க்கை முந்திய வாழ்க்கையை விட எவ்வளவு தரமானதாக இருக்கும்! இவற்றை யெல்லாம் பற்றி எண்ணிப் பார்க்கும் போது, அலுப்பு களைப்பு எல்லாம் பறந்தோடிவிட்டன. உத்ஸாகமாகக் கைசேர்த்துக் கொண்டு அவை காற்றாடி யந்திரக் கட்டிடத்தைச் சுற்றிச் சுற்றி வந்தன. ஆரவாரித்தன. வெற்றி முழக்கங்கள் பல செய்தன. நெபோலியனே நேரில் அங்கு வந்து நின்றது. கோழி முன் சென்று கூவ, நாய்கள் பின் தொடர்ந்து காவல் காக்க, நெபோலியன் வந்து நின்று, முடிந்துவிட்ட கட்டிடத்தைப் பார்வையிட்டது. மிருகங்களைப் பாராட்டியது. காற்றாடி யந்திரத்துக்கு நெபோலியன் காற்றாடி என்று பெயர் வைத்துவிடலாம் என்று சொல்லிற்று.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு ஸ்பெஷல் கூட்டம் கூட்டப்பட்டது. பெரிய கொட்டகையில், நெபோலியன் சொன்ன செய்தியைக் கேட்டு அவை ஆச்சரியத்தால் வாயடைத்துப் போயின. மரக்கட்டைகளை ஃப்ரடெரிக்குக் விற்றுவிட்டதாக அறிவித்தது நெபோலியன். மறுநாள் ஃப்ரடெரிக்கின் வண்டிகள் வந்து அந்த மரக்கட்டைகளை எடுத்துப்போகும். பில்கிங்டனிடம் சிநேகமாக இருப்பதுபோல இருந்த நாளிலும் கூட, உண்மையில் தான் ஃப்ரடெரிக்கிடந்தான் ரகசியத்தில் சிநேகமாக இருந்ததாகச் சொல்லிக் கொண்டது நெபோலியன்.

பாக்ஸ்வுட்டுடன் இருந்து வந்த எல்லாத் தொடர்புகளும் இப்போது ரத்தாயின. பில்கிங்டனை அவமதித்து தூது அனுப்பப்பட்டது. புறாக்கள் இனி பிஞ்ச்ஃபீல்டு பண்ணைப் பக்கம் போகக்கூடாது என்று உத்தரவிடப்பட்டன. "ஃப்ரடெரிக் சாகட்டும்!" என்கிற ஸ்லோகம் இப்போது 'பில்கிங்டன் சாகட்டும்' என்று மாற்றப்பட்டது. அதே சமயம் நெபோலியன் ஃப்ரடெரிக்கைப் பற்றி உலாவிய வதந்திகள் பொய்யானவை என்று அறிவித்தது. மிருகங்கள் பண்ணையைத் தாக்க ஃப்ரடெரிக் சதி எதுவும் செய்யவில்லை என்றும், அவன் பண்ணையில் மிருகங்கள் சித்திரவதை செய்யப்பட்டதே கிடையாது என்றும், இதெல்லாம் மிகவும் நம்பகமான தகவல் என்றும், நெபோலியன் பிரகடனம் செய்தது. இவையெல்லாம் ஸ்நோபாலும் அதன் சகாக்களும் கிளப்பிவிட்ட வதந்திகளாக இருக்கலாம் என்றும் கூறப்பட்டது. ஸ்நோபால் பிஞ்ச்ஃபீல்டு பண்ணையில் ஒளிந்து கொண்டிருக்கவில்லை என்பது நன்கு தெளிவாகிவிட்டது என்றும், அது என்றுமே அங்கு போனதேயில்லை என்றும், மிகவும் சௌக்கியமாக, சகலவித சுகபோகங்களுடன், பில்கிங்டன் செலவில் பாக்ஸ்வுட் பண்ணையில்தான் வசித்துவருகிறது என்றும், மிருகங்கள் பண்ணையிலிருந்து ஓடிய நாள் முதல் இன்று வரை பில்கிங்டனிடம் பென்ஷன் பெற்றுக் கொண்டு, அவனுக்காகத்தான் யுக்திகள் செய்து, பாடுபட்டு வந்திருக்கிறது என்றும் நெபோலியன் மறுபேச்சுக்கிடமே இல்லாமல் அடித்துக் கூறியது.

நெபோலியன் தந்திரமாக பில்கிங்டனை ஏமாற்றி, அவன் வலையில் சிக்காதிருந்தது பற்றி மிருகங்கள் தங்களையே பாராட்டிக் கொண்டன. பில்கிங்டனிடம் சிநேகமாக இருப்பது போல இருந்து ஃப்ரடெரிக்கிடம் இருபது பவுன்கள் அதிகமாக விலை வாங்கிவிட்டது நெபோலியன். ஆனால் நெபோலியன் அப்படி நம்பிவிடத் தயாராக இல்லை என்பதும், அதன் ராஜதந்திர மேன்மையும் வேறு ஒரு விஷயத்தில் தெளிவாகிறது என்றது ஸ்க்வீலர் பன்றி. பணம் தருவதாக சத்யம் செய்து, ஒரு செக் என்கிற காகிதம் தருவதாக ஃப்ரடெரிக் சொன்னானாம். "செக்கெல்லாம் வாங்கிக்கொள்ள முடியாது. பணமாக ஐந்து பவுன் நோட்டுகளாகப் பூராப் பணத்தையும் உடனே தந்துவிட வேண்டும்" என்று நெபோலியன் வற்புறுத்தி வாங்கிவிட்டது. அந்தப் பணம் பூராவும் மரக்கட்டைகள் அகற்றப்படு முன் கொடுக்கப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தியது. ஃப்ரடெரிக் உண்மையில் பணத்தை உடனேயே கொடுத்தும் விட்டான். அவன் கொடுத்த பணம் காற்றாடி யந்திர சாமான்களை வாங்குவதற்குப் போதுமானதாக இருந்தது.

மரக்கட்டைகளை அவசர அவசரமாக அப்புறப்படுத்தினான் வாங்கியவன். வண்டிகள் போன பிற்பாடு, இன்னொரு பிரத்தியேகக் கூட்டம் கூடிற்று – ஃப்ரடெரிக் கொடுத்த பணத்தைப் பார்வையிடுவதற்காக, ஆனந்தச் சிரிப்பு முகத்தில் பொங்க இரண்டு மெடல்களையும் அணிந்து கொண்டு, மேடைமேல் வைக்கோலைப் பரப்பி அதன் மேல் சாய்ந்து கொண்டிருந்தது தலைவர் நெபோலியன். பக்கத்தில் ஒரு அழகிய பீங்கான் கிண்ணத்தில் ஃப்ரடெரிக் தந்த ஐந்து பவுன் நோட்டுகள் வைக்கப்பட்டிருந்தன. மிருகங்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து அந்தப் பணத்தைப் பார்த்தன; நின்று நின்று பார்த்தன, பாக்ஸர் தன் முகத்தைப் பீங்கான் கிண்ணத்தண்டை கொண்டு போய் ஒரு மூச்சுவிட்டது; அந்த மூச்சுக் காற்றிலே வெண்மையான லேசான காகிதப் பணம் பறந்துவிடும் போலச் சலசலத்தது.

மூன்று நாட்களுக்குப் பிறகு வேறு ஒரு ஆரவாரம் ஏற்பட்டது – பயங்கரமான ஆர்ப்பாட்டம் அது. முகம் வெளுக்க விம்பர் தன் சைக்கிளில் ஓடோடியும் வந்து அத்தனை பணமும் கள்ளநோட்டுகள் என்று தெரிவித்தான். சைக்கிளை உள்ளே முற்றத்தில் போட்டுவிட்டு அவன் போய் ஒரு நிமிஷத்திற்கெல்லாம் நெபோலியன் ஆத்திரமாகக் கூச்சலிடுவது காதில் விழுந்தது. காட்டுத்தீ போல விஷயம் பண்ணையில் ஒரு நிமிஷத்திற்கெல்லாம் பரவிவிட்டது. கள்ள நோட்டுகள்! அவை செல்லாது! மரத்தை காசு எதுவும் தராமலே தட்டிக் கொண்டு போய் விட்டான் ஃப்ரடெரிக்!

மிருகங்களை எல்லாம் ஒன்று கூட்டி நெபோலியன் ஒரு பிரசங்கம் செய்தது. ஃப்ரடெரிக்குக்கு மரண தண்டனை விதித்தது அது. அவனைப் பிடித்தவுடன் அவனைக் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பறையில் உயிரோடு போட்டுக் கொல்வது என்று தீர்ப்புக் கூறியது நெபோலியன். இவ்வளவு அயோக்கியத்தனமான துரோகச் செயலுக்குப் பிறகு இனி மனிதர்களிடமிருந்து எதையும் எதிர்பார்க்கலாம் என்று நெபோலியன் மிருகங்களை எச்சரித்தது. வெகு நாளாக எதிர்பார்க்கப்பட்டிருந்த தாக்குதலை ஃப்ரடெரிக்கும் அவன் வேலையாட்களும் உடனேயே தொடங்கிவிட்டால் கூட ஆச்சரியப்படுவதற்கில்லை என்றது நெபோலியன். பண்ணைக்குள் வருகிற பாதைகளுக்கெல்லாம் காவலாளிகள் நியமிக்கப்பட்டனர். இதைத் தவிர பாக்ஸ்வுட்டுக்கு நூறு புறாக்கள் விசேஷ தூதர்களாக அனுப்பப்பட்டன. பில்கிங்டனுடன் இந்தச் சந்தர்ப்பத்தில்

சிநேகமாக இருக்க முடியுமானால் நல்லது என்கிற உத்தேசத்துடன் அவன் உறவை நாடித் தூது அனுப்பியது நெபோலியன்.

மறுநாளே தாக்குதலும் தொடங்கிவிட்டது. காலை உணவை அருந்திக் கொண்டிருந்த மிருகங்களை அணுகிக் காவல்காரர்கள் ஃப்ரடெரிக்கும் அவன் மனிதர்களும் வெளிவாசல் கதவைத் தாண்டி பண்ணைக்குள் வந்து விட்டார்கள் என்று அறிவித்தார்கள். மிருகங்கள் மிகவும் தைரியமாகத் தான் போருக்குக் கிளம்பின. ஆனால் மாட்டுக் கொட்டில் சண்டையில் கிடைத்தது போலச் சுலபமாக வெற்றி கிடைக்கவில்லை அவர்களுக்கு. பதினைந்து மனிதர்கள் எதிர்த்து வந்திருந்தனர்; அவர்களிடம் அரை டஜன் துப்பாக்கிகள் இருந்தன; ஐம்பது கஜதூரத்தில் மிருகங்கள் வந்தவுடனேயே அவர்கள் சுட ஆரம்பித்து விட்டார்கள். பயங்கர வெடிகளையும், குண்டுகளையும் மிருகங்களால் தாங்க முடியவில்லை. நெபோலியனும் பாக்ஸரும் பின் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தும், மிருகங்கள் பின் வாங்கின. துரத்தியடிக்கப்பட்டன. பல மிருகங்களுக்குக் காயங்கள் பட்டன. பண்ணை வீட்டுக்குள்ளும், கொட்டகைக்குள்ளும் புகுந்து கொண்டு ஓட்டைகள் வழியாக மனிதர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைக் கவனித்தார்கள். வெளியிடம் பூராவும், காற்றாடி யந்திரக் கட்டிடம் உள்பட எல்லாமே விரோதிகள் கையில் சிக்கிவிட்டது. அந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்வது என்று நெபோலியனுக்குத் தெரியவில்லை. வாலை ஆட்டிக் கொண்டு, குறுக்கும் நெடுக்கும் நடந்தது நெபோலியன்; ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை அது. பாக்ஸ்வுட் பக்கம் மிருகங்கள் அடிக்கடி ஆசையுடன் திரும்பித் திரும்பிப் பார்த்தன. சமயத்தில் பில்கிங்டனும் அவன் ஆட்களும் உதவிக்கு வந்தால், எவ்வளவோ நன்றாக இருக்கும்! தோல்வியை வெற்றியாக மாற்றிவிடலாம், ஆனால் அந்த சமயம் பில்கிங்டனிடம் முதல் நாள் தூதர்களாக அனுப்பப்பட்டிருந்த நூறு புறாக்களும் திரும்பி வந்தன. பில்கிங்டன் தகவல் அனுப்பியிருந்தான் – "உங்களுக்கு இது தான் சரி, இன்னமும் வேண்டும்" என்று.

ஃப்ரடெரிக்கும் அவன் மனிதர்களும் காற்றாடி யந்திரக் கட்டிடத்தைச் சுற்றி நின்றார்கள். மிருகங்கள் அவர்களைக் கவனித்தன. "ஐயோ! ஐயோ" என்று செயலாற்ற வகையில்லாமல் பரிதாபமாக முணுமுணுத்தன அவை. இரண்டு மனிதர்கள் கோடரிகளுடனும் சுத்திகளுடனும் காற்றாடி யந்திரத்தை அணுகினார்கள். கட்டிடத்தை இடிக்கக் கிளம்பியிருந்தார்கள் அவர்கள்.

"முடியாது?" என்றது நெபோலியன், "அவர்களால் இடிக்க முடியாத அளவுக்குக் கனமாகச் சுவர்களைக் கட்டியிருக்கிறோம் நாம். ஒரு வாரத்தில் கூட அவர்களால் அதை அசைக்க முடியாது! தைரியமாயிருங்கள் தோழர்களே!"

ஆனால் அந்த மனிதர்களின் செயல்களை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தது பெஞ்சமின். காற்றாடி யந்திரக் கட்டிடத்திற்கடியிலே, இரண்டு மனிதர்களும் ஒரு ஓட்டை போட்டார்கள். மெதுவாக, ஏதோ வேடிக்கையைப் பார்த்து ஆனந்திப்பது போன்ற ஒரு ஆர்வத்துடன் அது சொல்லிற்று:

"அப்படித் தான் நான் நினைத்தேன். அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது தெரியவில்லையா? அந்த ஓட்டையில் வெடி மருந்தைத் திணிக்கப்போகிறார்கள்."

பீதியடைந்தவையாக, மிருகங்கள் காத்திருந்தன. கட்டிடத்திற் கடியிலிருந்து இப்போது வெளியே கிளம்ப முடியாது; அது அபாயமானது. சில நிமிஷங்களுக்கெல்லாம் மனிதர்கள் நாலு பக்கமும் சிதறி ஓடி ஒளிந்து கொண்டார்கள். பிறகு அங்கே காது செவிடு படும்படியாகப் பிரும்மாண்டமான ஒலி ஒன்று கேட்டது. புறாக்கள் காற்றிலே பறந்தன. நெபோலியனைத் தவிர மற்ற மிருகங்களெல்லாம் குப்புறப்படுத்துவிட்டன; முகத்தை மூடிக் கொண்டன. அவை எழுந்து பார்த்தபோது, எதுவும் கண்ணில் படாமல் ஒரு புகைப்படலம் மறைத்தது. காற்றிலே புகைப்படலம் மறைந்த பின் காற்றாடி யந்திரக் கட்டிடம் அங்கில்லை என்பது தெரிந்தது. கட்டிடம் தகர்ந்து மறைந்துவிட்டது!

இதைப் பார்த்த மிருகங்களுக்கு ரோஷமும் ஆத்திரமும் தைரியமும் அளவு கடந்து வந்தது. பயமும் கோழைத்தனமும் ஒன்றும் செய்ய முடியாது என்கிற மனோபாவமும் உடனே மறைந்தது. எவ்வளவு சிரமப்பட்டுக் கட்டிய கட்டிடத்தை மிகவும் ஹீனமான இழிவாகத் தரைமட்டமாக்கிவிட்டார்கள் மனிதர்கள்! வஞ்சம் தீர்த்துக் கொள்வோம் என்று மிருகங்கள் ஒரு குரலாகக் கூக்குரலிட்டுக் கொண்டு, உத்தரவுகளுக்காகக் காத்திராமல், பாய்ந்து தாக்கின. மிருகங்கள் எல்லாம் கூடி ஒன்றாகப் பாய்ந்து தாக்கின. துப்பாக்கிக் குண்டுகளையோ, வெடிகளையோ அவை இந்தத் தடவை லக்ஷியமே செய்யவில்லை. மிகவும் கோரமான யுத்தம் அது; பிரமாதமான யுத்தம். மனிதர்கள் திரும்பத் திரும்பத் துப்பாக்கிகளால் சுட்டார்கள்.

மிருகங்கள் நெருங்கி வந்தபோது சாட்டைகளாலும் தடிகளாலும் அடித்தார்கள். ஒரு பசு, மூன்று ஆடுகள், இரண்டு வாத்துகள் அங்கேயே செத்து விழுந்தன. பின்னாலிருந்து கொண்டு யுத்தத்தை நடத்திக் கொண்டிருந்த நெபோலியனின் வாலைக்கூட ஒரு துப்பாக்கிக் குண்டு பதம்பார்த்து விட்டது. மனிதர்கள் கட்சியிலும் சேதம் இல்லாமல் இல்லை. பாக்ஸரின் குளம்புகள் அடிகளால் மூவருக்கு மண்டை திறந்துவிட்டது. ஒரு பசு வேறு ஒருவனை வயிற்றில் குத்திக் கிழித்துவிட்டது. ஜெஸ்ஸியும் ப்ளூபெல்லும் சேர்ந்துகொண்டு ஒருவனின் கால்சட்டையைப் பல்லால் கடித்திழுந்தன – அவன் அநேகமாக நிர்வாணமாகி விட்டான் என்றுதான் சொல்ல வேண்டும். நெபோலியனின் சொந்தப்படை வீரர்களாகிய ஒன்பது வேட்டை நாய்களும் வேலி ஓரமாக மறைவாகப்போய், பின்பக்கத்திலிருந்து தாக்கின. சமயம் பார்த்து அவை எழுப்பிய ஊளைகளைக் கண்டே மனிதர்கள் பயந்து போனார்கள். எதிரிகள் தங்களைச் சுற்றி வளைத்துக்கொண்டு விடப்போகிறார்களே என்று பயந்து ஃப்ரடெரிக் தன் ஆட்கள் கலைந்துவிடலாம் என்று உத்தரவிட்டான். சமயம் பார்த்து ஓடிவிடுவதுதான் நல்லது என்றான். அடுத்த நிமிஷமே கோழை மனிதர்கள் விழுந்தடித்துக் கொண்டு தலைதெறிக்க ஓடினார்கள். வயல் கோடி வரையில் அவர்களைத் துரத்திக் கொண்டு ஓடின மிருகங்கள். முள்வேலிகளைத் தாண்டிக் குதிக்க மனிதர்கள் முயன்று கொண்டிருந்தபோது நாலு உதை உதைத்து அவர்களை வழியனுப்பிவிட்டு வந்தன.

மிருகங்கள் யுத்தத்தில் ஜெயித்து விட்டன. ஆனால் அவற்றின் உடலெல்லாம் ரத்தம் பெருகிப் பிரவகித்துக் கொண்டிருந்தது. களைப்பாகவும் இருந்தது. நொண்டி நொண்டிக் கொண்டே அவை பண்ணை வீட்டு முன் முற்றத்துக்கு வந்தன. யுத்த களத்தில் இறந்துகிடந்த தங்கள் தோழர்களைப் பார்த்துக் கண்ணீர்விட்டன அவை. காற்றாடிக் கட்டிடம் நின்ற இடத்தில் துயரம் நிறைந்த உள்ளத்தினர்களாகச் சிறிதுநேரம் நின்றார்கள். மௌனமாக நின்றார்கள். சொல்வதற்கு எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. ஆமாம்! காற்றாடிக் கட்டிடம் போய்விட்டது! இருந்த இடமே தெரியாமற் போய்விட்டது. அவர்கள் பாடுபட்டதின் சின்னமே தெரியாமற் போய்விட்டது. அஸ்திவாரம் கூடப் பெயர்ந்து தளர்ந்துவிட்டது. இந்தத் தடவை பழைய கற்களைக் கூடக் காண முடியவில்லை. மறுபடியும் அவற்றை உபயோகப்படுத்த முடியாது மீண்டும் கட்டிடத்தை எழுப்ப. நூறு இருநூறு

கஜ தூரத்துக்குக் கற்கள் தெரித்துப்போய்ப் பொடியாகி உதிர்ந்து கிடந்தன. காற்றாடி யந்திரக் கட்டிடம் என்று ஒன்று அங்கிருந்த அறிகுறியே தெரியவில்லை.

பண்ணைக் கட்டிடங்ளை அணுகும்போது, யுத்தத்தின்போது எங்கேயோ மாயமாக மறைந்து யார் கண்ணிலும் படாது போய்விட்ட ஸ்க்வீலர் அவர்களை எதிர் கொண்டழைக்கக் குதித்து ஓடிவந்தது – அதன் முகத்திலே திருப்தியும் ஆனந்தமும் தாண்டிவமாடின. பண்ணைக் கொடிமர மூலையிலிருந்து வேட்டுத் தீர்க்கும் சப்தம் மிருகங்கள் காதில் விழுந்தது.

“அதற்காக வெடி போடுகிறார்கள்?” என்று கேட்டது பாக்ஸர்.

“நமது வெற்றியைக் கொண்டாடுவதற்காக” என்றது ஸ்க்வீலர் பன்றி.

“என்ன வெற்றி?” என்று கேட்டது பாக்ஸர். அதன் முழங்கால் களிலிருந்து ரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது. அதன் லாடங்களில் ஒன்று பெயர்ந்துவிட்டது. கால் குளம்பு உடைந்து வலிக்க வேறு வலித்தது. பின்னங் கால்களில் அரை டஜன் குண்டுத் துணுக்குகள் வேறு புகுந்துகொண்டு தொல்லை தந்தன.

“தோழரே! என்ன வெற்றியா? நமது எதிரிகளை நமது மண்ணிலிருந்து விரட்டி ஓட்டி விடவில்லையா நாம்? – மிருகங்கள் பண்ணையின் மண் புனிதமான மண்ணல்லவா?”

“காற்றாடி யந்திர அஸ்திவாரத்தையே தீர்த்துவிட்டார்களே அவர்கள். இரண்டு வருஷங்கள் கஷ்டப்பட்டோமே அதை நிர்மாணிக்க?”

“அதனாலென்ன? இன்னொரு கட்டிடம் கட்டிக் கொள்வோம் நாம். நமக்கிஷ்டமிருந்தால் ஆறு காற்றாடிகள் கட்டிக் கொள்ளலாம். நாம் செய்து சாதித்துவிட்ட வீரத்தனமான காரியத்தை, அடைந்த பிரமாதமான வெற்றியை, தோழரே, நீர் சரிவர உணரவில்லை என்பது தெரிகிறது. நாம் நிற்கிற இந்த மண்ணை எதிரி ஆக்கிரமித்துக் கொண்டிருந்தான். இப்போது – தோழர் நெபோலியனின் தலைமைத் திறத்தால் – நாம் அதை மீட்டுவிட்டோம் மகத்தான வெற்றியல்லவா இது?”

“முன் நம்மிடம் இருந்ததை நாம் மீண்டும் வென்று விட்டோம்” என்றது பாக்ஸர்.

“அதுதான் நமது வெற்றி” என்றது ஸ்க்வீலர்.

நொண்டிக் கொண்டே அவை முற்றத்திற்குள் வந்தன. பாக்ஸர் காலில் தைத்திருந்த ரவை குண்டுகளால் ஏற்பட்ட வலி பொறுத்துக்கொள்ள முடியாததாக இருந்தது. மறுபடி ஒருதரம் காற்றாடி யந்திரக் கட்டிட வேலை

தொடங்கியாக வேண்டும். அந்த மகத்தான காரியத்தைச் சாதிக்கக் கற்பனையில் அது தன்னையே தயார் செய்து கொண்டது. ஆனால் முதல் தடவையாக அன்று அதற்குத் தெரியவந்தது – தனக்குப் பதினோரு வயதாகிவிட்டது என்பதும், தனக்கு முன்போல பலம் இல்லை என்பதும் அன்றுதான் முதல் தடவையாக அதற்கு உரைத்தது.

ஆனால் பச்சைக் கொடி உயரப்பறந்து கொண்டிருந்தது. துப்பாக்கி வேட்டு ஏழுதரம் தீர்க்கப்பட்டது. நெபோலியன் உருக்கமான ஒரு பிரசங்கம் செய்தது. மகத்தான சாதனைக்குத் தன் பாராட்டை நெபோலியனே நேரில் தெரிவித்தது. இதையெல்லாம் கேட்டபின் மிருகங்களுக்கும் தாங்களும் ஏதோ பிரமாதமான ஒரு காரியத்தைச் செய்து முடித்துவிட்டதாகத்தான் தோன்றியது. வெற்றி என்றால் சாமானியமான வெற்றியா அது? யுத்தத்தில் உயிர் துறந்த மிருகங்களுக்குச் சவ அடக்கம் சர்க்கார் மரியாதைகளுடன், கௌரவமாகச் செய்யப்பட்டது. பாடை வண்டியை பாக்ஸரும் க்ளோவரும் இழுத்துச் சென்றன. ஊர்வலத்தின் தலைப்பில் நெபோலியனே நடந்தது. கொண்டாட்டங்கள் இரண்டு நாட்கள் பூராவும் நடைபெற்றன. பாட்டுகள், பிரசங்கங்கள், வோட்டுப் போடல் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகப் பிரமாதமாக நடந்தது. ஒவ்வொரு மிருகத்துக்கும் ஒவ்வொரு ஆப்பிள் இனாமாகத் தரப்பட்டது. ஒவ்வொரு பறவைக்கும் இரண்டு ஆழாக்கு தானியம் இனாம் தரப்பட்டது. நாய்களுக்கு தலா மூன்று மூன்று பிஸ்கோத்துகள் அளிக்கப்பட்டன. அந்த யுத்தத்துக்குக் 'காற்றாடி யந்திரக் கட்டிட யுத்தம்' என்று பெயரிடப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டது. ஒரு புது மெடல் ஒன்று உற்பத்தி செய்து, அதைத் தனக்கே அளித்துக் கொண்டு விட்டதாக நெபோலியன் தெரிவித்தது – அதன் பெயர் பச்சைக் கொடி மெடல். இந்தப் பேரின்பத்தில், கள்ள நோட்டுகள் வாங்கி ஏமாந்த விஷயத்தை மிருகங்கள் மறந்திருந்தன.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு, பண்ணைவீட்டு அடித்தளத்திலே ஒரு பீப்பாய் சாராயம் இருந்ததைப் பன்றிகள் கண்டுபிடித்தன. முதலில் வீட்டைப் பிடித்துக் கொண்டபோது அவை அதைப் பார்க்கவில்லை. பண்ணை வீட்டிலிருந்து அன்றிரவு – அதாவது சாராயப் பீப்பாய் கண்டுபிடிக்கப்பட்ட அன்று – ஒரே பாட்டும் கூத்தும் களியாட்டமுமாக இருந்தது. 'இங்கிலாந்தின் மிருகங்கள்' என்கிற பாட்டுக் கூடக் காதில் விழுந்தமாதிரி இருந்தது. ஒன்பதரை மணிக்கு நெபோலியன், மிஸ்டர் ஜோன்ஸின் பழைய தொப்பி ஒன்றை அணிந்து கொண்டு, வீட்டுக்

கொல்லைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து, முற்றத்தில் நூறுதரம் ஓடியாடிக் கூத்தடித்துவிட்டு, உள்ளே மறைந்து விட்டதை சில மிருகங்கள் கவனித்தன ஆனால், மறுநாள் காலையில் வெகுநேரமாகியும் பன்றிகள் எதுவும் எழுந்திருக்கவேயில்லை. ஒன்பது மணிக்கு மேல்தான் ஸ்க்வீலர் தலையை இரண்டு கைகளாலும் தாங்கிக்கொண்டு தள்ளாடித் தள்ளாடி வெளியே வந்தது. எதையோ பறிகொடுத்த மாதிரி முகத்தை வைத்துக் கொண்டு, கண்கள் உயிரற்று ஒளியற்றுப்போக, வால் மிகவும் துயர பாவத்தில் ஈரமாகத் தொங்க வந்தது அது. உடம்பு சரியாக இல்லை அதற்கு என்பது தெளிவாகவே தெரிந்தது. மிருகங்களைக் கூட்டி அது பயங்கரமான ஒரு தகவலைத் தெரிவித்தது – நெபோலியன், தலைவர், தோழர் நெப்போலியன் சாகக்கிடந்தது.

எல்லா மிருகங்களும் துயரக் குரல் எடுத்து அழுதன. பண்ணை வீட்டுக்கு வெளியே வைக்கோலைப் பரப்பி, சப்தம் கேட்காதிருக்கும் பொருட்டு அதன்மேல் நடந்தன மிருகங்கள் எல்லாம். தலைவர் போய்விட்டால் எப்படித் தங்களால் சமாளிக்க முடியும் என்று கண்ணில் நீர்ததும்ப ஒன்றையொன்று கேட்டுக் கொண்டன. யாரோ நெபோலியனின் உணவில் விஷத்தைக் கலந்து கொடுத்து விட்டார்கள் என்று வதந்தி பரவியது மிருகங்களிடையே. பதினோரு மணிக்கு ஸ்க்வீலர் வந்து இன்னொரு அறிக்கை வெளியிட்டது; மரணப் படுக்கையிலிருந்து நெபோலியன் தன் கடைசி விருப்பத்தை மிருகங்களுக்கெல்லாம் தெரிவித்தது. அதை முக்கியமான விதியாக எல்லா மிருகங்களும் பின்பற்ற வேண்டும். மிருகப் பண்ணையில் சாராயம் குடிக்கும் மிருகத்துக்கு மரண தண்டனை விதிக்கப்பட வேண்டும் என்று விரும்பியது நெபோலியன்.

ஆனால் மாலையில் நெபோலியனுக்கு உடம்பு குணமாக ஆரம்பித்து விட்டது. மறுநாள் காலையில் ஸ்க்வீலர் வந்து தங்கள் தலைவர் இந்தத் தடவை மரணத்தையும் வென்றுவிட்டதாக அறிவித்தது. அன்று மாலையிலேயே நெபோலியன் வழக்கமான அலுவல்களை மீண்டும் கவனிக்கத் தொடங்கிவிட்டது. மறுநாள் விம்பர் மூலமாக நெபோலியன் கிராமத்திலிருந்து சாராயம் காய்ச்சுவது, வடிக்கட்டுவது பற்றிப் பல நூல்கள் வாங்கிவரச் சொல்லியிருப்பதாகத் தெரிந்தது; பழத் தோட்டத்துக்கு அப்பாலிருந்த ஒரு வயல் வெளியை வேலைக்கு லாயக்கற்ற கிழட்டு மிருகங்களின் உணவுக்காகப் புல்தரையாக ஒதுக்கி வைப்பது என்று

ஏற்படாகியிருந்தது. அந்த வயல் வெளிக்கு இப்போது வேறு அவசரத் தேவையிருப்பதாகவும், அதில் பார்லி விதைக்கப் போவதாகவும் முதலில் அறிவிக்கவில்லை நெபோலியன். புது விதை போடுமுன் அதை உழுது பண் செய்ய வேண்டுமென்றது. பிறகு சரிப்படுத்தி பார்லி விதைத்தது.

சற்றேறக்குறைய இந்தச் சமயத்தில் நடந்த ஒரு சம்பவம் மிகவும் அதிசயமானதாக இருந்தது. ஆனால் அதை எந்த மிருகத்தாலும் சரிவர அறிந்து கொள்ளத்தான் இயலவில்லை. ஒருநாள் இரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு தடாலென்று துப்பாக்கி வேட்டுத் தீர்ந்தமாதிரி ஒரு சப்தம் கேட்டது. மிருகங்கள் எல்லாம் ஓடிச்சென்று பார்த்தன. நல்ல நிலவிருந்தது அன்றிரவு. பெரிய கொட்டகையின் கோடிச் சுவரில், ஏழு மிருக விதிகளும் எழுதப்பட்டிருந்த இடத்துக்கு நேர் கீழே ஒரு ஏணி விழுந்து இரண்டாக உடைந்திருந்தது. ஸ்க்வீலர் பேச்சு மூச்சற்று மயக்கமாகத் தரையிலே கிடந்தது. அருகில் ஒரு வாளி வெள்ளை வர்ணம் கொட்டியிருந்தது. ஒரு பெரிய புருசும், ஒரு கை விளக்கும் இரண்டும் பக்கத்தில் கிடந்தன. நாய்கள் வந்து ஸ்க்வீலரைக் காவல் காத்தன. எழுந்து அதனால் நடக்க முடிந்தவுடன் அதை அழைத்துக் கொண்டு வீட்டுக்குள் போய்விட்டன. மிருகங்களில் எதற்கும் இதற்கெல்லாம் என்ன அர்த்தம் என்று கண்டுகொள்ள முடியவில்லை. கிழட்டு பெஞ்சமின் மட்டும் எல்லாவற்றையும் புரிந்து கொண்டது போலத் தலையை ஆட்டிற்று. ஆனால் அது ஒன்றும் சொல்லவில்லை.

ஆனால் இதற்குச் சில தினங்களுக்குப் பிறகு முரியல் அந்த ஏழு விதிகளையும் தனக்காக ஒருதரம் வாசித்துக் கொண்டிருந்தபோது விதிகளில் ஒன்றின் வாக்கியம் கொஞ்சம் மாறியிருப்பது போல உணர்ந்தது. ஐந்தாவது விதியைப் பற்றி மிருக்ங்களுக்கு ஞாபகமிருந்தது இதுதான்; "மிருகம் எதுவும் குடிக்கக் கூடாது." இதில் இப்போது இரண்டு வார்த்தைகள் அதிகமாக இருந்தன. அவற்றை மிருகங்கள் இத்தனை நாளும் மறந்து விட்டன போலும். விதி சொன்னது என்னவென்றல், "மிருகம் எதுவும் அளவுக்கு மீறிக் குடிக்கக்கூடாது!"

●

# 9

பாக்ஸரின் உடைந்த குளம்பு சரியாவதற்குப் பல நாள் பிடித்தது. வெற்றி விழாக் கொண்டாட்டங்கள் முடிந்த மறுநாளே காற்றாடி யந்திரக் கட்டிட வேலை தொடங்கப்பட்டது. பாக்ஸர் ஒருநாள் கூட ஓய்வு எடுத்துக்கொள்ள மறுத்துப் பழைய மாதிரியே வேலையைத் தொடர்ந்து செய்து வந்தது. தனக்கு உடலில் நோவு இருப்பதை மற்ற மிருகங்கள் தெரிந்து கொள்ளக்கூடாது என்று பல்லைக் கடித்துக் கொண்டு பாடுபட்டது. க்ளோவரிடம் மட்டும் சாயங்கால வேலைகளில் குளம்பு வலிக்கிறது என்று ரகசியத்தில் சொல்லும். க்ளோவர் பச்சிலைகளைக் கடித்துப் பக்குவப்படுத்தி பாக்ஸரின் காலில் வைத்துக் கட்டிற்று. அதுவும் பெஞ்சமினும் பாக்ஸரைக் குறைவாக வேலை செய்யவும், உடம்பை அதிகமாக அலட்டிக் கொள்ளாதிருக்கவும் தூண்டின. "குதிரைக்கு மூச்சு என்றும் இராது, ஒருநாள் போய்விடும்" என்ற பழமொழியை பாக்ஸருக்கு ஞாபகப்படுத்தியது க்ளோவர், ஆனால் பாக்ஸர் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. வாழ்க்கையில் ஒரே

ஆசைதான் இருந்தது இதற்கு – காற்றாடி யந்திரக் கட்டிட வேலை துவங்கி கொஞ்சதூரமாவது நடந்து விட வேண்டும், அது ஓய்வு எடுத்து கொள்ளுமுன்.

ஆரம்ப நாட்களில், அதாவது மிருகங்கள் பண்ணையில் புரட்சிக்குப் பின் முதன் முதலாக விதிகள் சட்ட திட்டங்கள் எல்லாம் வகுக்கும்போது குதிரைக்கும் பன்றிக்கும் ஓய்வுபெறும் வயது பன்னிரண்டு என்று தீர்மானிக்கப்பட்டது. பசுக்கள் பதினாலாவது வயதிலும், நாய்கள் ஒன்பதாவது வயதிலும் ஆடுகள் ஏழாவது வயதிலும், வாத்துகளும் கோழிகளும் ஐந்தாவது வயதிலும் ஓய்வு பெறலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. வயது வந்தவர்களுக்கு தாராளமாக உபகாரச் சம்பளம் அளிப்பது என்றும் தீர்மானமாகியிருந்தது. இதுவரை ஒரு மிருகமும் உபகாரச் சம்பளம் பெற்றுக் கொண்டு ஓய்வு பெறவில்லை. ஆனால் கொஞ்சநாளாக ஓய்வு, உபகாரச் சம்பளம் என்கிற விஷயங்கள் மட்டும் அடிக்கடி மிருகங்களுக்குப் புல் தரையாகவும் மேயும் ஸ்தலமாகவும் ஒதுக்கி விடுவார்கள் என்று வதந்தி உலாவி வந்தது. குதிரைக்கு உபகாரச் சம்பளம் ஒரு நாளைக்கு ஐந்து பவுண்டு தானியம் –மாரிக்காலத்தில் பதினைந்து பவுண்டு புல் – இது தவிர காரெட் காய்கறி முதலியன விடுமுறை நாட்களில் தரப்படும் என்று பேசிக் கொள்ளப்பட்டது. அடுத்த வருஷம் கோடையில் பாக்ஸருக்கு வயது பன்னிரண்டாக இருந்தது.

இப்போது, இடையில், வாழ்க்கை மிகவும் கடினமானதாகத் தான் இருந்தது. முந்திய மாரி போலவே இந்த மாரியும் கடுமையான குளிராகவே இருந்தது. உணவும் பற்றாக்குறை தான். மறுபடியும் ஒருதரம் உணவு அளவுகளெல்லாம் குறைக்கப்பட்டன – நாய்களுக்கும் பன்றிகளுக்கும் தவிர மற்ற மிருகங்களுக்கெல்லாம் போதிய அளவு உணவு கிடைக்கவில்லை. மிருக தத்துவத்துக்கு ஒத்துவராது, எல்லா மிருகங்களும் ஒரே மாதிரியான அளவில் உணவு தருவது என்று ஸ்க்வீலர் பல தரப்பட்ட புள்ளிவிவர, தத்துவ தரிசன விளக்கங்களுடன் மிருகங்களிடம் ஸ்தாபித்தது. அது எப்படியானாலும் உணவு பற்றாக்குறையில் இல்லை என்பதை அது பல தரப்பட்ட புள்ளி விவரங்களைக் கொண்டு எடுத்துரைத்துக் காட்டியது. குறைவாகத் தோன்றியதே தவிர, உண்மையில் குறைவே யல்ல என்று ருஜுப்பித்தது அது ஆணித்தரமாக. தாற்காலிகமாக ஏதோ ஒரு சிறு மாறுதல், ஒக்கப் பண்ணல் தேவைப்பட்டுச் செய்திருப்பது உண்மைதான், அதனால் உணவு குறைந்திருப்பதாக ஏற்பட்டுவிடாது.

உணவு அளவில் ஒருமாறுதல் என்று சொல்லலாமே தவிர, ஸ்க்வீலர் தவறியும் கூட, உணவு அளவில் குறைவு என்று சொல்லிவிடாது. ஆனால் ஜோன்ஸின் நாட்களில் மிருகங்களுக்கு இந்த மாறுதல் கால அளவு உணவு கிடைத்தது கிடையாது என்று புள்ளி விவரங்களைக் கொண்டு நிரூபித்தது ஸ்க்வீலர் பன்றி. கீச்சுக்குரலில், வெக வேகமாக, புள்ளிகளை மிருகங்களுக்கு வாசித்துக் காட்டியது ஸ்க்வீலர். கொள்ளு, வைக்கோல், டர்னிப், கேரட் போன்ற காய்கறிகள், இவையெல்லாம் ஜோன்ஸின் நாட்களில் கிடைத்ததைப்போல இரண்டு பங்கு இப்போது கிடைத்தது என்று கணக்குப் பண்ணி ஸ்தாபித்தது ஸ்க்வீலர். ஜோன்ஸ் காலத்தைவிட இப்போது குறைவாகவேதான் மிருகங்கள் வேலை செய்கின்றன என்றும், பண்ணையில் ஈக்கள் முதலிய தொந்தரவு தரும் தொல்லைகள் குறைந்துவிட்டன என்றும், குடி தண்ணீர் முன்னைவிட நல்லதாக இருக்கிறது என்றும், மிருகங்களின் ஆயுள் அதிகரித்துவிட்டது என்றும், அவற்றின் குட்டிகளில் பல சௌக்கியமாகக் குழந்தைப் பருவத்தைத் தாண்டி உயிர் வாழ்ந்தன என்றும், படுக்க வைக்கோலும் அதிகமாக இருந்தது என்றும் ஆணித்தரமாக, மறுக்க முடியாதபடி சொல்லிற்று ஸ்குவீலர். ஒவ்வொரு வார்த்தையையும் நம்பின மிருகங்கள் எல்லாம். உண்மையைச் சொல்லப்போனால், ஜோன்ஸோ, ஜோன்ஸின் காலத்து விஷயங்களோ அவற்றிற்கு அடியோடு மறந்தேபோய்விட்டன. இப்போது வாழ்க்கை கடினமாகவும், திருப்தியற்றதாகவும், உத்ஸாகமற்றதாகவும் இருந்தது என்பதை மட்டுமே அவை உணர்ந்தன. இப்போது அவை அடிக்கடி பசியுடனும் குளிருடனும் போராட வேண்டியதாக இருந்தது. தூங்காத நேரமெல்லாம் இப்போது அவை ஓயாமல் உழைத்துக் கொண்டிருந்தன. அவ்வளவுதான் அவற்றிற்குத் தெரிந்த விஷயம். ஜோன்ஸ் காலத்தில் இன்னும் மோசமாகத்தான் இருந்திருக்கும். அப்படி நம்ப அவை தயாராகவும் இருந்தன – அப்படி நம்புவதில் ஒரு உத்ஸாகமும் கொண்டன அவை. தவிரவும் அந்தக் காலத்தில் மிருகங்களெல்லாம் மனிதனுக்கு அடிமைப்பட்டுக் கிடந்தன. இப்போது அவை சுதந்திரம் பெற்றுவிட்டன. அது பெரிய முக்கியமான விஷயமல்லவா? இந்த முக்கியமான வித்தியாசத்தை அடிக்கொருதரம் ஸ்க்வீலர் சுட்டிக் காட்டத் தயங்கவில்லை.

தவிரவும் இப்போது உணவு சாப்பிடுவதற்கு மிருகங்களின் எண்ணிக்கையும் அதிகரித்திருந்தது. இலையுதிர் காலத்தில் சற்றேறக்குறைய ஒரே சமயத்தில் நாலு பெண் பன்றிகளும் குட்டிகள்

போட்டன. நாலுமாகச் சேர்ந்து முப்பத்தொரு குட்டிகள் போட்டன. பிறந்த குட்டிகள் கரும்புள்ளியும் வெள்ளைப் புள்ளியுமாக இருந்தன. பண்ணையிலே நெபோலியனைத் தவிர வேறு ஆண் பன்றி கிடையாததால், இந்தக் குட்டிகளின் தகப்பன் யார் என்பது பற்றிச் சந்தேகத்துக்கு இடமேயில்லை. பின்னால், சுண்ணாம்பும் கல்லும் வாங்க வசதி ஏற்பட்டவுடன், பண்ணை வீட்டுத் தோட்டத்திலே ஒரு பள்ளிக்கூடம் கட்டப்படும் என்று அறிவிக்கப்பட்டது. தாற்காலிகமாக பன்றிக் குட்டிகளுக்கு நெபோலியனே பாடம் சொல்லித் தந்தது – பண்ணை வீட்டுச் சமையலறையில் பாடங்கள் சொல்லித் தந்தது. அவை விளையாடத் தோட்டத்தைத் தாண்டி வெளியே செல்ல அனுமதிக்கப்படவில்லை. தவிரவும் பண்ணையிலிருந்த மற்ற மிருகங்களின் குட்டிகளுடன் விளையாட, பழக பன்றிக் குட்டிகள் அனுமதிக்கப்படவில்லை. சற்றேறக்குறைய இதே சமயத்தில் இன்னொரு விதியும் அமுலுக்கு வந்தது. பாதையிலே ஒரு பன்றி எதிர்ப்பட்டால் மற்ற எந்த மிருகமானாலும் அதற்கு வழிவிட்டு மரியாதையாக ஒதுங்கி நிற்க வேண்டும் என்பதுதான் அது. அந்தப் பன்றியும் விடுமுறை நாட்களிலும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் தன் வாலில் பச்சை ரிப்பன் ஒன்று கட்டிக்கொள்ளலாம் – அந்த உரிமை அதற்கு உண்டு என்று அறிவிக்கப்பட்டது.

பண்ணைக் காரியங்கள் அவ்வருஷம் வெற்றிகரமாகவே நடந்தன. ஆனால் பண்ணையிலே போதிய பணம் தான் இல்லை. கல், சுண்ணாம்பு, மணல் எல்லாம் தேவை– பள்ளிக்கூடம் கட்டுவதற்கு வாங்கியாக வேண்டும். காற்றாடி யந்திர சாமான்கள் வாங்க மீண்டும் பணம் சேகரிக்க வேண்டும். வீட்டு விளக்குகளுக்கு எண்ணெய் மெழுகு வர்த்திகள் எல்லாம் வாங்கியாக வேண்டும். நெபோலியனின் உபயோகத்துக்கென்று சர்க்கரை வாங்க வேண்டும். (மற்றம் மிருகங்கள் சர்க்கரை உபயோகப் படுத்தக்கூடாது.– உபயோகப்படுத்தினால் அவை அதிகமாகக் கொழுத்துப் போய்விடும் என்று விதி ஏற்பட்டிருந்தது.) மற்றும் பண்ணைக்குத் தேவையான தளவாடங்கள், ஆயுதங்கள், ஆணிகள், கயிறு, எரிப்பதற்குக் கரி, கம்பி, இரும்பு, நாய் பிஸ்கோத்துகள் முதலியனவும் வாங்கியாக வேண்டும். வைக்கோல் போர் ஒன்றும் உருளைக்கிழங்கு அறுவடையானதில் ஒரு பகுதியும் விற்கப் பட்டது. கிராமத்தில் விற்பனைக்குக் கொடுக்கும் முட்டைகள் ஐநூறிலிருந்து அறுநூறாக உயர்த்தப்பட்டன. அந்த வருஷம் இட்ட முட்டைகளில் விற்காமல் நின்று குஞ்சுகளானவை மிகவும் சொல்பமே: பண்ணையிலே கோழிகளின்

எண்ணிக்கை வெகுவாகக் குறைந்துவிடும் போல இருந்தது. டிசம்பரில் குறைக்கப்பட்ட உணவு அளவு ஃபிப்ரவரியில் மீண்டும் குறைக்கப்பட்டது. வீட்டுக்கு வெளியே மிருகங்கள் படுத்துறங்கும் இடங்களில் விளக்குகள் எரிக்கக்கூடாது– விளக்குகளுக்கு எண்ணெய் வீணாகச் செலவாகிறது என்று நெபோலியன் உத்தரவிட்டது. ஆனால் பன்றிகள் சௌகரியமாகத் தான் இருந்தன; அவை தின்று கொழுத்துக் கொண்டிருக்கிற மாதிரித் தான் தோன்றியது. ஃபிப்ரவரி மாதக் கடைசியில் ஒரு நாள் மாலையில் ஏதோ ஒரு சமையல் வாசனை பண்ணை பூராவும் பரவி எல்லோருக்கும் நாக்கில் ஜலம் ஊறச் செய்தது. அது வரை மிருகங்கள் அந்த மாதிரி வாசனையை முகர்ந்ததே கிடையாது. ஜோன்ஸ் காலத்தில்கூட உபயோகப்படாமல் கிடந்த சாராயம் காய்ச்சும் கிடங்கிலிருந்து வந்தது அந்த வாசனை. யாரோ சொன்னார்கள்– பார்லி கொதிக்கும் வாசனை அது என்று. பசியுடன், நாக்கில் ஜலம் ஊற, காற்றில் வந்த அந்த வாசனையை நுகர்ந்தன மிருகங்கள். தங்களுக்குத் தான் ஏதாவது விசேஷமாகத் தயாராகிறதோ என்று ஆச்சரியப்பட்டு, ஆசையுடன் காத்திருந்தன. ஆனால் அவற்றிற்கென்று விசேஷமாக ஒன்றும் வரவில்லை. அடுத்த ஞாயிறன்று கொட்டகையில் மிருகங்கள் கூடிய போது இனிமேல் பன்றிகளுக்கு மட்டும் தினம் இவ்வளவு பார்லி என்று அளந்து அளிக்கப்படும் என்று அறிவிக்கப் பட்டது. வேறு எந்த மிருகமும் பார்லி உபயோகிக்கக் கூடாது என்று அறிவிக்கப்பட்டது. பழத்தோட்டத்துக்கு அப்பாலிருந்த வயலில் இனி பார்லியைத் தவிர வேறு எதுவும் பயிரிடப்படமாட்டாது. இத்துடனில்லாமல் தினமும் பன்றிகளுக்கு ஒரு பைண்ட் பீர் தரப்படுவதாக ஒரு செய்தியும் மிருகங்கள் பண்ணையிலே பரவியது.

நெபோலியனுக்கு மட்டும் பார்லி பீர் தினமும் அரை காலன் கொடுக்கப்பட்டது என்றும் தெரிய வந்தது. அந்த பீரை நெபோலியன் தினமும் க்ரௌன் டர்பி பீங்கான் பாத்திரத்தில் தான் சாப்பிட்டு வந்தது என்றும் தெரியவந்தது.

சுமப்பதற்குக் கடினமான சுமைகள், செய்வதற்குக் கடினமான வேலைகள் இருந்தன எனினும் இப்போது மிருகங்கள் வாழ்க்கையிலே ஒரு புது கௌரவமும், ஒரு புது நிமிர்வும் பெற்றிருந்தன என்பதால் வாழ்க்கை சாத்தியமாகவே இருந்தது. எப்போதும் இல்லாத ஒரு புது மேன்மை உணர்ச்சியுடன் வாழ்ந்தன மிருகங்கள். பாட்டுக் கச்சேரிகள், பிரசங்கங்கள், ஊர்வலங்கள் எல்லாம் முன்னைக்கிப்போது அதிகமாக இருந்தன.

வாரத்தில் ஒரு நாள் மிருகங்கள் தாமாகக் கூடி தாமாகக் கொண்டாட்டங்கள் நடத்தவேண்டும் என்று நெபோலியன் உத்தரவிட்டிருந்தது. இப்படித் தாமாகக்கூடும் கொண்டாட்டங்களில் கலந்து கொள்ளாதவர்களுக்குப் பன்றிகள் கொடுமையான தண்டனைகள் விதித்தன. மிருகங்கள் பண்ணையில் சாதனைகளைப் பற்றிப் பாராட்டுவதற்காகவே இந்தக் கூட்டங்கள் கூடின. குறிப்பிட்ட ஒரு நேரத்தில் மிருகங்கள் எல்லாம் தங்கள் தங்கள் அலுவல்களை அப்படி அப்படியே விட்டு விட்டு வந்து தாமாகக்கூடி, இராணுவ அணிவகுப்பு முறையில், வரிசையாகப் பண்ணையைச் சுற்றிச் சுற்றி வர வேண்டும். பன்றிகள் முதலில் போகும். பிறகு குதிரைகள், பசுக்கள். பிறகு ஆடுகள், அதற்கப்பால் கோழிகளும் வாத்துகளும். இருமருங்கிலும் வேட்டை நாய்கள் உடன்வரும். எல்லாவற்றிற்கும் தலைமை வகித்து கூவிக்கொண்டு, நெபோலியனின் கருப்புச் சேவல் செல்லும், பாக்ஸரும் க்ளோவரும் ஒரு பெரிய கொடியை உயர்த்தித் தூக்கிச் செல்லும். பச்சைத் துணியில் அழகாகக் குளம்பும் கொம்பும் பொறித்திருக்கும். அதன் கீழ் "தோழர் நெபோலியன் வாழ்க!"என்று எழுதியிருக்கும். ஊர்வலக் கொண்டாட்டத்துக்குப் பிறகு நெபோலியனைப் போற்றிப் புகழ்ந்து பாட்டுக்கள் படிக்கப்படும். வழக்கமாக ஸ்க்வீலர் பன்றி மிருகங்கள் பண்ணையில் உணவு நிலை முன்னைக்கிப்போது எப்படி உயர்ந்து நன்றாக இருக்கிறது என்று ஏராளமான புள்ளி விவரங்களுடன் ஒரு பிரசங்கம் நிகழ்த்தும். புதுசாக இந்தப் பருவத்தில் உணவு உற்பத்தி எவ்வளவு சதவிகிதம் பெருகியிருக்கிறது என்பதை அது எடுத்துச் சொல்லும். சில சமயம் இந்தச் சந்தர்ப்பங்களில் துப்பாக்கியில் வேட்டுத் தீர்ப்பதும் உண்டு. தானாகக் கூடுகிற கூட்டங்களில் அதிக ஆர்வம் காட்டிய மிருகங்கள் ஆடுகள்தான். யாராவது எதையாவது பற்றி விவாதித்துக் குறைசொல்ல ஆரம்பித்தால் ஆடுகள் கோஷ்டியாக "இரண்டு கால் கெட்டது; நாலுகால் நல்லது" என்று சேர்ந்தாற்போலப் பத்து நிமிஷம் பாடி, விவாதமோ சர்ச்சையோ இல்லாமல் செய்துவிடும். மொத்தத்தில் சொல்லப்போனால் இந்தக் கூட்டங்கள் உற்சாகம் தருபவையாகத்தான் இருந்தன. அவை யாருக்கும் அடிமைப் பட்டிருக்கவில்லை, தாங்களே தங்களுக்கு யசமானர்கள் என்பதை ஞாபகப்படுத்தி மனத்துக்கு உத்ஸாகம் தருவதற்கு இந்தக் கூட்டங்கள் பெரிதும் பயன்பட்டன. அவை பட்டபாடுகளெல்லாம், செய்த வேலைகள் எல்லாம், தங்கள் லாபத்துக்காகவேயன்றிப் பிறர் யாருடைய

லாபத்துக்காகவும் அல்ல. பாட்டுகள், ஊர்வலங்கள், ஸ்க்வீலர் பன்றியின் புள்ளி விவரங்கள், பிரசங்கம், துப்பாக்கி வேட்டு, சேவலின் அரை கூவல், பறக்கும்கொடி, எல்லாமாகச் சேர்ந்து வயிறு காய்வதை மறக்கவைக்க உபயோகப்பட்டன: இந்த ஆர்ப்பாட்டத்தில் கொஞ்ச நேரமாவது பசியை மறந்திருக்க முடிந்தது என்பது விசேஷம் தானே!

ஏப்ரலில் மிருகங்கள் பண்ணை ஒரு குடியரசு என்று அறிவிக்கப்பட்டது. நாட்டுக்குத் தலைவர் ஒருவரைத் தேர்ந்தெடுப்பதற்கு அவசியம் ஏற்பட்டது. ஒரே ஒரு அபேட்சகர் தான் அப்பதவிக்குப் போட்டியிட்டார். நெபோலியன் தான் அது. அதுவே ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. அதே தினத்தன்று ஸ்நோபாலின் பண்டைய துரோகச் செயல்களை ஐயந்திரிபற நீருபிக்கப் புது ருஜுக்கள் பல, புதுக்கடிதங்கள் பல அகப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டது. ஜோன்ஸுடன் ஸ்நோபால் செய்து கொண்ட அதிகார ஒப்பந்தம் பற்றிப் பூரா விவரங்களும் கிடைத்துவிட்டன. அதிலிருந்து தெரிந்ததாவது: முன்னர் மிருகங்கள் நினைத்தபடி தந்திரமாக மாட்டுக் கொட்டில் யுத்தத்தில் மிருகங்களைத் தோற்கடிக்க நினைத்ததுடன் நின்றுவிடவில்லை ஸ்நோபால். அது உண்மையில் எதிர்க் காட்சிக்குத் தலைமை தாங்கியே மிருகங்கள் பண்ணை மேல் யுத்தம் செய்தது என்பது மறுக்கமுடியாத ருஜுக்களால் இப்போது தெரிந்துவிட்டது. ஜோன்ஸ் கட்சியில் சண்டையிட்டது மட்டுமல்ல; உண்மையில் அதுவேதான் ஜோன்ஸ் கட்சியின் முன் நின்று மிருகங்களுக்கு எதிராக யுத்தத்தை நடத்தியது. "மனித குலம் வாழ்க!" என்று கோஷமிட்டுக் கொண்டு, மனிதர் கோஷ்டிக்குத் தலைமை வகித்து நடத்தியது ஸ்நோபால் தான். ஸ்நோபாலின் முதுகில் அன்று காயங்கள் ஏற்பட்டு ரத்தம் வழிந்ததே – அது எப்படி ஏற்பட்டது தெரியுமா? யுத்த ஆரம்பத்தில் நெபோலியன் ஸ்நோபாலின் மேல் பாய்ந்து முதுகில் கடித்து ரத்தம் பெருகச் செய்ததால் ஏற்பட்ட காயங்கள் அவை. மிருகங்களில் வயதானவற்றிற்கு இதெல்லாம் சரிவர ஞாபகம் இருக்கலாம் இன்னமும்!

பல வருஷங்கள் எங்கேயோ கண் காணாமல் போய் விட்ட மோஸஸ் என்ற காகம் அந்த வருஷம் நடுக் கோடையில் வந்து சேர்ந்தது, திடீரென்று. அது சிறிதும் மாறவில்லை. இப்போதும் ஒரு வேலையும் செய்யவில்லை அது இன்னமும் பழையமாதிரியே அது கற்கண்டு மலையைப் பற்றியும் அதன் ஆனந்தங்களையும் பற்றிப் பேசியது, ஒரு கிளையில் உட்கார்ந்து கொண்டு, இறக்கைகளைப் படபடவென்று அடித்துக்கொண்டே, கேட்பவரிடம் மணிக்

கணக்காகக் கதைகளை அளக்கும் அது. நீண்ட கரிய மூக்கை மேலே உயர்த்திக் காட்டிக்கொண்டு அது சொல்லும்: "அங்கே. தோழர்களே, அதோ அங்கே, மேலே, அதோ தெரிகிற கரு மேகத்துக்கும் மேலே,அப்பால் இருக்கிறது கற்கண்டு மாமலை. அங்கு வேலைகளே கிடையாது. இங்கு வேலை செய்து அலுத்த மிருகங்கள் எல்லாம் அங்கு நிம்மதியாக ஆனந்தமாக இருக்கலாம் . ஸ்வர்க்க பூமி அது, ஆனந்தநாடு...." இவ்விதமாகச் சொல்லும், ஒரு சமயம் உயரப்பறக்கும் போது அந்த மலையைத் தான் பார்த்தாகக்கூட அது சொல்லிற்று. எல்லையற்ற புல்லும், கொள்ளும், தானியங்களும், வைக்கோலும் இருந்தது அங்கே என்றது. வயிறாரத் தின்னு வதை யாரும் தடுப்பதில்லை என்றது. "பசுமையான இலைகள் ஏராளமாக இருந்தன. வேலிகளிலே தின்பண்டங்களும் சர்க்கரைக் கட்டிகளும் காய்த்துக் குலுங்கின" என்றது. மிருகங்களில் பலவும் அது சொல்வதை நம்பின. நம்புவதற்கு அவை தயாராக இருந்தன. அதற்குக் காரணம் இது தான். இப்போது இந்த மிருகங்களின் வாழ்க்கை கடினமாக வேலைகளும் தீராத பசியும் நிறைந்ததாக இருந்தது, வேறு எங்கேயாவது ஒரு உலகத்தில் இதை விடச் சிறந்ததாக ஒரு வாழ்க்கை இருக்கத்தானே வேண்டும்! மோஸஸைப் பற்றிப் பன்றிகள் என்ன நினைத்தன வென்பதைக் கண்டு பிடிப்பது தான் சிரமமாக இருந்தது. கற்கண்டு மலையைப் பற்றி மோஸஸ் சொன்னதெல்லாம் பொய்க் கதைகள் என்று அவை அலட்சியமாக அபிப்பிராயம் தெரிவித்தன. ஆனால் அதற்காக மோஸஸை அங்கிருந்து அவை அடித்துத் துரத்திவிடவுமில்லை. அதற்குத் தினமும் ஒரு அளவு பீரும் உணவும் தந்தன.

குளம்பு சரியான பிறகு பாக்ஸர் முன்னெல்லாம்விட அதிகமாக உழைத்தது. உண்மையில் எல்லா மிருகங்களுமே எப்போதையும்விட அதிகமாக, அடிமைகளே போல உழைத்தன. பண்ணையில் சாதாரணமாக நடக்க வேண்டிய வேலைகள் இருந்தன. அது தவிர காற்றாடி யந்திரக் கட்டிட வேலை நடைபெற்றுக் கொண்டிருந்தது. இளம்பன்றிகளுக்கான பள்ளிக் கட்டிடமும் வேலையாகிக் கொண்டிருந்தது. மார்ச் மாதத்தில் அந்த வேலை தொடங்கிற்று, சில சமயம் உணவு போதாத குறையால், அதிக வேலை செய்வது மயக்கம் வருகிற மாதிரி இருந்தது பாக்ஸருக்கு. ஆனால் அதற்காகவெல்லாம் அது வேலையில் தயங்குவதாக இல்லை. முன்னைக்கிப்போது தன் பலம் குன்றிவிட்டது என்று அது பேச்சாலோ

செயலாலோ காட்டிக் கொள்ளவே யில்லை. அதன் தோற்றம் தான் ஓரளவு மாறிவிட்டது. முன்போல மிடுக்காகவும் பளபளப்புடனும் இல்லை அது. அதன் பின்தசைகள் வடிந்து மெலிந்துவிட்டன; உடலில் சருமத்தின் பளபளப்பும் மங்கிவிட்டது. மற்ற மிருகங்கள் "பாக்ஸர் வருகிற வஸந்தத்தில் முன்போலாகிவிடும்" என்று சொல்லிக் கொண்டன. ஆனால் வஸந்தம் வந்தும் அது பெருக்கவில்லை; மீண்டும் இளைத்தது, சில சமயம் கற்களைக் குன்றின்மேல் எற்றிச் செல்கிற முயற்சியில், அதற்கு இன்னமும் நிமிர்ந்து நிற்கத் தைரியமும் தெம்பும் தந்தது அதன் மனவலிமையே தவிர உடல் வலிமையல்ல என்பது மற்ற மிருகங்களுக்கும் தெளிவாகவே தெரிந்தது. இந்த மாதிரி சமயங்களில், பேசக்கூடச் சக்திற்றுப் போய் பாக்ஸர் உதடுகளால் "இன்னும் அதிகமாக வேலை செய்வேன்" என்று அசைப்பதை மற்ற மிருகங்கள் கவனிக்கும். க்ளோவரும் பெஞ்சமினும் மறுபடியும் உடம்பைப் பார்த்துக்கொள்ளச் சொல்லி எச்சரித்தன. அதையெல்லாம் பாக்ஸர் காதில் வாங்கவே யில்லை. அதனுடைய பன்னிரண்டாவது பிறந்த தினம் வந்து கொண்டிருந்தது. உபகாரச் சம்பளம் பெற்று ஓய்வு எடுக்கப்போகுமுன், காற்றாடி யந்திரக் கட்டிடம் கட்டப் போதிய கற்கள் சேர்த்துவிட்டால் போதும் என்று பாடுபட்டது பாக்ஸர்.

கோடையில் ஒருநாள் அஸ்தமன சமயத்தில், பண்ணை பூராவிலும் பாக்ஸருக்கு ஏதோ நேர்ந்துவிட்டது என்று வதந்தி கிளம்பிற்று. தனியாக ஒரு வண்டிச் சுமை கல்லை இழுத்துவரப் போயிருந்தது அது. வதந்தி உண்மைதான். இரண்டொரு நிமிஷங்களுக்குள்ளாகவே புறாக்கள் இரண்டு உண்மை விஷயத்தைப் பண்ணை பூராவும் பரப்பிவிட்டன. "பாக்ஸர் கீழே விழுந்துவிட்டது. ஒருக்களித்து அதனால் எழுந்திருக்க முடியவில்லை!"

மிருகங்களில் பாதிக்கும் அதிகமாகக் காற்றாடி யந்திரக் கட்டிடம் இருந்த இடத்துக்கு ஓடின, அங்கே கிடந்தது பாக்ஸர். வண்டி ஏர்க்கால்களுக்கிடையில் கிடந்தது. அதன் கழுத்து தரையோடு நீண்டிருந்தது. தலையைத் தூக்கக்கூட முடியவில்லை அதனால். அதன் கண்கள் ஒளி மங்கி இருந்தன. அதன் மேல் வியர்வை ஆறாக ஓடி வழிந்திருந்தது. அதன் வாயிலிருந்து கொஞ்சமாக ரத்தம் வழிந்திருந்தது. அதன் பக்கத்தில் படுத்து க்ளோவர் கேட்டது.

"பாக்ஸர்! என்ன செய்கிறது?"

பலஹீனமான குரலில் பாக்ஸர் சொல்லிற்று: "என் சுவாச கோசம் சரியாக இல்லை. அதனாலென்ன, பாதகமில்லை. நானில்லாமலே நீங்கள் காற்றாடி யந்திர கட்டிடத்தைக் கட்டிவிடுவீர்கள். ஏராளமான கற்கள் சேர்ந்து விட்டன. தவிரவும் நான் ஓய்வுபெற இன்னும் ஒரு மாதம் தானே இருக்கிறது? உண்மையில், நான் என் ஓய்வு நாளை எதிர்பார்த்துத் தான் காத்திருந்தேன். பெஞ்சமினும் கிழவனாகிக் கொண்டிருப்பதால். அதையும் என்னுடன் ஓய்வு எடுத்துக்கொள்ள அனுமதித்தார்களானால், எனக்குப் பொழுதுபோகும்."

எல்லா மிருகங்களுமே பண்ணை வீட்டை நோக்கி ஓடி ஸ்க்வீலருக்குத் தகவல் கொடுத்தன. க்ளோவர் மட்டும் பாக்ஸர் பக்கத்தில் படுத்திருந்தது. பெஞ்சமின் வழக்கப்படி மௌனமாக பாக்ஸர் மேல் வந்து உட்கார்ந்த ஈக்களை விரட்டிக்கொண்டு நின்றது. கால் மணி நேரம் கழித்து ஸ்க்வீலர் வந்து சேர்ந்தது– அநுதாபமும் ஆதரவும் ததும்ப வந்தது. மிகவும் பக்தியுடன் உழைத்து வந்த பாக்ஸருக்கு நேர்ந்த விபத்துப் பற்றித் தலைவர் தோழர் நெபோலியன் கேள்விப்பட்டுத் துயருற்றிருப்பதாகத் தெரிவித்தது ஸ்க்வீலர். பாக்ஸருக்கு வைத்தியம் செய்ய அதை உடனேயே வில்லிங்டன் கிராமத்திலிருந்த மிருக வைத்திய சாலைக்கு அனுப்பு ஏற்பாடுகள் செய்ய நெபோலியன் விம்பருக்குச் சொல்லியனுப்பியிருப்பதாகச் சொல்லிற்று ஸ்க்வீலர். இதைக்கேட்ட மற்ற மிருகங்கள் சிறிது ஐயங்கொண்டன, இது சரியல்ல என்று அவற்றிற்குத் தோன்றிற்று. மாலியையும் ஸ்நோபாலையும் தவிர வேறு எந்த மிருகமுமே மிருகங்கள் பண்ணையவைவிட்டு வெளியேறியதே கிடையாது. உடம்பு சரியாக இல்லாத தோழர் தங்கள் எதிரிகளான மனிதர்கள் கையில் சிக்கிக்கொள்வது, வைத்தியத்திற்கேய ஈனாகலும், சரியல்ல என்று மிருகங்கள் நினைத்தன. ஆனால் ஸ்க்வீலர் அவை நினைத்தது தவறு என்பதை அதிசீக்கிரமே நிரூபித்துவிட்டது. பண்ணையில் கிடைப்பதைவிட நல்ல வைத்திய உதவி பாக்ஸருக்கு மிருக வைத்திய சாலையில் கிடைக்கும் என்றும், உடல் அங்கு சீக்கிரமே குணமாகிவிடும் என்றும் சொல்லிற்று ஸ்க்வீலர். அரை மணி நேரத்துக்குப் பிறகு பாக்ஸர் கொஞ்சம் தேறி, எழுந்து நொண்டிக்கொண்டே தன் லாயத்துக்குச் சென்றது. அங்கு க்ளோவரும் பெஞ்சமினும் வைக்கோலைப் பரப்பி அது படுத்துக்கொள்ள வசதி செய்தன.

அடுத்த இரண்டு நாட்களும் பாக்ஸர் தன் லாயத்திலேயே தங்கிவிட்டது. பண்ணை வீட்டு குளிக்கும் அறை அலமாரியில் இருந்த

சிலப்பு நிற மருந்தொன்றைப் பன்றிகள் பாக்ஸருக்கு அனுப்பிவைத்தன. சாப்பாட்டுக்குப் பிறகு, தினமும் இரண்டு வேளைகள் அந்த மருந்தைக் கொடுத்தது க்ளோவர். மாலை நேரங்களில் க்ளோவர் அதனுடன் வந்து பேசிக்கொண்டிருக்கும். பெஞ்சமின் எதுவும் பேசாமல் ஈக்களை விரட்டிக் கொண்டிருக்கும். நடந்தது பற்றித் தான் வருத்ததப்படவில்லை என்று சொல்லிக் கொண்டது பாக்ஸர். உடல் தேறிவிட்டால், அது இன்னும் மூன்று வருஷங்கள் உயிருடன் இருக்கலாம். பெரிய வயலில் ஒரு மூலையில் நிம்மதியாகக் கழிக்கக்கூடிய தன் ஓய்வு நாட்களை அது எதிர்பார்த்துக் காத்திருந்தது. படித்து அறிவை விருத்திசெய்து கொள்ள இதுவரை அதற்கு அவகாசமே இருந்ததில்லை. தன் வாழ்நாளில் இனி எஞ்சிய பகுதியை, இருப்பத்தாறு எழுத்துக்களில், தெரிந்த நாலுபோக மற்ற இருபத்திரண்டு எழுத்துக்களையும் கற்றுக்கொள்ளத் தான் பாடுபடப் போவதாகத் தெரிவித்தது பாக்ஸர்.

எனினும், பெஞ்சமினோ க்ளோவரோ வேலைகள் எல்லாம் முடிந்த பிறகுதான் பாக்ஸருடன் இருக்க முடிந்தது. அதை எடுத்துப் போக வண்டி நண்பகலில் வந்தது, பன்றி ஒன்றின் மேற்பார்வையில் டர்னிப் கிழங்குகள் பிடுங்கி நடுகிற வேலையில் ஈடுபட்டிருந்தன மிருகங்கள் எல்லாம். அப்போது. பெஞ்சமின் உறக்கக் குரல் கொடுத்துக் கொண்டு, பண்ணைக் கட்டிடங்கள் பக்கத்திலிருந்து ஓடோடியும் வந்தன. பெஞ்சமின் வழக்கத்துக்கு விரோதமாக இப்படிப் பதட்டமாக ஓடுவதையும் பேசுவதையும் இப்போது தான் முதல் தடவையாகப் பார்த்தன மிருகங்கள். அதிசயித்தன அவை, "அவரசம்! அவரசம்!" என்றது பெஞ்சமின், "சீக்கிரம் வாருங்கள், வாருங்கள், பாக்ஸரை எடுத்துச் செல்லுகிறார்கள்!" என்று கூவியது, பன்றியிடம் உத்தரவு கேட்கக்கூடத் தாமதிக்காமல் எல்லா மிருகங்களும் வேலைகளை அப்படியே விட்டுவிட்டு, கட்டிடங்களை நோக்கி ஓடின. உண்மைதான், அங்கே ஒரு பெரிய மூடிய வண்டி லாயத்துக்கு எதிரில் நின்று கொண்டிருந்தது. வண்டியில் இரண்டு குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன.அதன் மேல் பெரிய எழுத்துக்களில் ஏதோ எழுதப்பட்டிருந்தது, குதிரை ஒட்டி பார்ப்பதற்கே அவநம்பிக்கை விளைவிக்கும் அருவருப்பான தோற்றமுடையவனாகவும், தந்திரக்காரனாகவும் காணப்பட்டான். லாயத்தில் பாக்ஸரைக் காணவில்லை.

மிருகங்கள் எல்லாம் அந்த வண்டியைச் சுற்றிச் சுற்றி வந்து "போய் வா, பாக்ஸர், போய் வா" என்று விடை கொடுத்தனுப்பின.

"முட்டாள்கள்! முட்டாள்கள்!" என்று பெஞ்சமினும் குதித்துக் குதித்து வந்தது. தன் கால்களால் பூமியில் அறைந்தது, அது சொல்லிற்று: "முட்டாள்களே! வண்டியில் எழுதியிருப்பது உங்களுக்குத் தெரியவில்லையா?"

மிருகங்கள் சற்றுத் தயங்கின. ஒரு விநாடி மௌனம் நிலவியது. பிறகு முரியல் எழுத்துக் கூட்டி வண்டியில் எழுதியிருப்பதை வாசித்தது. அதை அந்தண்டை தள்ளிவிட்டு, பெஞ்சமின் அந்த மௌனத்திலே எல்லா மிருகங்களுடைய காதிலும் விழும்படியாக வாசித்தது.

"ஆல்பிரட் ஸிம்மண்ட்ஸ், குதிரைக் கொல்லி, பசை காய்ச்சுபவன். வில்லிங்டன், தோல்கள், எலும்பு வியாபாரி. நாய்க்குட்டிகளுக்கு மாமிசம் கிடைக்கும்" என்று படித்தது பெஞ்சமின். "புரியவில்லையா உங்களுக்கு. பாக்ஸரைக் குதிரைக் கொல்லி எடுத்துச் செல்கிறான், புரிந்ததா?"

மிருகங்கள் எல்லாம் இந்தக் கொடுமையை எண்ணிப் பயங்கரமாகக் கூச்சலிட்டன. அதே சமயம் வண்டிக்காரன் சாட்டையைச் சொடுக்கித் தன் வண்டியை ஓட்டத் தெடங்கினான். முற்றத்தை விட்டு வண்டி வேகமாக வெளியேறிற்று. எல்லா மிருகங்களும் உரக்கக்கத்திக் கொண்டு வண்டியைப் பின் தொடர்ந்தன. க்ளோவர் விழுந்தடித்துக் கொண்டு முன் வரிசைக்கு வந்தது. வண்டி வேகமாகப் போகத் தொடங்கியது. பருத்துவிட்ட க்ளோவர் வேகமாக ஓட முயன்றது. "பாக்ஸர், பாக்ஸர்" என்று கத்திக் கொண்டே ஓடியது. மூடிய வண்டியில் உயர இருந்த ஜன்னல் வழியாக இந்த சமயம் பாக்ஸரின் முகமும் அதன் நெற்றியிலுள்ள வெள்ளைக்கோடும் தெரிந்தன.

பலமான குரலில் க்ளோவர் கத்திற்று: "பாக்ஸர்! பாக்ஸர்! வெளியே வந்துவிடு, வந்துவிடு வெளியே! உன்னைக் கொல்ல அழைத்துப் போகிறார்கள்."

"வெளியே தப்பிவிடு பாக்ஸர்... தப்பிவிடு பாக்ஸர்" என்று எல்லா மிருகங்களுமாகச் சேர்ந்து இப்போது குரல் கொடுத்தன. ஆனால் வண்டி வேகமாக அவற்றை விட்டு முன்னேறி விட்டது. க்ளோவர் சொன்னதை பாக்ஸர் புரிந்து கொண்டதா என்பது சந்தேகம்தான். ஆனால் ஒரு

நிமிஷத்துக்குப் பின் அதன் முகம் ஜன்னலிலிருந்து மறைந்தது. வண்டியின் உட்பகுதியை பாக்ஸர் காலால் உதைத்துக் கொண்டிருக்கும் சத்தம் கேட்டது. சத்தந்தான் பெரிதாகக் கேட்டதே தவிர பலம் அதிகமில்லாத உதைகள் அவை. முன்மாதிரி பாக்ஸர் முழுத் தெம்புடனிருந்தால், சில உதைகளிலிலேயே அந்த வண்டியை நொறுக்கியிருக்கும்– நெருப்புப் பெட்டியை நசுக்குவது போல அது வண்டியையே நசுக்கியிருக்கும். ஆனால் பாவம்! அதன் கால்களிலே இப்போது பலமேயில்லை. சில நிமிஷங்களில் வண்டி நகர நகர பாக்ஸரின் உதைகளின் சப்தம்கூடக் குறைந்தது. மிருகங்கள் என்ன செய்வது என்றறியாமல் திகைத்தன. வேறு ஒன்றும் தோன்றாமல் போகவே, வண்டியை இழுத்துச் செல்லும் குதிரைகளைக் கெஞ்சின. "தோழர்களே! தோழர்களே!" என்று மிருகங்கள் கெஞ்சின. "உங்கள் சகோதரன் அது. எமலோகத்துக்கு அதை அழைத்துக்கொண்டு போகாதீர்கள்" என்று கத்தின. ஆனால் வண்டிக் குதிரைகள், முட்டாள்கள். கல்வியறிவற்ற மிருகங்கள், நடந்தது என்ன என்பதை அறியாத மாதிரியே வேகமாகப் போய்க் கொண்டிருந்தன.காதுகளை உயர்த்திக் கொண்டு இன்னும் வேகமாக ஓடின. அதற்கப்புறம் பாக்ஸரின் முகம் ஜன்னலில் தெரியவில்லை. வெளிக் கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டால் வண்டி மேலே போக முடியாதே என்று ஒரு மிருகத்துக்கு ஒரு யோசனை தோன்றியது. நல்ல யோசனைதான். ஆனால் கால தாமதமாகிவிட்டது. மிருகங்கள் போய்க் கதவைச் சாத்து முன் வண்டி கதவைத் தாண்டிப் போய்விட்டது பாக்ஸருடன். பாக்ஸரை மீண்டும் யாரும் பார்க்கவில்லை.

வில்லிங்டன் ஆஸ்பத்திரியில் பாக்ஸர் இறந்துவிட்டதாக மூன்று நாட்களுக்குப் பிறகு அறிவிக்கப்பட்டது. குதிரைக்கு எவ்வளவு சிறப்பாக வைத்தியம் செய்யலாமோ அவ்வளவு செய்தும் பாக்ஸர் பிழைக்கவில்லை என்றும் அறிவிக்கப்பட்டது. ஸ்க்வீலர் பன்றி வந்து இந்த விஷயத்தை எல்லா மிருகங்களுக்கும் தெரிவித்தது. பாக்ஸரின் கடைசி நிமிஷங்களில் தான் அதனுடன் இருந்ததாக அது சொல்லிற்று.

"அந்தக் காட்சியை என்னவென்று நான் சொல்வேன்? என் மனத்தை உருக்கிவிட்டது" என்றது ஸ்க்வீலர் ஒரு முன்னங்காலைத் தூக்கிக் கண்ணில் துளித்த நீரைத் துடைத்துக் கொண்டது. "கடைசியில் அது உயிர் விடும்போது நான் பக்கத்தில் இருந்தேன், கடைசி மூச்சுடன், பேசமுடியாமல் திணறிக் கொண்டே அது 'காற்றாடிக் கட்டிடம் முடியுமுன் போகிறேனே!' என்று சொல்லிக் கண்ணீர் வடித்தது. 'தோழர்களே முன்னேறுங்கள்!'

என்றது பாக்ஸர். 'புரட்சியின் பெயரால் முன்னேறுங்கள்!' மிருகங்கள் பண்ணை நீடூழி வாழ்க! தோழர் நெபோலியன் செய்ததே சரி!'' என்று கடைசி மூச்சுடன் கூறிவிட்டு உயிர் துறந்தது அது. அதுதான் பாக்ஸரின் கடைசி வார்த்தைகள்.''

இதைச் சொல்லிவிட்டு நடுவே கொஞ்சம் தயங்கியது ஸ்க்வீலர் பன்றி. அதனுடைய சிறிய கண்கள் அங்குமிங்கும் பாய்ந்து சந்தேகத்துடன் பார்த்தன. கொஞ்சநேரம் மௌனமாக இருந்து விட்டுத் தொடர்ந்தது அது.

பாக்ஸரை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லும்போது ஒரு அசட்டுத் தனமான வதந்தி, விஷமமான வதந்தி உலாவியதாக ஸ்க்வீலரின் காதில் விழுந்ததாம். சில மிருகங்கள் வண்டியின்மேல் ''குதிரைக் கொல்லி'' என்று எழுதியிருந்ததைத் தவறுதலாக நினைத்துக்கொண்டு விட்டன. பாக்ஸரைக் குதிரைக் கொல்லியிடம்தான் கொண்டு போகிறார்கள் என்று அவை எண்ணிவிட்டன. இப்படி இவ்வளவு முட்டாளாக எந்த மிருகத்தாலாவது எப்படி இருக்கமுடியும் என்பது தனக்குப் புரியவேயில்லை என்றது ஸ்க்வீலர். அங்குமிங்கும் குதித்துக் கொண்டு வாலை ஆட்டிக்கொண்டு, நமது தலைவரையும் அவர் மனப் போக்கையும் இன்னமுமா மிருகங்கள் தெரிந்து கொள்ளாதிருந்தன? தோழர் நெபோலியன், நமது தலைவர் அப்படியும் நடக்க விட்டுவிடுவாரா என்ன? ஆனால் அந்தத் தப்பபிப்பிராயத்தைச் சுலபமாகவே போக்கிவிட முடியும் என்றது ஸ்க்வீலர். அந்த வண்டி முதலில் ஒரு குதிரைக் கொல்லியின் வண்டியாக இருந்தது உண்மைதான். அதைப் புதுசாக வாங்கிய மிருக வைத்தியருக்குப் பெயரை அழித்து விட்டுப் புதுப் பெயரை எழுத சௌகரியப்படவில்லை. ஆகவேதான் மிருக வைத்தியரின் வண்டியை அறிவில்லாத மிருகங்கள் குதிரைக் கொல்லியின் வண்டி என்று எண்ணிக் கூக்குரலிட ஆரம்பித்துவிட்டன என்றது ஸ்க்வீலர்.

இதைக் கேட்டு மிகவும் அனுதாபமடைந்தன மிருகங்கள் எல்லாம். ஸ்க்வீலர் தொடர்ந்து பாக்ஸரின் கடைசி நிமிஷங்களைப் பற்றி உருக்கமாக விவரிக்கத் தொடங்கிவிடவே, மிருகங்களுக்குக் கொஞ்ச நஞ்சம் இருந்த சந்தேகங்களும் மறைந்து விட்டன. எவ்வளவு ஜாக்கிரதையாக டாக்டர்கள் பாக்ஸரைக் கவனித்துக் கொண்டார்கள் என்றும், விலையுயர்ந்த மருந்துகளை, விலை பற்றிக் கவலையே படாமல் நெபோலியன் உத்தரவின் பேரில், செலுத்தினார்கள் என்றும், வற்புறுத்தி உருக்கமாகப் பேசியது ஸ்க்வீலர். கடைசி சந்தேகங்களும் ஒழிய மிருகங்கள் துக்கத்திலும் ஒரு

திருப்தியடைந்தன. பாக்ஸர் கடைசி நிமிஷங்களை மிகவும் சௌகரியமாகக் கழித்தது என்கிற நம்பிக்கையில் சிறிது பெருமையும் திருப்தியும் அடைத்தார்கள்.

அடுத்த ஞாயிறன்று காலையில் கொட்டகையில் கூட்டம் கூடியபோது, நெபோலியனே மேடைமீது தோன்றி, பாக்ஸரின் ஞாபகார்த்தமாக ஒரு சிறிய சொற்பொழிவு நிகழ்த்தியது. பண்ணையிலே புதைத்த அதன் உடலைக் கொண்டுவர முடியவில்லையே என்று வருத்தம் தெரிவித்தது நெபோலியன். ஆனால் துக்கத்தைக் குறிக்கும் லாரல் இலைகளால் ஒரு அழகான ஹாரம் செய்யச் சொல்லி அதை பாக்ஸரின் கல்லறையிலே அணிவிக்கச் செய்திருப்பதாகச் சொல்லிற்று. சில நாட்களுக்குப் பிறகு பாக்ஸரின் ஞாப கார்த்தமாக ஒரு விருந்து நடத்துவது என்று பன்றிகள் தீர்மானித்திருப்பதாகச் சொல்லிற்று நெப்போலியன். பாக்ஸரின் இரண்டு ஸ்லோகங்களையும்– "நான் இன்னும் கடுமையாக வேலை செய்வேன்" என்பதையும், "நெபோலியன் சொல்லிவிட்டால் சரி" என்பதையும், மிருகங்களுக்கெல்லாம் கடைசியில் ஞாபகமூட்டியது நெபோலியன். பாக்ஸரின் ஞாபகார்த்தமாக அது காட்டிய வழியை, அதன் கொள்கைகளைப் பின்பற்றி நடந்து மிருகங்கள் எல்லாம் கௌரவிக்க வேண்டும் என்றது நெபோலியன். மிருகங்களுக்கும் இந்த இரண்டையும் விடச் சிறந்த ஸ்லோகங்கள் கிடைக்காது என்பது நிச்சய என்றது அது.

பன்றிகள் பாக்ஸர் ஞாபகார்த்தமாக விருந்து நடத்திய அன்று ஒரு வியாபாரிகள் வண்டி வந்து ஒரு பெரிய மரச் சட்டக் கூண்டை மிருகங்கள் பண்ணையில் கொணர்ந்து தந்தது. மிகவும் உல்லாசமாகப் பன்றிகள் விருந்துண்டு, உல்லாசமாகக் கூடிக் களித்துப் பாடுவது மிருகங்கள் பண்ணை பூராவும் கேட்டது. பாட்டு ஸ்தாயி ஏறியது. பின்னர் ஏதோ சண்டைச் சப்தம் கேட்டது. கடைசியாக, கண்ணாடிகள் விழுந்து நொறுங்குவது போன்ற சப்தம் கேட்டது. மறுநாள் மத்தியானம் பன்னிரண்டு மணிக்குமுன் பண்ணை வீட்டில் ஒரு பன்றிகூட எழுந்திருக்கவில்லை. எப்படியோ அந்தப் பன்றிகள் பணம் சேர்த்து இன்னொரு பீப்பாய் சாராயம் வாங்கி அருந்தி விருந்து கொண்டாடினார்கள் என்கிற செய்தி மிருகங்கள் பண்ணை பூராவிலும் அதிசீக்கிரமே பரவி விட்டது. ●

# 10

வருஷங்கள் சென்றன, பருவங்கள் வந்து வந்து போயின. மிருகங்களின் சொற்ப வாழ்க்கை ஓடிக் கழிந்த வண்ணமாயிருந்தது. நாளடைவில் க்ளோவர், பெஞ்சமின், மோஸஸ் என்கிற காகம், ஒரு சில பன்றிகள்—இவற்றைத் தவிர வேறு எந்த மிருகத்துக்குமே புரட்சிக்கு முந்திய மிருக உலகம் எப்படி இருந்தது என்பதே மறந்து விட்டது.

முரியல் இறந்து விட்டது. பிஞ்ச்பெல், ஜெஸ்ஸி, பிஞ்சர்—அவையும் இறந்து விட்டன. ஜோன்ஸ்கூட இறந்து விட்டான்— எங்கேயோ வெகு தூரத்துக்கப்பால் ஒரு குடிகார விடுதியிலே இறந்துவிட்டான் அவன். ஸ்நோபாலைப் பற்றி யாருக்குமே ஞாபகம் இல்லை. பாக்ஸரைப் பற்றிக் கூட எவ்வித ஞாபகமும் யாருக்கும் இல்லை— அதனுடன் நெருங்கிப் பழகிய ஒன்றிரண்டு மிருகங்களைத் தவிர. க்ளோவர் இப்போது நன்கு பெருத்துவிட்ட கிழட்டுக் குதிரை. அதனால் அதன் அங்கங்களைச் சரிவர அசைக்கக்கூட முடிவதில்லை. கண்களிலே எப்போதும் நீர் ஒழுகிக் கொண்டேயிருந்தது. ஓய்வு எடுத்துக் கொள்ள

வேண்டிய வயசைத் தாண்டி இரண்டு வருஷங்களாகி விட்டது. ஆனால் எந்த மிருகமும் ஓய்வு எடுத்துக்கொள்ள அனுமதிக்கப்படவில்லைவயதான மிருகங்களுக்காகப் பண்ணையில் ஒரு பகுதியை ஒதுக்கிவைப்பது என்ற பேச்சே இப்போதெல்லாம் யார் காதிலும் விழுவதில்லை. நெபோலியன் இப்போது சரியான பருவமடைந்து விட்டது: முந்நூற்றிருபது பவுண்டு கனம் இருந்தது. ஸ்க்வீலர் பருத்த பருமனால் அதன் கண்களைக் கூடச் சதை மூடியிருந்தது– சிரமப்பட்டுத்தான் அது கண்களைத் திறந்து எதையும் பார்க்க முடிந்தது. கிழட்டு பெஞ்சமின் மட்டுமே எப்போதும் போல இருந்தது. முகத்தில் கொஞ்சம் அதிகமாக வெள்ளை வைத்திருந்த மாதிரியிருந்தது – மற்றபடி அது மாறவேயில்லை. பாக்ஸரின் சாவுக்குப்பின் முன்னையும் விட குறைவாகப் பேசிற்று அது. வாய் திறவாமலும் ஆத்திரத்துடன் இருப்பது போலவும் இருந்தது அது.

பண்ணையிலே ஏராளமான மிருகங்கள் இருந்தன இப்போது. எனினும் பிரஜா உற்பத்தி விகிதம் ஆரம்ப நாட்களில் எதிர்பார்த்தமாதிரி இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். புதுசாகப் பிடித்த பல மிருகங்களுக்கு புரட்சி என்பதே மங்கியதோர் பண்டைக் காலத்துச் செய்தியும் மரபும்தான் என்று சொல்லவேண்டும். மிருகங்கள் சொல்லிச் சொல்லிக் கேட்ட செய்தி அது. வெளியிடங்களிலிருந்து வாங்கிக் கொணரப்பட்ட சில மிருகங்களுக்குப் புரட்சிச் செய்தியே மிகவும் புதுமையான ஒரு விஷயமாக இருந்தது. க்ளோவரைத் தவிர இன்னும் மூன்று குதிரைகள் பண்ணையில் இப்போது இருந்தன. நேர்த்தியான நிமிர்ந்து நிற்கும் மிருகங்கள் அவை; வேலை செய்வதில் சளைப்பதில்லை; ஆனால் பரம முட்டாள்கள். இரண்டாவது எழுத்துக்குமேல் அவற்றால் எழுத்துக்களை கற்றுக்கொள்ளக் கூட இயலவில்லை. புரட்சியைப் பற்றியும் மிருக தத்துவம் பற்றியும் யார் சொன்னதையும் அவை நம்பத் தயாராக இருந்தன. க்ளோவர் எது சொன்னனாலும் அவை அதை அங்கீகரித்தன. தகப்பனாரை நேசித்து அவருக்கு மரியாதையாக நடந்து கொள்வதுபோல அவை க்ளோவரை நேசித்து அதற்கு மரியாதையாக நடந்து கொண்டன. ஆனால் க்ளோவர் புரட்சியைப் பற்றிச் சொன்னதில் பெரும் பகுதியும் அவற்றிற்குப் புரியவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

பண்ணையிலே ஏராளமாக விளைந்தது; பணக்காரப் பண்ணைதான். நேர்மையாகவும் அது நிர்வகிக்கப்பட்டு வந்தது. சரியான முறையைக் கையாண்டு நடந்த பண்ணை அது. மிஸ்டர் பில்கிங்டனிடமிருந்து இரண்டு

வயல்களை விலைக்கு வாங்கி, பண்ணை இப்போது விஸ்தரிக்கப் பட்டிருந்தது. கடைசியில் காற்றாடி யந்திரமும் ஒரு வழியாகக் கட்டி வெற்றிகரமாக முடிந்தது. தானியம் அடிக்கும் யந்திரமும், வைக்கோல் தூக்கிப் போகும் யந்திரமும் பண்ணைக்கே சொந்தமாக வாங்கப்பட்டு விட்டன. பண்ணையிலே புதுக் கட்டிடங்கள் பல தோன்றிவிட்டன. விம்பர் ஒரு ரேக்ளா வண்டி வாங்கிவிட்டான். ஆனால் காற்றாடி யந்திரம் மின்சார உற்பத்திக்கு உபயோகப்பட வில்லை. தானியங்கள் அரைக்கும் யந்திரத்தை ஓட்டத்தான் உபயோகப்பட்டது காற்றாடி. ஆனால் மாவு அரைப்பதால் சற்று அதிகமாகவே பண்ணைக்குப் பணம் வந்தது. மிருகங்கள் எல்லாம் சிரமப்பட்டு இப்போது இன்னொரு காற்றாடி யந்திரக் கட்டிடம் கட்டுவதில் முனைந்திருக்கிறார்கள். அது கட்டி முடிந்தவுடன் பண்ணையிலே மின்சார சக்தி தோன்றிவிடும் என்று சொல்லிக் கொள்ளப்பட்டது. லாயங்களில் மின்சார விளக்குகள், சுடு தண்ணீர், வாரத்தில் மூன்றுநாள் வேலை என்றெல்லாம் கனவு காண மிருகங்களுக்குச் சொல்லித்தந்த ஸ்நோபாலுடன் அந்தப் பேச்சுகளும் ஒரு வழியாக மறைந்துவிட்டன. மிருக தத்துவத்துக்கு எதிரான கருத்துக்கள் அவையெல்லாம் என்று நெபோலியன் ஐயந்திரிபறக் கூறிவிட்டது, உண்மையான இன்பம் என்பது, மிருகங்களைப் பற்றிய மட்டில், கடினமாக வேலை செய்து செட்டாக வாழ்வதில் தான் இருக்கிறது என்று நெபோலியன் சொல்லி விட்டது.

எப்படியோ பண்ணை பணக்காரப் பண்ணையாகி விட்டது. ஆனால் அதனால் மிருகங்கள் எந்த விதத்திலும் பணக்காரர்களாகி விடவில்லை,– அதாவது பன்றிகளையும் வேட்டை நாய்களையும் தவிர வேறு எந்த மிருகத்துக்கும் பணம் சேர்ந்துவிட வில்லை. இதற்குக் காரணம் பன்றிகளும் நாய்களும் பண்ணையிலே அதிகமாக இருந்ததனால்தான் என்று வேண்டுமானால் சொல்லலாம். அந்தப் பன்றிகளும் நாய்களும் கூட, அதனதன் தருமப்படி, உழைக்காமல் இல்லை! பண்ணை மேற்பார்வை பார்ப்பதும், நிர்வகிப்பதும் மிகவும் சிரமமான காரியங்கள் அல்லவா என்று ஸ்க்வீலர் அடிக்கடி கேட்கும். மற்ற மிருகங்கள் புரிந்து கொள்ள முடியாத உழைப்பு அது என்பது தான் அதில் விசேஷம். உதாரணமாக ஸ்க்வீலர் பன்றி ஒரு நாள் சொல்லிற்று: மிகவும் ரகசியமான பல பைல்கள், அறிக்கைகள். குறிப்புகள், முதலியவற்றைச் சேகரிக்கச் சில மிருகங்கள் ஓயாமல் ஒழியாமல் உழைக்க வேண்டியதாக இருந்தது. இந்த வார்த்தைகளே புரியாத சாமான்ய மிருகங்களுக்கு விஷயம் எப்படிப் புரியும்? ஒவ்வொரு நாளும் மிகவும்

சிரமப்பட்டுச் சம்பாதித்த இவ்வளவும் கடிதங்களில் விடாமல் எழுதி, கடிதம் நிரம்பியதும் யார் கையிலும் அதெல்லாம் அகப்பட்டுவிடாமல் அடுப்பில் போட்டு எரித்தாக வேண்டும். பண்ணையின் நலனே இதை நம்பித்தான் இருந்தது என்று சொல்லிற்று ஸ்க்வீலர், ஆனாலும், இந்தப் பன்றிகளோ நாய்களோ உணவு எதையும் உற்பத்தி செய்வதில்லை என்பது உண்மை தான். அவற்றின் பசி மட்டும் அபாரமாக இருந்தது என்றும் தான் சொல்ல வேண்டும்.

மற்ற மிருகங்களைப் பற்றிய வரையில் சொல்ல வேண்டுமானால் அவற்றின் வாழ்க்கை எப்போதும் போலவேதான் இருந்தது. எப்போதும் அரைப்பட்டினிதான்: எப்போதும் அதே வைக்கோல் படுக்கைதான்; எப்போதும் குடிக்கும் தண்ணீர் அந்தக் குட்டையில் இருப்பதுதான்; எப்போதுமே வயலில் ஓயாத உழைப்புத்தான். மாரிக் காலத்தில் குளிரால் நடுங்கவேண்டும்; கோடைக்காலத்தில் ஈக்கள் உபத்திரவம் செய்யும். இப்போது இருந்ததைவிட ஜோன்ஸ் அடித்து விரட்டப்பட்ட பின், புரட்சியின் முதல் சில வருஷங்களிலாவது நிலைமை சிறப்பாக, உயர்வாக இருந்ததா என்று சில மிருகங்கள் ஞாபகப்படுத்திப் பார்க்க முயன்று தங்கள் மண்டைகளை உடைத்துக் கொண்டன. தீர்மானமாக அவற்றிற்கு எதுவும் சொல்லும்படியாக ஞாபகம் இல்லை. அவற்றினுடைய இன்றைய வாழ்வை எதனுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது என்று அவற்றிற்குத் தெரியவில்லை; ஒப்பிடக்கூடியதாக ஒன்றும் இருந்ததில்லை என்றுதான் தோன்றிற்று, ஸ்க்வீலரின் புள்ளிக் கணக்குகள் நாளுக்கு நாள் நிலைமை சீரடைந்து மேன்மையடைந்திருக்கிறதாகத்தான் நிரூபித்தன. முடிவில்லாத பிரச்னையாகவும், விடையற்ற புதிராகவும்தான் இதெல்லாம் மிருகங்களுக்குத் தோன்றின. அது எப்படியானாலும் பிரச்னையைப் பற்றிச் சிந்திக்கவோ, புதிருக்கு யோசனை செய்து விடை காணவோ மிருகங்களுக்கு இப்போது நேரமேயில்லை. கிழட்டு பெஞ்சமின் மட்டும் தான் எல்லாவற்றையும் நினைவிலிருத்திக் கொண்டதாகச் சொல்லிக் கொண்டது. நீண்ட வாழ்க்கையின் அனுபவத்தில் எதுவும் எப்படியும் சீரடைந்து விடுவதுமில்லை. எப்படியும் மோசமாகிவிடுவதுமில்லை. அநேகமாக சற்றேக்குறைய ஒரே மாதிரியாகத் தான் எல்லா விஷயங்களும் எப்போதுமே இருந்து வருகின்றன என்று அபிப்பிராயப்பட்டது பெஞ்சமின். பசி, கஷ்டம், ஏமாற்றம் எல்லாம் அதி உச்சமும் அடைவதில்லை– அதிகமாகக் குறைந்துவிடுவதுமில்லை– இதுதான் மாறாத இயற்கை நியதி என்றது பெஞ்சமின்.

இருந்தும் மிருகங்கள் நம்பிக்கை இழக்கவில்லை, அது மட்டுமல்ல, சுதந்தர மிருகங்களாக, மிருகங்கள் பண்ணையின் பிரஜைகளாக இருப்பதிலே அவை கௌரவமும், பெருமையும் பாராட்டிக் கொண்டன. அந்த உணர்ச்சியை அவை என்றும் இழந்துவிடவில்லை, நாட்டிலே, இங்கிலாந்து தேசத்திலே, அந்தப் பண்ணை ஒன்று தான் இம்மாதிரி சரித்திரப் பிரசித்தி பெற்ற பண்ணை. மிருகங்களால் நிர்வகித்து வரப்படும் பண்ணை அது ஒன்றேதான் உண்டு. இதைப் பற்றி அவை பெருமையும் ஆச்சரியமும் கொண்டதில் தவறு ஒன்றுமில்லையே! புரட்சிக் காலத்திய மிருகங்களும் அவற்றின் பிரஜைகளும் மட்டுமல்ல; இருபது மைல்களுக்கப்பாலுள்ள வெளிப் பண்ணைகளிலிருந்து வாங்கப்பட்டு, வந்து சேர்ந்து கொண்ட மிருகங்களும் கூட இந்த விஷயம் பற்றிப் பெருமை பாராட்டிக் கொண்டன. துப்பாக்கி வேட்டுத் தீர்க்கும் விழாவின் போதும், கொடி மரத்தின் உச்சியிலே பச்சைக் கொடி பறக்கும் போதும் அழியாத பெருமையுடன் அவற்றின் மார்பகம் விம்மிற்று. அவற்றின் நடை நிமிர்ந்தது. அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் அவற்றின் பேச்சு பழைய வீரதீரச் செயல்கள் நிறைந்த நாட்களைப் பற்றித் திரும்பும், ஜோன்ஸைப் பண்ணையிலிருந்து விரட்டியது, ஏழு மிருக விதிகளையும் எழுதியது, மனிதர்கள் படையெடுத்து வந்ததை மிருகங்கள் சமாளித்து வெற்றி கொண்டது எல்லாம் பற்றி விரிவாகப் பேசப்படும். பழைய கனவுகளில் எதுவும் அடியோடு இன்னமும் அழிந்துவிடவில்லை. கிழட்டு மேஜர் ஒரு காலத்தில் கனவாகக்கண்டு சொன்ன அந்த லக்ஷிய பூமி, மனிதன் காலடிபடாத இங்கிலாந்து, மிருகங்கள் கைக்கு ஒரு நாள் பூரணமாகக் குடியரசாக வந்துவிடும் என்றுதான் மிருகங்கள் நம்பின. என்றாவது ஒரு நாள் வரும்; சமீபத்தில், அவற்றின் வாழ்நாளிலே வராவிட்டாலும், என்றாவது ஒரு நாள் வந்தே தீரும் அது. அங்கும் இங்கும் ரகசியத்தில் மிருகங்கள் இன்னமும் இங்கிலாந்தின் மிருகங்கள் பாட்டைக் கற்றுக் கொண்டு மனத்திற்குள் பாடிக்கொண்டன. இரைந்து பாடினால் ஆபத்து– எந்த மிருகமும் துணிந்து பாடாது எனினும், பாட்டு மட்டும் எல்லா மிருகங்களுக்கும் நன்கு தெரியும், அவற்றின் வாழ்க்கை கஷ்டமாகத்தான் இருந்தது; அவற்றின் நம்பிக்கைகள் எல்லாமே நிறைவேறவில்லை, எனினும் அவையும் உலகிலுள்ள மற்ற மிருகங்கள் போல இல்லை. இந்தப் பிரக்ஞை அவற்றிற்குப் பூரணமாக இருந்தது, அவை பட்டினி கிடந்தால், அதற்குக் காரணம் கொடுங்கோலர்களாகிய மனிதர்கள் அவற்றின் உணவைப் பறித்துக் கொண்டதாலல்ல என்பது நிச்சயம்! வேலை கடுமைதான்– ஆனால் அவை தங்களினத்தாருக்காகவே– உழைத்தார்கள்– வேறு

மனிதன் யாருக்காகவும் அல்ல, அந்த மிருகங்களில் யாரும் இரண்டு காலால் நடப்பவர்கள் அல்ல. ஒரு மிருகமும் வேறுயாரையும் 'யசமான்' என்று அங்கு அழைப்பதில்லை. எல்லா மிருகங்களுமே சரிநிகர் சமானமானவை.

ஒரு நாள், கோடையின் ஆரம்ப காலத்தில், ஸ்க்வீலர் பன்றி ஆடுகளை எல்லாம் தன்னுடன் வரும்படி உத்தரவிட்டது. பண்ணையின் ஒரு கோடியிலிருந்த ஒரு உபயோகப்படாத வயலில், புதர்கள் அடர்ந்திருந்த ஒரு பகுதிக்கு அவற்றை அழைத்துச் சென்றது, அன்று பூராவும் ஸ்க்வீலர் மேல் பார்வையில் ஆடுகளெல்லாம் அந்த வயிலிலேயே தங்கிவிட்டன. இலை தழைகளைச் சாப்பிட்டுக் கொண்டிருந்துவிட்டன. மாலையின் ஸ்க்வீலர் மட்டும் பண்ணை வீட்டுக்குத் திரும்பிவிட்டது. ஆடுகள் அங்கேயே தங்கிவிட்டன. சீதோஷ்ணமும் வெளியே தங்குவதற்கு சௌகரியமாக இருந்தது. ஒருவாரம் பூராவும் ஆடுகள் மட்டும் தனியாக கோடி வயலிலே தங்கின. மற்ற மிருகங்கள் கண்ணில் படாமலே அவை தங்கின. ஒவ்வொரு நாளும் பகற்பொழுதில் பெரும்பகுதியை ஆடுகளுடனேயே கழித்தது. தனியாக ஆடுகளுக்குப் புதுப்பாட்டு ஒன்று கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்ததாகவும், அந்த வேலை முடிகிறவரையில் ஆடுகளை மற்ற மிருகங்கள் அணுகக்கூடாது என்றும் சொல்லிற்று ஸ்க்வீலர்.

ஆடுகள் திரும்பிய பின் ஒருநாள் மனோகரமான மாலை வேளையில், மிருகங்கள் எல்லாம் தங்கள் வேலைகளை முடித்துக் கொண்டு பண்ணை வீட்டுப் பக்கம் போய்க் கொண்டிருக்கும்போது, பயங்கரமான ஒரு கனைப்புச் சப்தம் கேட்டு அவை பயந்தன. முற்றத்திலிருந்து கேட்ட அந்தப் பயந்த குரலைக்கேட்டு அங்கே சென்று நின்று பார்த்தன. கனைத்தது க்ளோவர்தான், மறுபடியும் கனைத்தது அது, முற்றத்திலே ஓடிப்போய்ப் பார்த்ததும் க்ளோவரை பயமுறுத்திக் கனைக்கச் செய்த காட்சியை மற்ற மிருகங்களும் கண்டன.

ஒரு பன்றி நிமிர்ந்து தன் இரண்டு பின்னங்கால்களால் நடந்து கொண்டிருந்தது.

ஆம், அப்படிச் செய்து கொண்டிருந்தது ஸ்க்வீலர் பன்றியேதான். அப்படி அந்தப் பெரிய உருவத்தைச் சமாளித்துப் பழகாத காரணத்தால் ஸ்க்வீலர் தட்டுத் தடுமாறிக் கொண்டே நடந்தது. மற்ற மிருகங்களைக் கவனிக்காத மாதிரியே உல்லாசமாக நடைபோட்டது.ஒரு நிமிஷம் கழித்து, பண்ணை வீட்டுக் கதவைத் தாண்டிக் கொண்டு வரிசையாகப் பன்றிகள்

வந்தன. ஒவ்வொன்றும் நிமிர்ந்து பின்னங்கால்களால் நடந்துவந்தன. சில பன்றிகள் இப்படி நடப்பதில் சாமர்த்தியமாக நடந்தன. சில தடுமாறின. பழக்கம் போதாத தோஷம் ஒரு சில குட்டிக் கரணம் போட்டுவிடும் போல இருந்தது. ஒரு சில கையில் கழியிருந்தால் ஊன்றிக் கொள்ளலாமே என்று நினைப்பதுபோல இருந்தது. ஆனால் ஒவ்வொரு பன்றியும் இரண்டு கால்களால் நடந்தே முற்றத்தை ஒரு தரமாவது சுற்றி வந்தது. கடைசியில் வேட்டை நாய்களின் குறைப்புச் சப்தம் கேட்டது. சேவற் கோழி கூவிவர, நெபோலியனே வெளியே வந்தது, அதுவும் நிமிர்ந்து கம்பீரமாக, ராஜபார்வை பார்த்துக்கொண்டு, ராஜ நடை போட்டுக்கொண்டு இரண்டு கால்களால் நடந்தது. கர்வப் பார்வை பார்த்துக்கொண்டு அது நடந்தது சிறப்பாகத்தான் இருந்தது. நாய்கள் கூடவே குரைத்துக் கொண்டு வந்தன.

நெபோலியனின் கையில் ஒரு சாட்டையும் இருந்தது.

ஒரு விநாடி பூரணமான, பயங்கரமான மௌனம் நிலவியது அங்கே. ஆச்சரியம், பயம் என்கிற உணர்ச்சிகள் வசப்பட்டவையாக மிருகங்கள் ஒன்றையொன்று நெருக்கி யடித்துக்கொண்டு நின்றன. பன்றிகள் இரண்டு கால்களால் நடந்து முற்றத்தில் குறுக்கும் நெடுக்கும் போவதைக் கவனித்தன. உலகமே தலைகீழாகக் கவிழ்ந்து விட்ட மாதிரி அந்த மிருகங்களுக்குத் தோன்றிற்று. முதலில் உண்டான பயமும், அதிர்ச்சியும் தெளிந்தது. அந்த நிமிஷத்தில் அவை– நாய்களிடம் தங்களுக்கிருந்த பயத்தையும் பொருட்படுத்தாமல், வழக்க பேதத்தையும் மறந்துவிட்டு, குறைசொல்லாமல், குற்றம் சொல்லாமல் வாழ்ந்து வந்த வாழ்வுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு நெபோலியனையும் அதன் பன்றி இனத்தவரையும் பற்றித் தங்கள் மனத்திலிருந்ததைச் சொல்லி ஒரு வார்த்தை எதிர்த்துச் சொல்லியிருக்கும் தருவாயில் இருந்தன மிருகங்கள். ஆனால் அந்தச் சமயம் பார்த்து, ஏதோ யாரோ சைகை காட்டி அவற்றைத் தூண்டிவிட்ட மாதிரி, ஆடுகள் உரத்த குரலில் புதுப்பாட்டைப் பாடத் தொடங்கின.

''நாலு கால் நல்லது; இரண்டு கால் மிகவும் நல்லது. நாலுகால் நல்லது; இரண்டு கால் மிகவும் நல்லது. நாலு கால் நல்லது! இரண்டு கால் மிகவும் நல்லது.''

இந்தப் பாட்டை ஐந்து நிமிஷங்கள் பாடின– ஒரு விநாடி கூட ஆடுகள் ஓயவில்லை. அதற்குப் பிறகு ஆடுகள் ஓய்ந்துவிட்டன. ஆனால் மற்ற

மிருகங்கள் எதிர்த்து எதுவும் சொல்ல வேண்டும் என்கிற எண்ணத்தைக் கைவிட்டு விட்டன.எண்ணத்தைக் கைவிட்டனவோ இல்லையோ– அவை வாயைத் திறக்கு முன்னரே பன்றிகள் எல்லாம் வீட்டுக்குள் போய்விட்டன.

தன் தோட்பட்டையில் யாரோ மூக்கை வைத்துத் தேய்ப்பதை உணர்ந்தது பெஞ்சமின். வேறு யாருமில்லை கிழட்டு க்ளோவர்தான். அதன் கண்கள் எப்போதையும் விட அதிகமாக மங்கியிருந்தன. எதுவும் சொல்லாமல், பெஞ்சமினின் பிடரி மயிரை வாயால் கவ்வி இழுத்தது க்ளோவர். பெரிய கொட்டகையில் மிருக விதிகள் ஏழும் எழுதப்பட்டிருந்த சுவரண்டை போய் நின்றன. இரண்டு மிருகங்களும், கருப்புத்தார் அடித்து, வெள்ளை எழுத்துக்கள் எழுதியிருந்த சுவரைப் பார்த்துக் கொண்டே சில விநாடிகள் நின்றன.

கடைசியில் க்ளோவர் சொல்லிற்று: "என் கண் சரியாகத் தெரியவில்லை, வாலிபத்தில் கூட எனக்குச் சுவரில் எழுதியிருந்ததைச் சரியாகப் படிக்கவராது– இப்போது எப்படிப் படிக்கப்போகிறேன்? இப்போது இந்தச் சுவரே கொஞ்சம் மாறியிருக்கிற மாதிரி எனக்குத் தோன்றுகிறது. நீ பார்த்துச் சொல், பெஞ்சமின்! அந்த ஏழு மிருக விதிகளும் அப்படியேதான் இருக்கின்றனவா? அல்லது மாறிவிட்டனவா? சொல்."

வாழ்க்கையில் முதல் தடவையாக தன் விதிகளில் ஒன்றை மீறத் தயாராக இருந்தது பெஞ்சமின். சுவரில் எழுதியிருந்ததை அது க்ளோவருக்கு வாசித்துக் காட்டச் சம்மதித்தது. இப்போது சுவரில் ஒரே ஒரு விதிதான் எழுதப்பட்டிருந்தது. பெஞ்சமின் வாசித்தது:

எல்லா மிருகங்களும் சரிசமானமானவை. ஆனால் சில மிருகங்கள் வேறு சில மிருகங்களைவிட அதிகமாக சரி சமானமானவை.

இதற்குப் பிறகு மறுநாள் காலையில் முன்னங்காலால் சாட்டையைத் தூக்கிக்கொண்டு பன்றிகள் பண்ணை வேலையை மேற்பார்வை செய்ய இரண்டு காலால் நடந்து வந்தபோது, அது ஒன்றும் அதிசயமாகத் தோன்றவில்லை. பன்றிகள் ஒரு ரேடியோ வாங்கி வைத்திருந்தன பண்ணை வீட்டிலே என்பதும், அங்கே டெலிபோன் வைக்க முயற்சி செய்யப்படுகிறது என்றும், 'ஜான்புல்', 'டிட்பிட்ஸ்', 'தினக்கண்ணாடி' முதலிய பத்திரிகைகளுக்குச் சந்தா கட்டியாகிவிட்டது என்றும் கேள்விப்பட்ட மிருகங்கள் அதுபற்றி அதிசயிக்க ஒன்றும் அவசியம் இருந்ததாக

நினைக்கவில்லை. நெபோலியன் பண்ணை வீட்டுத் தோட்டத்திலே வாய்க்கிடுக்கில் ஒரு சுங்கானைக் கவ்விப் புகைவிட்டுக் கொண்டு குறுக்கும் நெடுக்கும் நடந்ததைப் பார்த்த மிருகங்கள் அதை அதிசயம் என்று பாராட்டப்படவேண்டிய காட்சி என்று கருதவில்லை. ஜோன்ஸ் வைத்துவிட்டுப்போன துணிகளையும் எடுத்து அணிந்து கொண்டு காட்சியளிக்கத் தொடங்கின பன்றிகள். கருப்புக்கோட்டு, சிவந்த எலிபிடிக்கும் சராய் தோல்வார் இவற்றுடன் நெபோலியன் தோன்றியபோதும் மிருகங்கள் எதுவும் சொல்லவில்லை. நெபோலியனுக்கு மிகவும் வேண்டிய பெண் பன்றி மிஸ்ஸிஸ். ஜோன்ஸின் பூப்போட்ட கௌனை அணிந்துகொண்டு அதனுடன் தோட்டத்தில் உலாவியதைக் கண்ட மிருகங்கள் பேசாமல்தான் இருந்தன.

ஒருவாரங்கழித்து, மாலைநேரத்தில், மிருகங்கள் பண்ணைக்குப் பல விருந்தாளிகள் வந்தார்கள். ரேக்ளா வண்டிகளில் பல மனிதர்கள் வந்தார்கள். பக்கத்துப் பண்ணைகளிலிருந்தெல்லாம் ஆசாமிகள் வந்தார்கள்– இந்தப் பண்ணை எப்படி நிர்வாகிக்கப்படுகிறது என்று பார்ப்பதற்காக, பண்ணை பூராவும் வந்தவர்களுக்குக் காட்டப்பட்டது. எல்லாவற்றையும் அவர்கள் ரொம்ப பாராட்டினார்கள். காற்றாடியைப்பற்றி விசேஷமாக சிலாகித்துக் கொண்டார்கள். அந்தச் சமயம் மிருகங்களெல்லாம் டர்ணிப் வயலில் களைபிடுங்கிக் கொண்டிருந்தன. சுறுசுறுப்பாக அவை வேலைசெய்தன. நிமிர்ந்தோ திரும்பியோ பாராமல் தலை குனிந்தபடி வேலையில் ஈடுபட்டிருந்தன. பன்றிகளைப் பற்றிப் பயப்படுவதா, அல்லது வந்திருந்த மனிதர்களைப் பற்றிப் பயப்படுவதா என்று அவற்றிற்குத் தெரியவில்லை.

இருட்டியபின் பண்ணைவீட்டிருந்து உரக்கச் சிரிப்பும், பாட்டும், கூத்தும் கேளிக்கையும் மற்ற மிருகங்களின் காதுகளை எட்டின. மனிதக் குரலும் பன்றிகளுடைய குரலும் கலந்து கேட்கவே அங்கு என்னதான் நடக்கிறது என்று பார்க்கவேண்டும் என்கிற ஆவல் மிருகங்களுக்கு மிகுந்தது. மிருகங்களும் மனிதர்களும் சரிசமமாகப் பழக ஆரம்பித்திருக்கிறார்களே – என்ன நிகழும் அங்கே? ஒரு முகமாக சந்தடி செய்யாமல் அவை பண்ணை வீட்டுத் தோட்டத்திற்குள் புகுந்து மெதுவாகச் சென்றன.

கதவண்டை நின்று அவை கொஞ்சம் தயங்கின. பயமாகத்தான் இருந்தது. எனினும் க்ளோவர் முன்னால் செல்லவே மற்ற மிருகங்களும் பின்

தொடர்ந்தன. வீட்டு வரைபோய், ஜன்னல் வழியாக உள்ளே பார்த்தன. அங்கே, பெரிய நீண்ட மேஜையைச் சுற்றி ஆறேழு குடியானவர்களும், ஆறேழு உயர்ந்த பதவி வகித்த பன்றிகளும் உட்கார்ந்திருந்தன. நெபோலியன் மேஜையின் தலைமாட்டில் உட்கார்ந்து தலைமை வகித்தது. நாற்காலிகளில் உட்கார்ந்திருந்த பன்றிகள் பழகியவைபோல சௌகரியமாகத்தான் உட்கார்ந்திருந்தன. எல்லோருமாகச் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். இப்போது ஆட்டத்தை நிறுத்திவிட்டு, ஒருதரம் குடிப்பதற்குத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். மனிதர்கள் வழக்கப்படி ஒரு "டோஸ்ட்" குடிக்கத் தயாராகிக் கொண்டிருந்தனர். மனிதர்களுடன் பன்றிகளும், ஒரு பெரிய ஜாடி பீர் கைக்குக் கை மாறியது. ஒவ்வொருவர் முன்னாலேயுமிருந்த கிண்ணங்களில் பீர் நிரம்பி இருந்தன. ஜன்னலில் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டு நின்ற மிருகங்களைப் பன்றிகளோ குடியானவர்களோ கவனிக்கவேயில்லை.

கையில் பீர் கிண்ணத்துடன் பாக்ஸ்வுட் பண்ணை முதலாளி மிஸ்டர் பில்கிங்டன் எழுந்து நின்றான். ஒரு நிமிஷத்தில் அவன் விருந்தாளிகளையும் வீட்டுக்காரர்களையும் ஒரு "டோஸ்ட்" குடிக்கச் சொல்லுவான். அதற்கு முன் அவன் சில வார்த்தைகள் எடுத்துச் சொல்ல வேண்டியது தன் கடமை என்று அவன் எண்ணினான்.

தனக்கும் – அங்கு கூடியிருந்த சகலருக்கும்– இது மிகவும் திருப்தி தருகிற ஒரு விஷயம் என்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் என்றான் அவன். நெடுநாளாக மிருகங்கள் பண்ணைக்கும் மற்றப் பண்ணைகளுக்கும் இடையேயிருந்த அவநம்பிக்கை, தப்பபிப்பிராயம் இப்போது மறைந்துவிட்டது பற்றித் திருப்திப்படலாம். ஒரு காலத்தில் மிருகங்கள் பண்ணையின் நிர்வாகிகளை, பக்கத்துப் பண்ணைக்காரர்களான மனிதர்கள், அகௌரதையும் அவமரியாதையும், விரோதம் என்று சொல்லாவிட்டாலும் நட்பில்லாமலும் நடத்தினார்கள். அந்தக் கோஷ்டியில் தானில்லை என்று விளக்கினான் பில்கிங்டன். துரதிருஷ்டவசமான சில சம்பவங்கள் நடந்துவிட்டன. சில தவறான சிந்தனைகள் வதந்திகளாகப் பரவி விட்டன. பன்றிக்குச் சொந்தமான பன்றிகளால் நிர்வகிக்கப்பட்ட பண்ணையாவது, சரியாக நடக்கவாவது என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். அது இயற்கைக்கே விரோதமானது என்று நினைத்தார்கள். மற்ற பண்ணை முறைகளை அது கவிழ்த்துவிடலாம் என்று மற்றவர்கள் பயப்பட்டார்கள். சரியாக விசாரிக்காமல் பலரும் மிருகங்கள்

பண்ணையில் அடக்க மின்மையும் ஆபாசங்களும் நிறைந்திருந்தன என்று முடிவு கட்டிவிட்டார்கள். தங்கள் மிருகங்களைப் பக்கத்துப் பண்ணையின் மிருகங்களின் நடவடிக்கைகள் எப்படிப் பாதிக்குமோ என்று அவர்கள் பயந்தார்கள். ஆனால் இப்படிப்பட்ட சந்தேகங்கள் எல்லாம் இப்போது தீர்ந்துவிட்டன. இன்று தானும் தன் நண்பர்களும் வந்து மிருகங்கள் பண்ணையைப் பார்த்த பிறகு இந்த மாதிரி சந்தேகங்களுக்கெல்லாம் இனி இடமே கிடையாது என்பது தெளிவாகிவிட்டது. மிகவும் நவீனமான முறையில் இயங்கியது பண்ணை: அடக்கமும் உழைப்பும் எங்கும் தலை காட்டின. மற்ற பண்ணைகள் இந்தப் பண்ணையின் வழிகளைப் பின்பற்றுவது சாலவும் சிறந்ததாகும். இட்ட வேலையை மிருகங்கள் பண்ணை மிருகங்கள் செய்ததுபோல,எந்தப் பண்ணையிலும் எந்த மிருகங்களும் எப்போதுமே வேலை செய்தது கிடையாது என்றான் பில்கிங்டன். வேலையும் நன்றாகச் செய்தன– உணவும் குறைவாகவே பெற்றுக்கொண்டன இந்த மிருகங்கள், மற்ற இடங்களில் பார்க்கும் போது; உணவு ஒன்றில் பாதி; உழைப்பு ஒன்றுக்கிரண்டு என்றுதான் சொல்லவேண்டும். உடனடியாகத் தங்கள் பண்ணையில் செய்யவேண்டிய சீர்திருத்தங்கள் சிலவற்றைத் தானும் தன் நண்பர்களும் மிருகங்கள் பண்ணையிலிருந்து கற்றுப்போவதாகச் சொன்னான் பில்கிங்டன்.

தன் பிரசங்கத்தை முடிக்கு முன், கடைசி வார்த்தைகளில் ஒரு விஷயத்தை வற்புறுத்த விரும்பினான் பில்கிங்டன். மிருகங்கள் பண்ணைக்கும், அயலில் உள்ள பண்ணைகளுக்கும் இடையே நட்புறவு நீடிக்கலாம்–நீடிக்க வேண்டியது மிகமிக அவசியம் என்று சொன்னான். மனிதர்களும் பன்றிகளும் எதிரிகளாகத்தான் இருக்கவேண்டும் என்கிற அவசியமே கிடையாது. அவர்கறது போராட்டங்களும், லக்ஷியங்களும், முறைகளும் ஒரே மாதிரியானவைதான். தொழில் கஷ்டங்கள் எல்லோருக்கும் உள்ளவைதானே? கூலி வேலைக் கஷ்டங்கள் பொதுவானவை தான். மிஸ்டர் பில்கிங்டன் சொல்ல வந்த ஒரு விஷயத்தை எண்ணி அவனே அரை நிமிஷம் சிரித்துவிட்டு, தொண்டையில் வார்த்தைகள் திக்க, அவன் தொடர்ந்தான்: "உங்களில் தாழ்ந்த மிருகங்கள் இருக்கின்றன. தொல்லை கொடுக்க மனிதர்களிடையே தாழ்ந்த ஜாதியினர் இருக்கிறார்கள், எங்களுக்குத் தொல்லை கொடுக்க" என்றான். இந்த வாக்கியம் அங்கிருந்தவர்கள் எல்லோருக்கும் எல்லையற்ற ஆனந்தம் தந்தது. எல்லோருமே உரக்கச் சிரித்தார்கள். மிஸ்டர் பில்கிங்டன் மீண்டும் ஒரு தரம் பன்றிகளைப் பாராட்டினான்; கீழ்த்தர மிருகங்களிடம் சரியானபடி

வேலை வாங்குவது பற்றியும், அவற்றுக்குப் போதிய உணவு தராமல் வைத்திருப்பது பற்றியும் பாராட்டினான். வேலை செய்பவர்களைச் செல்லப்பிள்ளைகளாக்கி விடக் கூடாது என்றான் அவன்.

இப்பொழுது கடைசியாக எல்லோரும் எழுந்து, கோப்பைகளில் மதுவை நிரப்பிக்கொண்டு ஒரு 'டோஸ்ட்' சாப்பிட வேண்டுமென்றான். "கனவான்களே!" என்றான் மிஸ்டர் பில்கிங்டன். "கனவான்களே– இது என் டோஸ்ட். மிருகங்கள் பண்ணை இன்னும் பணக்காரப் பண்ணையாகச் செழித்தோங்கட்டும்!"

குதூகலமாக எல்லோரும் கை தட்டினர்– கால் தட்டினர். பில்கிங்டன் கிண்ணத்துடன் தன் கிண்ணத்தை மோதிச் சப்தம் உண்டாக்கிவிட்டுத் தான் நெபோலியன் மதுவை அருந்தியது. கை தட்டல் ஒய்ந்த பிறகும் நெபோலியன் நின்று கொண்டிருந்தது. சில வார்த்தைகள் சொல்ல விரும்புவதாகச் சொல்லிவிட்டுத் தொடங்கியது அது.

நெபோலியனின் பிரசங்கங்கள் எல்லாமே ரத்தினச் சுருக்கமாகவும் விஷயத்தை விட்டு அந்தண்டை இந்தண்டை செல்லாதவையாகவும் தான் இருக்கும். ஒரு வரை ஒருவர் புரிந்து கொள்ளாத கட்டம் முடிந்து விட்டது பற்றித் தனக்குச் சந்தோஷமென்றது அது. யாரோ ஊர் பெயர் தெரியாத எதிரி கிளப்பிவிட்ட வதந்திகளால், தன் நோக்கங்களிலும் லக்ஷியங்களிலுமே புரட்சிகரமானதாகவும், தலை கீழாக எதையும் புரட்டிவிடுவதானதாகவும் ஏதோ இருப்பதாகப் பலரும் நம்பிவந்தார்கள். அண்டை அசலிலுள்ள பண்ணை மிருகங்களிடையே புரட்சியைக் கிளப்பிவிடத் தாங்கள் முயற்சி செய்வதாகக்கூட எதிரிகள் நம்பினார்கள் என்பது தனக்குத் தெரியும் என்றது நெபோலியன். உண்மைக்கு நேர் எதிர்மாறான பிரசாரம் இதெல்லாம். இன்றும் சரி, முன்பும் சரி–நெபோலியனுக்கும் அவன் சகாக்களுக்கும் உள்ள நோக்கம் ஒன்று தான். அண்டை அசலுடன் சமாதானமாக, சிநேகிதமாக, விஷயங்களில் நல்லுறவு பூண்டு வாழ வேண்டு மென்பது தான் அதன் நோக்கம். தன் நிர்வாகத்திலிருந்த பண்ணை ஒரு கூட்டு முயற்சி, பண்ணையின் சொந்தக்காரர்கள் அங்கிருந்த எல்லாப் பன்றிகளும் தான் என்றது நெபோலியன்.

பழைய சந்தேகங்கள் இப்போது மனிதர்களிடையே இல்லை என்பது தனக்குத் தெரியும் என்றது நெபோலியன். கொஞ்ச நஞ்சமிருந்த சில சில்லரைச் சந்தேகங்களையும் போக்கடிக்கக்கூடிய வகையிலே சில

மாறுதல்கள் பண்ணை நிர்வாகத்திலே செய்யப்பட்டிருந்தன. 'தோழர் நெபோலியன்' என்று இன்று வரை பண்ணை மிருகங்கள் எல்லாம் அதை அழைத்துவந்தன. இனி அவை அப்படி அழைக்கக்கூடாது என்று உத்தரவிடப்படும். இதைத் தவிர தோட்டத்துக் கொட்டகையில் சுவரில் மாட்டப்பட்டிருந்த ஒரு பன்றியின் தலையை வணங்கும் பழக்கம் காரணமில்லாமலே பல நாட்களாக இருந்து வந்திருக்கிறது. அதையும் நிறுத்திவிட ஏற்பாடாகி விட்டது. அந்தத் தலை அப்புறப்படுத் தப்பட்டுவிட்டது. வந்திருந்வர்கள் கொடி மரத்தில் கொடியைப் பார்த்திருப்பார்கள். அதில் ஒரு குளம்பும் கொம்பும் தீட்டப்பட்டிருந்தது. அதையும் அகற்றிவிட உத்தரவாகிவிட்டது. இனிமேல் ஒரு பச்சைத் துணிதான் கொடியாக இருக்கும்.

ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் பில்கிங்டன் செய்த பிரசங்கத்தில் திருத்தம் செய்ய வேண்டியது அவசியமாகிறது என்றது நெபோலியன். மிருகங்கள் பண்ணை என்றே அவர் பிரசங்கம் பூராவிலும் அவர் இதைக் குறிப்பிட்டார். அவருக்கு அது தெரிய நியாயமில்லை– ஏனென்றால் இப்போது தானே முதல் முதலாகத் தன் மனத்திலிருப்பதை வெளியிடுகிறது–மிருகங்கள் பண்ணை என்கிற பெயரையும் ஒழித்துக் கட்டியாகிவிட்டது. இனிமேல் இந்தப் பண்ணையை பழைய பெயரையே இட்டு அழைக்கலாம். 'மேனர் பண்ணை' அதாவது பெரிய பண்ணை என்பது தான் அதனுடைய பழைய, சரியான பெயர் என்றது நெபோலியன்.

"கனவான்களே" என்று முடிவுக்கு வந்தது நெபோலியன். "முந்திய 'டோஸ்டை'யே நானும் உங்களுக்குச் சொல்கிறேன். ஆனால் அதன் உரிய பெயரைக் குறிப்பிடுகிறேன். மேனர் பண்ணையின் சுபிக்ஷத்துக்கு என்னுடன் நீங்களும் குடியுங்கள்!"

முன் போலவே கை தட்டலும் கால் தட்டலும் பலமாக இருந்தது. மதுக்கிண்ணங்கள் காலியாயின. வெளியே நின்று உள்ளே பார்த்துக் கொண்டிருந்த மிருகங்கள் கண்களில் விசித்திரமான ஒரு காட்சி தென்பட்டுக் கொண்டிருந்தது. இந்தப் பன்றிகளின் முகங்கள் ஏன் இப்படி மாறுதலடைகின்றன? ஒவ்வொரு பன்றியின் முகமாகக் கவனித்தது க்ளோவர். சில பன்றிகளின் மோவாய்க் கட்டையில் ஐந்து மடிப்புகள் இருந்தன; சிலவற்றிற்கு நாலு மடிப்புகள் இருந்தன; சிலவற்றிற்கு மூன்றிருந்தன. இதெல்லாம் இப்படி ஏன் உருகி என்னவோ போல உருமாறுகின்றன? தன் கிழட்டுக் கண்கள் தான் தன்னை ஏமாற்றுகிறதோ?

ஆரவாரம் எல்லாம் அடங்கியதும் மனிதர்களும் பன்றிகளும் சீட்டுகளை மீண்டும் எடுத்துக் கொண்டன. இடையில் நிறுத்தியிருந்த ஆட்டத்தைத் தொடர்ந்தன. வெளியே இருந்துபார்த்துக் கொண்டிருந்த மிருகங்கள் சந்தடி செய்யாமல் நகர்ந்தன.

ஆனால் அவை இருபது கஜம் போவதற்குள் உள்ளேயிருந்து பிரமாதமான சண்டையும் கூச்சலும் கேட்கவே பிரமித்து நின்றன. ஓடிப்போய் ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்தன. ஆம், உள்ளே பிரமாதமான ஒரு சண்டை நடந்து கொண்டிருந்தது. ஒருவரை ஒருவர் பார்த்து உரக்கக் கத்திக் கொண்டிருந்தார்கள். மேஜை மேல் அடித்தே பேசினார்கள் ஒவ்வொருவரும். சந்தேகத்துடன், ஒருவரை ஒருவர் கொன்றுவிட விரும்புகிறவர்கள் போலப் பார்த்துக் கொண்டார்கள். சண்டைக்கு ஆதாரம் இதுதான்– நெபோலியனும் மிஸ்டர் பில்கிங்டனும் ஒரே சமயத்தில் தங்கள் கையிலிருந்து ஆளுக்கொரு இஸ்பேட் ஏஸை இறங்கியிருந்தார்கள். ஒரே கட்டில் இரண்டு இஸ்பேட் ஏஸ்களா?

பன்னிரண்டு குரல்கள் கோபமாகக் கூச்சலிட்டன. பன்னிரண்டு குரல்களுமே ஒரே மாதிரித்தான் இருந்தன. இப்போது பன்றிகளின் முகங்கள் எப்படி மாறியிருந்தன என்பது பற்றிச் சந்தேகத்துக்குச் சிறிதும் இடமேயில்லை. பன்றியிலிருந்து மனிதனை, மனிதனிலிருந்து பன்றியை மாறி மாறிப் பார்த்தன ஜன்னலுக்கு வெளியே நின்ற மிருகங்கள். எது பன்றி, எது மனிதன் என்று பிரித்துச் சொல்ல முடியாதபடி இரு இனத்து முகங்களும் ஒன்றாகிக் கொண்டிருந்தன. ●



"இந்நூல் வெளிவந்த சில வருடங்களிலேயே பத்து இலட்சம் பிரதிகளுக்கும் மேலாக விற்பனையானது. சற்றேறக்குறைய முப்பது மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. நூலாசிரியரான ஜார்ஜ்ஆர்வெல் அவர்களை ஒரு தலைமுறையின் மனசாட்சி எனலாம். அந்த மனசாட்சியின் வேகமே இப்படைப்பின் அடிப்படை. எல்லா விதங்களிலும் நித்தியமாகவும். நிரந்தரமாகவும் இருக்கக்கூடிய ஒரு தத்துவத்தையே ஆசிரியர் இந் நாவலில் சித்தரித்துள்ளார்.

நாவலில் வரும் கதாபாத்திரங்களை எவரும் எளிதில் மறந்துவிட முடியாது.

கலையையும், அழகையும் காணும் இடத்தில் அனுபவிக்க வேண்டியதுதானே வாசகர்களான நம் பொறுப்பு!"

– க. நா. சு

(1956 – ல்)



அம்ருதா

ரூ: 75